# தமிழ்நாட்டில் கணபதி வழிபாடு

# GANAPATHI CULT IN TAMILNADU

Major Research Project Supported by
University Grants Commission, New Delhi 1992-'94





ஆய்வாளர்
டாக்டர். ந.கல்யாணசுந்தரம் M.A., B.T., Ph.D.
திருச்செந்தூர் - 628 215.

# தமிழ்நாட்டில் கணபதி வழிபாடு

# Ganapati Cult in Tamilnadu



**Major Research Project**
**Supported By**
**University Grants Commission**
**1992 - 1994**




ஆய்வாளர்

**முனைவர் ந. கல்யாண சுந்தரம்**
M.A., B.T., Ph.D.,
முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர்
ஆதித்தனார் கல்லூரி
திருச்செந்தூர்

மெய்யப்பன் அறக்கட்டளை

வெளியீடு

**திருக்குமரன் பதிப்பகம்**
66, சபாபதிபுரம் தெரு,
திருச்செந்தூர் 628 215.

1. நூற் பெயர் : தமிழ் நாட்டில் கணபதி வழிபாடு
தோற்றமும் வளர்ச்சியும் (ஆய்வு)

2. ஆசிரியர் : பேராசிரியர் டாக்டர் ந. கல்யாணசுந்தரம்
முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர்.
ஆதித்தனார் கல்லூரி, திருச்செந்தூர்.

3. மொழி : தமிழ்

4. பதிப்பு : முதல்

5. வெளியிட்ட நாள் : செப்டம்பர், 1994

6. உரிமை : ஆசிரியர்

7. அச்செழுத்தளவு : 10.12.8

8. பக்கங்கள் : 160 + 32 = 192

9. விலை : ரூ. 40.- (நாற்பது ரூபாய்)

10. வெளியீடு : திருக்குமரன் பதிப்பகம்
66, சபாபதிபுரம் தெரு,
திருச்செந்தூர் - 628 215
(தொலைபேசி எண். 4723)

11. ஆய்வின் பெயர் : பெருந்திட்ட ஆய்வு (Major Research Project)
நிதி உதவி : பல்கலைக் கழக மானியக்குழு
Supported by University Grants Commission

12. ஆய்வு நிகழ்த்திய காலம் : மார்ச்சு 1992 - மார்ச்சு 1994.

# முன்னுரை

3-2

தமிழ்ப் பேராசிரியப்பணி புரிந்து ஓய்வுபெற்ற எனக்கு இரண்டாண்டுகள் பெருந்திட்ட ஆய்வு நிகழ்த்த வாய்ப்பளித்த பல்கலைக் கழக மானியக் குழுவினர்க்கு (University Grants Commission) முதற்கண் என் நன்றி. இதற்கென ரூபா 73,300,- செலவிட அனுமதி தந்தனர். 16-03-1992 அன்று தொடங்கி 01-03-1994 அன்று ஆய்வு நிறைவுற்றது.

தமிழ் நாட்டிலே தமிழ்த் துறையில் இக்கால கட்டத்தில் இவ்வாய்ப்புப் பெறும் தனிச் சிறப்பிற்கு வழி வகுத்த திருச்செந்தூர் ஆதித்தனார் கல்லூரியின் முன்னாள் முதல்வர் முனைவர் இரா. கனக சபாபதி அவர்கட்கும், ஆய்வு நிகழ்த்த இடமளித்து அனுமதி வழங்கிய மதுரை காமராசர் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைக்கும் நன்றி.

கன்னியாகுமரி தொடங்கி சென்னை வரையிலுள்ள புகழ்பெற்ற கோயில்களில் பெரும்பாலானவற்றைக் காணச் சென்ற போது அவ்வக்கோயிலின் சிறப்பினை விளக்கிய சிவாசாரியார்கட்கும் வருகைச் சான்று வழங்கிய இந்து அறநிலையத் துறையைச் சார்ந்த இணை, துணை ஆணையாளர்கள், செயல் அலுவலர்கள் ஆகியோருக்கும் நன்றி.

கணபதியைப் பற்றிய இவ்வாய்வில் எடுத்துக்காட்டிற்காக ஒன்று அல்லது இரண்டு இடங்களைச் சுட்டியுள்ளேன். உருவ அமைப்பு, கதை அமைப்பு போன்றவை பிற இடங்களிலும் காணப்படலாம். அத்தனையையும் தொகுப்பது அரிதென்பதால் படித்தும் கேட்டும் கண்டுமறிந்தவற்றை மட்டுமே தொகுத்தளித்துள்ளேன்.

இவ்வாய்வின் போது கள ஆய்வில் சில வியத்தகு நிகழ்ச்சிகள் நடந்தன. திருவண்ணாமலை அ.மி அண்ணாமலையார் கோயிலின் செயல் அலுவலர் நான் அங்குச் சென்ற அன்று ஊரிலில்லை. வருகைச் சான்று வழங்க கண்காணிப்பாளர் மறுத்துவிட்டார். அங்குப் புத்தகக் கடையிலிருந்த அக்கோயில் தலைமைச் சிவாசாரியாரிடம் வருகைச் சான்று பெற்றேன். அவரது பெயர் இராச கணபதி! - சேலம் தேரடிக் கணபதி பெயர்.

கதைப் பகுதியில் 'பனிகொண்டுவந்த தெய்வம்' 'மழை கொண்டு வந்த தெய்வம்' போன்றவற்றை எழுதி முடித்ததும் இப்படியும் நடக்குமா? கணபதியின் அருளிருந்தால் நாளை மழை பொழியட்டும் பார்க்கலாம் என்று எண்ணியவாறு தூங்கச் சென்றேன். அப்போது சென்னை தி. நகரில் என் மகன் வீட்டிலிருந்தேன். மறு நாள் (16-05-1993) காலை 8 மணிக்குத் திடீரென மழை கொட்டியது. காற்று மரங்களைச் சாய்த்தது. அன்றிரவு தொலைக்காட்சியில்

‘சென்னையில் திடீர் மழை’ எனச் சில காட்சிகளைக் காட்டினர்!

01-06-1993 அன்று திருப்பதி செல்ல நண்பர் சுற்றுலா ஏற்பாடு செய்தார். கணபதி ஆய்வினை நன்கு முடித்துத்தர ஏழுமலையானுக்குக் காணிக்கை முடிந்து வைத்தேன். என்ன காரணத்தாலோ நண்பர் சுற்றுலாவை இரத்துச் செய்துவிட்டார். காணிக்கை பெருந்தொகையாக இருந்ததால் எடுத்துச் செலவிட எண்ணியது மனம். ஏழுமலையான் அருளைச் சோதிக்க எண்ணினேன். 01-08-1993 அன்று என் ஆய்வுத் திறனை மதிப்பிட திருப்பதிக்கு வருமாறு பல்கலைக்கழக மானியக் குழுவிடமிருந்து தந்தி வந்தது! 13-08-1993 அன்று இவ்வாய்வினை மதிப்பிட்ட நிபுணர் குழுவினர் ‘This is a very good contribution in the field of research' என்று சான்று வழங்கினர். ஏழுமலையானும் தன் காணிக்கையைப் பெற்றுக் கொண்டார்.

மதுரை காமராசர் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைப் பேராசிரியர்கள் பலரும் உதவினர். குறிப்பாக முனைவர் தி. முருக ரத்தனம், முனைவர் தே.ஆண்டியப்ப பிள்ளை, நுண்கலைத் துறைப் பேராசிரியர் முனைவர் ஆர். வெங்கட்ராமன் ஆகியோர் கணபதி பற்றிய நூல்கள் தந்து உதவினர். அவர்கட்கும் என் நன்றி.

ஆய்வில் இணைக்கப்பட்டுள்ள நிழற்படங்களைத் தெளிவான ஓவியங்களாக வரைந்து உதவிய முக்காணியில் வாழும் குலசேகரன் பட்டினத்து ஓவியர் அரிதேவிதாசன் என்னும் அ. வீரவாகு அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றி.

இவ்வாய்வேட்டின் தட்டச்சுப்படிகளைத் திருத்தி உதவிய என் துணைவி திருமதி மு. செகதாம்பாள், எம்.ஏ.,பி.எட்., மற்றும் பணம் பெற உதவிய பல்கலைக் கழகத்துணைவேந்தர், பதிவாளர், டீன், ஊழியர் அனைவருக்கும் என் நன்றி.

செந்திலாண்டவன் பற்றிய என் முனைவர்பட்டத்திற்கான ஆய்வு இவ்வாய்வினை நிகழ்த்த மிகவும் துணை நின்றது.

*09-09-1994* *ந. கல்யாண சுந்தரம்*

## இந்நூலில் குறிப்பிட்டுள்ள கணபதியின் வேறு பெயர்கள்

3-2

1. விக்கினேசுவரர்
2. விநாயகர்
3. பிள்ளையார்
4. கணேசர்
5. விகடராசர்
6. குள்ளன்
7. குண்டு வயிற்றன்
8. வெள்ளைக் கொம்பன்
9. முக்கண்ணனார் மகன்
10. ஈசுவரன் மகன்
11. கஜானனன்
12. மூத்த பிள்ளையார்
13. தந்தி முகன்
14. அத்தி முகன்

## பெண்பாற் பெயர்கள்

1. கணேசானி
2. விநாயகி.வைநாயகி
3. விக்கினேசுவரி
4. கணேசுவரி

## இவ்வறிக்கையில் பயன் படுத்தியுள்ள சுருக்க வடிவின் விரிவு

*பொது:*

அ.நூ - அதே நூல். முன்குறிப்பிட்ட நூல்

ப - பக்கம்; பக் - பக்கங்கள்

ப.ஆ - பதிப்பாசிரியர்

நி.ப. எண் - நிழற்பட எண்.

வ.ப. எண் - வரைபட எண்.

மு.ப. - முதற்பதிப்பு; இ.ப. - இரண்டாம் பதிப்பு

*சிறப்பு:*

1. தெ.பொ.மீ. - தெ.பொ. மீனாட்சி சுந்தரனார்.
2. அடைப்புக் குறிக்குள் குறிப்பிட்டுள்ள மாவட்டங்களின் பெயர்ச் சுருக்க விரிவு:

| | | |
|---|---|---|
| குமரி | - | கன்னியாகுமரி மாவட்டம் |
| நெல்லை | - | திருநெல்வேலி மாவட்டம் |
| வ.உ.சி. | - | வ.உ. சிதம்பரனார் மாவட்டம் |
| பசும்பொன் | - | பசும்பொன் தேவர் திருமகன் மாவட்டம் |
| திருச்சி | - | திருச்சிராப்பள்ளி மாவட்டம் |
| நாகை | - | நாகப்பட்டினம் காயிதேமில்லத் மாவட்டம் |
| தஞ்சை | - | தஞ்சாவூர் மாவட்டம் |
| கோவை | - | கோயம்புத்தூர் மாவட்டம் |
| வ.ஆ. | - | வட ஆற்காடு மாவட்டம் |
| தெ.ஆ. | - | தென் ஆற்காடு மாவட்டம் |
| தி.ச. | - | திருவண்ணாமலை சம்புவராயர் மாவட்டம் |
| செங்கை | - | செங்கற்பட்டு எம்.ஜி.ஆர். மாவட்டம் |
| காமராசர் | - | காமராசர் மாவட்டம் |

3. **மருத்துவ நூல்கள்:**

மூ.ம.ப. - மூலிகை மர்மம் பக்கம்

பொ.ப.ப. - பொருட் பண்பு நூல் பக்கம்

ப.கு.வி. - பதார்த்த குண விளக்கம்

4. **கோயில் பெயருக்கு முன்**

அ.மி. - அருள்மிகு

# பொருளடக்கம்

இயல் – 1

# கணபதி வழிபாட்டின் தோற்றம்

தமிழ் நாட்டில் கணபதி வழிபாடு எக்காலத்தில் எவ்வாறு தொடங்கியது என்பதை ஆராய்வதே இவ்வியலின் நோக்கம்.

## *தோற்றம்: ஆரியக்கடவுள்?*

கணபதியின் தோற்றம் வேத காலத்திலே உண்டு என்பர். இருக்கு எனப்படும். வேதத்தில் கணபதி என்ற சொல் இந்திரனைக் குறித்து இரு இடங் களில் வருகிறது. மைத்திராயணி சமிதை என்ற வேதத்திற்குப் பிந்திய நூலில் அத்திமுகன், தந்தி என்ற குறிப்பு உள்ளது. யாக்ஞவல்யசுமிருதி இவரைச் சிவகணங்களின் தலைவன் என்றும் அம்பிகையின் புதல்வன் என்றும் கூறுகிறது. ஆனால் கணபதி வேள்விகளைச் சிதைத்து இடையூறுகளை உருவாக்கும் கொடிய சக்தியாக விளங்கினார் என்கிறது மானவகிரிய சூத்திரம். விக்கினம் செய்வதால் விக்கினேசுவரன் எனப்பட்டார்.[1]

## *திராவிடர் கடவுள்?*

அறிஞர் பெருமக்கள் பலர் கணபதி திராவிடர் கடவுளே என்பர். இந்திய நாட்டில் சூரிய வழிபாடாற்றிய பெரும்பான்மையான மக்கள் கணபதியை வழிபட்டனர். அவரது வாகனமாகிய எலி இருளாகவும், அதன் மீதமர்ந்து இருளை ஓட்டும் கணபதி சூரியனாகவும் உருவாக்கப்பட்டனர்.[2] இக்கருத்தினை ஈராசு பாதிரியாரும் எடுத்தாளுகிறார்.[3] சிந்துவெளியில் விலங்கும் மனிதனும் கலந்த கலப்பு உருவமுள்ள தொல் பொருட்கள் கிடைத்துள்ளன. யானை முகமும் மனிதவுடலும் கொண்ட சக்தியின் வடிவமாகச் சிந்து மக்கள் இவரை ஏற்றிருக்கலாம் என்கிறார் முனைவர் பெ. சுயம்பு.[4]

## *மங்கலத் தெய்வமாக மாறுதல்*

வேள்விக்கு இடையூறு செய்யும் தெய்வம் என்ற கருத்துஆரிய திராவிடப் பண்பாடுகளின் மோதலினால் உருவானது. நாளடைவில் இருசாராரும் ஒருவர் பண்பாட்டுக் கூற்றினை மற்றவர் ஏற்று உறவாடும்போது தீய சக்தி என்ற நிலை மாறி மங்கலத்தெய்வமாக ஆரியரும் ஏற்றனர்.[5] வேதகாலப் பிரமனின் இடத்தைப் பிள்ளையார் பெற்றார். கேதுவுக்கு அதிபதி பிரமன் என்றிருந்தது கணபதி என மாறியது.

*விலங்கு வழிபாடு அடிப்படையா?*

குறிஞ்சி நிலத்தில் தமிழன் யானையைக் கண்டு அஞ்சி வழிபட்ட அன்றே கணபதி வழிபாடு தமிழகத்தில் தோன்றிவிட்டதென்பர். [6] தமிழ்க்கடவுளாகிய முருகன் தமிழ்ப்பெண் வள்ளியை மணமுடிக்க யானையின் உதவியையே நாடினான். கி.பி. 1987 இல் கோவையில் 108 யானைகளை 108 கணபதிகளாகக் கருதி வழிபட்டனர். விலங்கு வழிபாடு அடிப்படை என்ற கருத்தை அலிசு கெட்டியும் கூறியுள்ளார்.[7] ஈராசு பாதிரியும் விலங்கு வழிபாடே அடிப்படை என்கிறார். [8] பெரிய கோயில்களின் முன்யானையை நிறுத்துவது போலக் கணபதியைக் காவல் தெய்வமாகக்கோயில் முன் அமர்த்தியுள்ளனர். [9]

*சங்ககாலம்*

புறநானூறு 106 ஆம் பாடலில் 'எருக்கம் பூவாயினும் ஒருவ்னுடையன-வற்றைத் தெய்வங்கள் விரும்பேம் என்னா. எனக்கூறப்பட்டுள்ளது. எருக்கம்பூவை இட்டு வழிபடப் பெறும் கடவுள் விநாயகராக விளங்குவதால் கணபதி வழிபாடு சங்க காலத்திலேயே இருந்தது எனக் கருதலாம். [10] என்பர்.

*சங்கம் மருவிய காலம்*

மணிமேகலைக் காப்பியத்தில் 'காகங் கவிழ்த்த காவிரிப் பாவை' என்ற அடிகாணப்படுகிறது. இதிலடங்கிய வரலாறு விநாயகர், காக வடிவங்கொண்டு கமண்டலத்தைக் கவிழ்த்ததேயன்றி வேறெதனைக் கூற இயலும்? என்கிறார் ச. தண்டபாணிதேசிகர். [11]

சிலப்பதிகாரக் காப்பியத்தில் கூறப்படும் சதுக்கப்பூத வழிபாட்டிலிருந்தே கணபதி வழிபாடு தோன்றிய தென்பர் முனைவர் நா. சுப்பிரமணியம். விநாயகர் - சதுக்கப் பூத ஒற்றுமையைச் சுட்டுவார்.

| | கணபதி | சதுக்கப்பூதம் |
|---|---|---|
| 1. | நாற்சந்தி கூடுமிடத்தில் உள்ளார். | பூதமும் அப்படியே |
| 2. | தீய ஆற்றல்களை அழிப்பார். | தீயவரைப்புடைத் துண்ணும் |
| 3. | இடக்கையில் பாசம் உள்ளது. | பாசக் கயிற்றால் தீயவரைப் பற்றும் |
| 4. | குறுகிய கால்கள்;பெருவயிறு | குறுந்தாள் பூதத்திற்கும் அப்படியே |

*மறுப்பு*

மேற்கூறிய கருத்துக்களைத் தவறு என மறுக்கிறார் பேராசிரியர் ஆர்.வீரபத்திரன். பூதங்கள் பற்றிச் சங்க இலக்கியங்கள் பேசினும் அதா

தோற்றம். அமைப்பு பற்றிய வருணனைகள் கலிங்கத்துப்பரணி போன்ற கி.பி. 12 ஆம் நூற்றாண்டு நூல்களிலே காணப்படுகின்றன. பூதத்தார் கோயில்களில் பூதத்தார் சந்நிதியுடன் கணபதி சந்நிதியும் காணப்படுவதால் பூதவழிபாடு வேறு; விநாயகர் வழிபாடு வேறு என்கிறார்.[13]

## கணபதியும் புத்தரும்

புத்தர் அரசமரத்தடியில் அமர்ந்திருத்தல் போலக் கணபதியும் அரசமரத்தடியில் அமர்ந்துள்ளார். கணபதிக்கு யானைமுகம். புத்தசாதகக் கதைகள் புத்தரும் யானையாகப் பிறப்பெடுத்தார் என்னும். புத்தருக்கும் விநாயகர் என்ற பெயருண்டு. இருவரும் பதுமாசனத்தில் அமர்ந்து காட்சி தருகின்றனர். புத்த கணபதி சிலை வடநாட்டில் உள்ளது.

நாட்டுப்பாடல் ஆய்வாளர் திரு. நா. வானமாமலை கணபதி வழிபாடு புத்த சமயத்தினின்றும் வந்திருத்தல் வேண்டும் எனக்கருதுகிறார். புத்த சமயம் அழிவுற்ற போது அவர்கள் வணங்கிய சிறு தெய்வங்கள் இந்து சமயத்தோடு ஒன்றிவிட்டன என்கிறார்.[14] கும்பகோணத்தில் நாகேசுவர சுவாமி திருமஞ்சன வீதியிலுள்ள கணபதி கோயிலில் பகவரிஷி என்னும் பெயருள்ள புத்தர் உருவம் காணப்படுகிறது. புத்தர் கோயில்களே பிற்காலத்தில் கணபதி கோயில்களாக மாறியிருத்தல் வேண்டும் என்கிறார் மயிலை சீனி. வேங்கடசாமி.[15]

*மறுப்பு*

இக்கருத்தையும் ஆர். வீரபத்திரன் மறுக்கிறார். அவர் கூறும் காரணங்கள்: 1 விநாயகர் என்ற பெயர் ஏனைய கடவுளர்க்கும் பொருந்தும். சிவனுக்குரிய ஆயிரம் பெயர்களுள் கணபதி என்பதும் ஒன்றாகும். 2. விநாயகர் பாசம் அங்குசம் முதலிய படைக்கலங்களைக் கொண்டு விளங்குகிறார். புத்தரே ...ந்த சொருபி 3. இருவர் உருவங்கட்கும் வேறுபாடு மிகுதி. கணபதி தம் ...தவி வல்லபையை இடக்கையால் அணைத்துக்கொண்டிருக்கிறார். புத்தரின் ...வக் கோலத்திற்கு இது முற்றிலும் மாறுபட்டது.[16]

## சிவனும் கணபதியும்

சைவர்கள் தங்கள் தெய்வங்களோடு கணபதியை இணைத்துக் ...காண்டனர். சிவனுக்கும் கணபதிக்கும் ஒற்றுமை கற்பித்தனர்.

*சடைமுடி*

சிவன் கற்றைச் சடைமுடியுடையவர். அதே போலக் கணபதியும் சடைமுடியுடையவர். காட்டாகப் பிள்ளையார் பட்டிக் கற்பக விநாயகர் சடைமுடியுடன் திகழ்தலைக் கூறலாம்.

*முக்கண் உடைமை:*

சிவனைப் போலவே உச்சிட்ட கணபதி, இலட்சுமிகணபதி வகைகளில் கணபதி முக்கண்களுடன் காணப்படுகிறார்.

*ஐம்முகம்*

சிவனுக்கு ஐந்து முகங்கள். சிங்கவாகனத்தைக் கொண்ட ஏரம்ப விநாயகருக்கும் ஐந்து முகங்கள். அம்மையின் சிங்கவாகனம் கணபதிக்குப் பெறப்பட்டது என்பர்.

*காளைவாகனம்*

சிவனுக்கு வாகனமாக நந்தி யுண்டு. கணபதிக்கும் சுசீந்திரம். சீவில்லிபுத்தூர் மடவார் வளாகம். இராசபாளையம் முதலிய இடங்களிலுள்ள (கோயில் பெயர்கள் இரண்டாம் இயலில் உள்ளன) விநாயகர் கோயில்களில் நந்தி வாகன முண்டு.

*நடனம்*

நடராசரைப் போலவே கணபதியும் நடனமாடுகிற கோலத்தில் விளங்குகிறார். மதுரையில் அவர் கால்மாறி யாடுவது போலக் கணபதியும் ஆயிரக்கால் மண்டபத்தில் கால்மாறி ஆடுகிறார்.

*நிர்வாணக் கோலம்:*

சிவனுக்குப் பிச்சாடனர் கோலம் உண்டு. கணபதிக்கும் அக்கோலமுண்டு. பாம்பு அணியும், மண்டைஓட்டு மாலைகளு முண்டு. [17]

*சுயம்புவடிவங்கள்*

சுயம்புலிங்கங்கள் காணப்படுதல் போலக் கணபதிக்கும் சுயம்பு மூர்த்திகள் உண்டு. காட்டாக, மருதமலை தான்தோன்றிக் கணபதி, திருநாரையூர் மற்றும் திருநெல்வேலி பொல்லாப்பிள்ளையார்களும் சுயம்புகளே.

சிவனது வழிபாட்டிற்கு இணையாகக் கணபதி வழிபாடும் இந்தியா முழுவதும் பரவியுள்ளது. [18]

## கண்ணனும் கணபதியும்

| கணபதி | | கண்ணன் |
|---|---|---|
| 1. மனித உடல்; யானைத் தலை | - | மனித உடல்; சிங்கத்தின் தலை (நரசிம்ம அவதாரம்) |
| 2. இலட்சுமி கணபதி கையில் சங்கு சக்கரம் தரித்துள்ளார் | - | கண்ணனும் இலட்சுமியை (மார்பில்) கொண்டுள்ளார் |
| 3. கணேச கீதையை உபதேசித்தார் | - | பகவத் கீதையை உபதேசித்தார் |
| 4. தவழும் கணபதி உருவமுள்ளது (நி.ப.எண்.1) | - | தவழும் கண்ணன் உருவம் உள்ளது (நி.ப.எண்.2) |
| 5. கையில் வெண்ணெய் ஏந்தியதால் நவநீத கணபதி என்ற பெயருண்டு.[19] (திருவல்லிக் கேணியில் உள்ளார்) | - | கையில் வெண்ணெய் ஏந்தியதால் நவநீத கிருட்டினன் என்ற பெயருண்டு |
| 6. பல அரக்கர்களை வென்றார் (விநாயகபுராணம் காண்க.) | - | கம்சன் ஏவிய அரக்கர் பலரை வென்றார் |
| 7. பேரூர்த்தேரில் முன்புறம் உச்சிட்டகணபதி காவல் | - | அத்தேரின் பின்புறம் இலட்சுமி நரசிம்மர் காவல் |
| 8. உகரக்குறி காத்தல் தொழிலைக் குறிக்கும் | - | விஷ்ணுவும் காத்தல் தொழிலுடையவர் |

பிரம வைவர்த்த புராணத்தில் விநாயகர் கிருஷ்ணரின் அவதாரம் என்றுள்ளது.[20]

### *கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு:*

கி.பி. ஐந்தாம் நூற்றாண்டிலேயே கணபதி வழிபாடு தமிழ்நாட்டில் பரவத் தொடங்கிவிட்ட தென்பார் முனைவர் ஏ.வி. செயச்சந்திரன்.[21] முற்காலப் பாண்டியர்கள் பல்லவர்கள் குகைக் கோயில்கள் அமைக்குமுன்பே குடவரைக்கோயில்கள் அமைத்தனர்.[22] பிள்ளையார் பட்டிப் பிள்ளையாரே தமிழ்நாட்டின் மூத்த பிள்ளையாராக இருத்தல் வேண்டும் எனக்கருதுகிறார். அங்குப் பிராமி எழுத்தில் காணப்படும் கல்வெட்டே அதற்குச் சான்றாய் அமையும் என்கிறார். "Earlier icons of Ganesa were two armed, unornamented; they carried no weapons and were not accompanied by consorts" என்கிறது கணேச கோசா என்னும் நூல்.[23] இப்பண்புகள் அனைத்தும் பிள்ளையார்பட்டிப்

பிள்ளையாரிடம் உள்ளன. அவை வருமாறு:

1. இரண்டு கைகள் உடைமை
2. பூணூல் அணியாமை
3. துதிக்கை வலப்புறமாக வளைந்திருத்தல்
4. இடக்கை கொழுக்கட்டையை ஏந்தாமல் தொடையில் அமர்ந்திருத்தல்.
5. வலக்கையில் தந்தமில்லை. சிவலிங்கம் கொண்டுள்ளார்.
6. பாசம், அங்குசம் இன்மை
7. கால்கள் மடிந்திருக்க அமர்ந்திருத்தல்
8. வலக் கொம்பு முறிபடவில்லை மாறாக, இடக்கொம்பு குறுகியுள்ளது.

இக்காரணங்களால் பிள்ளையார் வணக்கம் தமிழ் நாட்டில் தோன்றிய ஆதி நாளிலேயே இம் மூர்த்தம் அமைக்கப்பட்டிருத்தல் வேண்டும் என்ற உண்மையை உணரலாம் என்கிறார் சா. கணேசன்.[24] இதே கருத்தினை எஸ். இலட்சுமணனும் ஒப்புக் கொள்கிறார்.[25]

### *மகேந்திரவர்மன் காலம்: (கி.பி. 600 - 630)*

அப்பருடைய தேவாரத்தில்தான் கணபதி பற்றிய முதற்குறிப்பு காணப்படுகிறது. அப்பரடிகள் சமணசமயம் விட்டு சைவத்துக்கு மாறியவுடன் மகேந்திரவர்ம பல்லவன் அவருக்குப்பல தீமைகள் இழைத்தான். அத்தீமைகளுள் யானையை விட்டு மிதிக்க ஏவியதும் ஒன்று. அப்போது அப்பர் 'சுண்ணவெண் சந்தனச் சாந்தும்' என்ற பதிகம் பாடினார். அதில்,

"பல பல காமத்த ராகப் பதைத்தெழு வார்மனத் துள்ளே
கலமலக் கிட்டுத் திரியுங் கணபதி யென்னுங் களிறும்
வலமேந் திரண்டு சுடரும் வான்கயி லாய மலையும்
நலமார் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன் றுமில்லை அஞ்ச வருவது மில்லை."[26]

எனக் குறித்துள்ளார்.

மகேந்திரனின் மகனான நரசிம்ம பல்லவனின் வாதாபிப் படையெடுப்பிற்கு முன்னமேயே அப்பர் கணபதியைக் குறித்துள்ளமையை நோக்கக் கணபதி வழிபாடு இங்குத் தோன்றியதாகவே இருக்கலாம் எனக் குறித்துள்ளார்.

மகேந்திரனின் மகனான நரசிம்ம பல்லவனின் வாதாபிப் படையெடுப்பிற்கு முன்னமேயே அப்பர் கணபதியைக் குறித்துள்ளமையை நோக்கக் கணபதி வழிபாடு இங்குத் தோன்றியதாகவே இருக்கலாம் எனத் தோன்றுகிறது.[27]

வல்லம் என்னுமிடத்தில் துவார பாலகர், சிவன் ஆகியோர் உருவச் சிலைகளுடன் விநாயகர் உருவமும் காணப்படுகிறது. அதன் கீழுள்ள

கல்வெட்டு மகேந்திரன் காலத்தது என்பதைக் காண்கிறோம். நரசிம்மவர்ம பல்லவன் காலத்திற்கு முன்னமே இங்கு விநாயகர் வழிபாடு இருந்தது என்பதை இதுவும் வலியுறுத்தும்.[28]

## முதலாம் நரசிம்மவர்மன் (கி.பி. 630 - 638)

பரஞ்சோதி முனிவர் வாதாபியிலிருந்து கணபதி சிலையைக் கொண்டு வந்த பின்னரே தமிழ் நாட்டில் வழிபாடு தொடங்கியது என அறிஞர் மத்தியில் பரவலான கருத்து நிலவுகிறது. இதற்குக் காரணமாக விளங்குவது முத்துசாமி தீட்சிதரின் (கி.பி. 18,19) 'வாதாபி கணபதிம் பஜேம்' எனத் தொடங்கும் பாடல். இதிலுள்ள வாதாபிகணபதி என்னும் தொடரே இக்குழப்பத்திற்குக் காரணம்.[29] தமிழ் நூல்களிலும் கல்வெட்டுக்களிலும் கி.பி. ஏழாம் நூற்றாண்டிற்கு மேல் ஏறிப் பார்க்க இயலா வண்ணம் இருப்பதால் ஏழாம் நூற்றாண்டில் நரசிம்மவர்ம பல்லவரோடு சேனைத் தலைவராகச் சென்று வாதாபிப் போரில் புலிகேசியை வென்றுவந்த சிறுத்தொண்டராலேயே கணபதி தமிழ் நாட்டில் நிறுவப் பெற்றார் என்ற முடிவு ஏற்படுவதாயிற்று.[30]

பரஞ்சோதி (சிறுத்தொண்டர்) கொண்டு வந்த பின் கணபதி வழிபாடு தோன்றியிருந்தால் அதைச் சேக்கிழார் திருத்தொண்டர் புராணத்துள் குறித்திருப்பார்.

"பன்மணியும் நிதிக்குவையும் பகட்டினமும் பரித்தொகையும் இன்னன எண்ணில கவர்ந்தே இகலரசன் முன்கொணர்ந்தார்."[31]

என்ற திருத்தொண்டர்புராணச் செய்யுளில் கணபதி சிலை குறிக்கப்படவில்லை. மேலும் திருச்செங்காட்டங்குடிக்குப் போகுமுன்பே பாடியதாகக் கூறப்படும் ஞானசம்பந்தர் தேவாரத்தில் கணபதியின் வரலாறு காணப்படுகிறது.[32]

"பசும்பொன் மாவட்டம் பிள்ளையார்பட்டிக் குடைவரைக் கோயிலிலுள்ள கணபதி சிற்பம் மற்றும் வேலஞ்சேரி, உத்திரமேரூர்ஆகிய இடங்களிலுள்ள புடைப்புச் சிற்பங்களிலிருந்து கணபதி வழிபாடு கி.பி. ஐந்து அல்லது ஆறாம் நூற்றாண்டிலேயே தொடங்கிவிட்டது எனக் கருதலாம்."[33]

ஓர் ஊரிலுள்ள தெய்வத்தின் பெயரை வேறு ஊர்களில் புதிதாகத் தாபிக்கப்பட்ட தெய்வங்களுக்குச் சார்த்தி வழிபடுதல் தமிழ்நாட்டிற்குப் புதுமையன்று. காசி விசுவநாதர் சந்நிதி தென்னாட்டிலுள்ள பல கோயில்களில் உண்டு. இதனால் காசியிலுள்ள சிவலிங்கத்தை எடுத்து வந்து இக்கோயில்களில் வைத்து வழிபடுகிறார்கள் என்பது பொருளன்று. இதனால் பரஞ்சோதி புதிய கணபதி சிலை செய்து கணபதீச் சுரக்கோயிலில் நிறுவினார் என்பதே பொருந்தும் என்கிறார் ஆர். வீரபத்திரன்.[34]

## முடிப்புரை

*கணபதியின் தோற்றம் :*

கணபதியின் பிறப்புப் பற்றிப் புராணங்கள் பலவாறு கூறும். (கதைகளை மூன்றாம் இயலில் காண்க) ஆனால் தமிழ் ஞானசம்பந்தர் தமிழ்மக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்ட வரலாற்றையே கூறுகிறார். 'பிடியதன் உரு உமை கொள' எனத்தொடங்கும் தேவாரத்தில் உமாதேவி பிடி (பெண்யானை) யின் உருவம் கொள்ளச் சிவபிரான் ஆண் யானையின் வடிவம் கொண்டுசேரக் கணபதி தோன்றினார் என்கிறார். [35]

புத்தருக்குரிய அரசமரம் கணபதிக்குப் பெறப்பட்டதாகக் கருதலாம். உழவர் தெய்வமாகிய கணபதி உழவர்க்குப் பகையான எலியை வாகனமாகக் கொண்டு அடக்கி ஆள்கிறார். சிவனுக்குரிய சடை. முக்கண். பாம்பு அணி முதலியன பெற்றுள்ளதால் கணபதிக்குக் காளையும் வாகனமாயிற்று. திருமாலின் சக்கரப்படையையும் கணபதி. வல்லப கணபதி உருவில் விளங்கும் போது கொண்டுள்ளார். சிவனைப் போலவே சக்தியை இடப்புறம் அணைத்துக் கொண்ருக்கிறார். சிவன் ஐந்து முகங்களைக் கொண்டு விளங்குவதுபோலக் கணபதியும். ஐம்முகங்களைக் கொண்டு ஏரம்பகணபதி என்ற பெயரில் விளங்குகிறார்.

சிவனுக்கும் பார்வதிக்கும் பிறந்த பிள்ளையாகக் கருதப்பட்டதால் பிள்ளையார் என்ற தமிழ்ப் பெயர் பெற்றார்.

கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் கணபதி வழிபாடு தமிழ் நாட்டில் தொடங்கப் பட்டிருக்கலாம். கி.பி. ஏழாம் நூற்றாண்டில் பெருமளவில் பரவத் தொடங்கியிருக்கலாம்.

**இயல் – 1**

*அடிக்குறிப்புகள்*

1. மானவகிரிய சூத்திரம் கணபதியை மிகத் தீயவராக வருணிக்கிறது. (Vide R.S. Gupte Iconography of the Hindus, Buddhists and Jains . p.47)
2. Alice Getty, Ganesa - A Monograph on the Elephant faced God, p.1.
3. Rev. H. Heras. The Problem of Ganapathi, p. 47.
4. பெ. சுயம்பு, கடவுள் உருவங்கள், பக். 70-71
5. Gupte R.S. 1972, p. 48
6. கா. சுப்பிரமணியபிள்ளை, தமிழர் சமயம், ப.18

7. Alice Getty Op. Cit, p.1.
8. Rev. H. Heras Op. Cit, p. 47
9. Paul B Courtright, The Encyclopedia of Religion Vol. 5. p.484
10. புறநானூறு 106 ஆம்பாடல்
"புல்லிலை எருக்க மாயினு முடையவை
கடவுள் பேணே மென்னா..." இது சிவனுக்கும் பொருந்தும்.
11. மணிமேகலை. பதிகம் 12-ஆம் அடி.ச. தண்டபாணி தேசிகர். கணபதி. ப. 34.
12. N. Subramaniam, Sangam Polity, PP. 360 - 361
13. ஆர். வீரபத்திரன். வாதாபி கணபதி - புதிய சிந்தனை. ப. 23
14. நா. வானமாமலை. தமிழர் நாட்டுப்பாடல்கள். ப. 19.
15. மயிலை சீனிவேங்கடசாமி. பௌத்தமும் தமிழும். பக். 69-70
16. ஆர். வீரபத்திரன். அ.நூ., பக். 23-24.
17. Alice Getty Op.Cit, p.19.
18. Sri. Kanta Iyer, 'The Popular view of Ganesa in Madras, Indian Antiguary x x x p.255
19. Rev. H. Heras, Op.Cit. p.32
20. ச. தண்டபாணிதேசிகர். அ.நூ., ப. 29
21. தினமலர் 5-8-70.
22. H. Sarkar, 'A Pandya Rock cut cave at Manappadu on Pearl fishery Coast, 'Demilica, Journal of the Tamil Nadu State Dept. of Archaelogy Dec., 1970. p. 32.
23. S.K.R. Rao, Ganesa - Kosha, p. 222.
24. சா. கணேசன். பிள்ளையார்பட்டித் தலவரலாறு. ப. 23.
25. S.V.S. & Co., Heritage of the Tamil, Temple Arts, p. 40.
26. அப்பர் தேவாரம். திருவதிகை வீரட்டானம் - 5.
27. N. Subramanian, Op. Cit, p. 360.
28. மேலது. ப. 361.
29. Raju Kalidos, Historicity of vatapi Ganapathy a Conceptual Analysis.
30. ச. தண்டபாணி தேசிகர். அ.நூ., ப. 31.
31. திருத்தொண்டர்புராணம். சிறுத்தொண்டர்புராணம். பா. 6.
32. ச. தண்டபாணிதேசிகர். அ.நூ., ப. 32.

33. தினமணி, மதுரை, 31-08-92 கணபதி வழிபாடு - நடன காசிநாதன்.

34. ஆர். வீரபத்திரன், அ.நூ., ப. 188.

35. திருஞானசம்பந்தர் தேவாரம் 'பிடியதன் உரு உமைகொள' எனத் தொடங்கும் பாடல்.

## திருவுருவ அமைப்பு (Iconography)

வழிபடப்பெறும் கடவுள்வடிவம் எப்பொருளில் அமைந்தாலும் அது திருவுருவ அமைப்பு எனப்படும். கணபதியின் திருவுருவம் செய்வதற்கு மிக எளிதானதாகும். மஞ்சள். மாவு. சாணம். களிமண், விபூதி. முத்து. பவளம், மலர் ஆகியவற்றால் அமைக்கப்படுவதுண்டு. கருங்கல்லில் சிலையாக வடிக்கப்படுதல் உண்டு. ஓவியமாகத் தீட்டப்படுதலுமுண்டு. உலோகங்களால் வடிக்கப்படுதலுமுண்டு. கணபதி திருவுருவ அமைப்பின் வகைகளைக் காண்போம்.

## செய்தற்கு எளிய திருவுருவங்கள்

மஞ்சள். மாவு. சாணம். களிமண். மாக்கல். அரைத்த சந்தனம். அச்சு வெல்லம் ஆகியவற்றால் கணபதி திருவுருவினை அமைப்பது மிக எளிமையானது. நினைத்த மாத்திரத்தில் உருவாக்கி விடலாம்.

*மஞ்சள்*

மஞ்சட்பொடியைத் தண்ணீர் விட்டுப் பிசைந்து வலக்கைக்கட்டை விரல். சுட்டு விரல். நடுவிரல் ஆகியவற்றை அதில் செலுத்தி கூம்பு வடிவில் பிடித்து வைத்தால் பிள்ளையார் அதில் எழுந்தருளுவார் என்பது தமிழர் நம்பிக்கை.

பார்வதிதேவி நீராடும்போது தன் உடம்பிலிருந்து அழுக்கை உருட்டி அதிலிருந்து பிள்ளையாரை உருவாக்கினார் என்பர். இதை ஏற்றுக் கொள்ள விரும்பாத சிலர் அவர்தம் உடம்பில் தேய்த்துக் குளிக்க வைத்திருந்த மஞ்சளைத் திரட்டியெடுத்து அதிலிருந்து பிள்ளையாரை உருவாக்கினார் என்று கூறுவர். இதிலிருந்து மஞ்சளைப் பிள்ளையாராகப் பிடிக்கும் வழக்கம் உருவானது என்பர்.

தமிழர்வீடுகளில் நடைபெறும் சடங்குகளின் தொடக்கத்தில் பிள்ளையாரை வழிபடுவர். அப்போது மஞ்சள் பிள்ளையாரைப் பிடித்து வைத்து வழிபடுவது வழக்கம். வ்ழிபாடு முடிந்தபின் நீரில் கரைத்து விடுவர். அம்மஞ்சளை உடலிலும் பூசலாம்.

*மாவு*

தமிழர் வீடுகளில் முறுக்கு. சீடை தின்பண்டங்கள் செய்யும்போது மாவினை எடுத்துப் பிள்ளையாராகப் பிடித்து வைத்து வழிபட்டுத் தொடங்குவர்.

*சாணம்*

கன்றினை ஈனும் பருவத்திற்கு முந்திய இளமையான பசுவின் கன்றினை 'ஈனாக்கிடாரி' என்பர். அதன் சாணத்தை எடுத்து உருட்டி வலக்கையில் வைத்து மூடி அழுத்தி உருட்டி இரண்டங்குல உயரத்தில் பிடித்து வைப்பர். அதற்குப் பொட்டு வைத்து ஓர் அறுகம்புல்லையும் சார்த்தினால் அதில் கணபதி எழுந்தருளுவார் என்பதும் தமிழர் நம்பிக்கை.

இவ்வழக்கத்தைக் கடிந்த பாரதிதாசனார்,

"சாணிக்குப் பொட்டிட்டுச் சாமி என்பார் செய்கைக்கு
நாணிநீ கண்ணுறங்கு நகைத்துநீ கண்ணுறங்கு"

எனத் தாலாட்டுப் பாடலில் குறிப்பிட்டுள்ளார். ஆயினும் இவ்வழக்கம் தமிழரிடையே வேரூன்றி உள்ளது. பொங்கல் காலத்தில் திருவிளக்கின் அருகில் இவ்வாறு சாணிப் பிள்ளையார் பிடித்து வைத்து வழிபடுவது தமிழர் வழக்கம்.

பசுங்கன்றின் சாணத்தை ஒரு தேங்காய் அளவு பிடித்து வைத்து அதைப் பிள்ளையாராகக் கருதி நாற்பது நாட்கள் பூசை செய்தால் அச்சாணியுருண்டையில் துதிக்கை தோன்றுகிறது. [3]

*களிமண்*

விநாயகர் சதுர்த்தியன்று கணபதி பூசை செய்வதற்காகக் களிமண்ணில் பிள்ளையார் உருவைப் பிடிப்பது வழக்கம். இவ்வகைப் பிள்ளையாரை பூசைக்கு அடுத்த நாள் நீர் நிலைகளில் கரைத்து விடுவர்.

*வெள்ளெருக்கு விநாயகர்*

வெள்ளெருக்கு வேரினை வீட்டில் வைத்திருந்தாலே தோடங்கள் நீங்கும் என்பது தமிழர் நம்பிக்கை. இவ்வேரில் விநாயகர் சிற்பம் செய்து வீட்டில் வைத்துப் பூசை செய்து வந்தால். நீண்ட நாட்களாகத் தடைப்பட்டு வரும் திருமண முயற்சி, வேலைவாய்ப்பு முயற்சி, முதலியனவற்றின் தடைகள் நீங்கி காரிய சித்தி உண்டாகும். மேலும் பில்லி, சூனியம், திருஷ்டி, பொறாமை நெருங்கா. [4] இதன் மருத்துவப்பயனை வழிபாட்டியலில் காணலாம்.

*வெள்ளெருக்கு விநாயகர் கோயில்*

சென்னைக்கு அருகில் ஓரகடத்தில் அலமேலு மங்காபுரத்தில் மூன்றரை கிரவுண்டு நிலத்தை அன்பளிப்பாகப் பெற்று திரு.கே.எஸ். சாத்திரி என்பார் வெள்ளெருக்கு விநாயகர் ஆலயம் கட்டியுள்ளார். இவ்விடம் ஓரகடத்திலிருந்து வல்லக் கோட்டை முருகன் கோயில் வழியில் உள்ளது.

நிலத்தைச் சுற்றி வெள்ளெருக்கஞ் செடியை வளர்த்து வருகிறார். இதைச் சீமகா கணபதி பக்தி மண்டலி அறக்கட்டளை அமைக்கிறது. திரு. கே.எஸ். சாத்திரி சென்னையில் வெள்ளெருக்கு விநாயகர் செய்யும் சிற்பியை வைத்து வெள்ளெருக்கு விநாயகர் செய்து மூன்றாண்டுகளாக விற்பனை செய்து வருகிறார். [5] இவ்வெள்ளெருக்கு விநாயகர் சிலைகள் தமிழ்நாடெங்கும் சர்வோதயா கதர்க்கடைகளில் பல்வேறு உயரங்களில் விலைக்கு கிடைக்கின்றன. [6]

*மாக்கல்*

சிறு கத்தியைக் கொண்டு இவ்வகைக்கல்லில் எளிதாகப் பிள்ளையார் உருவைச் செதுக்கலாம். ஆயினும் மாக்கல் பிள்ளையாரை வைத்து வழிபடுதல் நல்லதன்று என்கிறார் திருமுருக கிருபானந்தவாரியார்.[7] அதில் ஒலி ஒளித்தத்துவ மின்மைகாரணம். தட்டினால் ஒலி ஒளி உண்டாகா.

*அரைத்த சந்தனம்*

மஞ்சள் பிள்ளையார் பிடிப்பதுபோல அரைத்த சந்தனத்திலும் பிடி த்து வைத்து வழிபடுவர். வழிபாடு முடிந்தபின் நீரில் கரைத்து விடுவர். உடலிலும் பூசலாம்.

*அச்சுவெல்லம்:*

அப்படியே அச்சுவெல்லத்தைக் கணபதியாக வழிபடுவர்.

## கற்சிலைகள்

கருங்கல்லிலே சிலைகளை வடிப்பது தமிழர்க்குக் கைவந்த கலை. கருங்கல் சிலை செய்யுமிடங்கள் தமிழ்நாட்டில் பல ஊர்களில் இருந்தாலும் குமரிமாவட்டத்தில் மயிலாடி என்னும் ஊரிலும், செங்கைமாவட்ட மாமல்ல புரத்திலும் கலைக் கூடங்கள் ஏராளம் உள்ளன. அவ்விடங்களில் செய்யப்படும் சிற்பங்களில் பெரும்பாலானவை கணபதி சிற்பங்களே. [8]

*பல்வேறு வடிவங்கள்*

வடமொழி மரபுப்படி வடமொழி எழுத்துக்களின் எண்ணிக்கையான ஐம்பத்திரண்டினை அடிப்படையாகக் கொண்டு கணபதி ஐம்பத்திரண்டு வகை என்பர். பிரமவைவர்த்த புராணம் எட்டு வகைக் கணபதி என்று கூறும். பதுமபுராணம் பன்னிரண்டு வகை பகரும். சிந்தி யாகமம் பதினாறு வகைகளைச் செப்பும் [9] அவையாவன:

1. பால கணபதி
2. பக்தி கணபதி
3. வீரகணபதி
4. சித்தி கணபதி

| | | | |
|---|---|---|---|
| 5. | பிங்கள கணபதி | 6. | சக்தி கணபதி |
| 7. | உச்சிட்ட கணபதி | 8. | ரக்த கணபதி |
| 9. | சிப்பிரபிரசாத கணபதி | 10. | ஏரம்ப கணபதி |
| 11. | இலட்சுமி கணபதி | 12. | விசய கணபதி |
| 13. | நிருத்ய கணபதி | 14. | ஊர்த்துவ கணபதி |
| 15. | மகா கணபதி | 16. | அரித்திரா கணபதி |

### தொடக்க காலம்

தொடக்க காலத்தில் கணபதிக்கு இருகைகளே அமைக்கப் பெற்றன. அணிகலன்களோ படைக்கலங்களோ கொடுக்கப்படவில்லை. மனைவியரும் அமைக்கப்படவில்லை. யானைமுகமும் தொந்தியுமே இவரை இனம் காட்டின. தாந்திரிக முறையில் பல்வகை மாந்திரிக வழிபாட்டிற்காகப் பல்வேறு வடிவங்களும் நிறங்களும் படைக்கலங்களும் மனைவிமாரும் அளிக்கப் பெற்றன. [10]

## 32 வகைக் கணபதிகள்

முத்கல புராணம் முப்பத்திரண்டு வகைக் கணபதிகளைக் குறிப்பிடுகின்றது. ஸ்ரீதத்துவ நிதி அவற்றிற்குரிய நிறங்களையும் தியான சுலோகங்களையும் கூறுகிறது. அவ்வகைகளைக் காண்போம்.

| | முத்கல புராணம் | | ஸ்ரீதத்துவ நிதி |
|---|---|---|---|
| 1. | பால கணபதி | - | செந்நிறம் |
| 2. | தருண கணபதி | - | நண்பகல் சூரியன் |
| 3. | பக்தி கணபதி | - | மதிபோல் வெண்மை |
| 4. | வீர கணபதி | - | செம்மேனி |
| 5. | சக்தி கணபதி | - | செவ்வந்திவானம் |
| 6. | துவிச கணபதி | - | மதிபோல வெண்மை |
| 7. | சித்தி கணபதி | - | பொன்கலந்த பசுமை |
| 8. | உச்சிட்ட கணபதி | - | நீலநிறம் |
| 9. | விக்கின கணபதி | - | பொன்மேனி |
| 10. | சிப்பிர கணபதி | - | செவ்வரத்தம் பூ |
| 11. | ஏரம்ப கணபதி | - | பசுமை கலந்த கருமை |
| 12. | இலட்சுமி கணபதி | - | வெண்மை |
| 13. | மகா கணபதி | - | செங்கதிர் |
| 14. | விசயகணபதி | - | செந்நிறம் |
| 15. | நிருத்த கணபதி | - | பொன்போல் நிறம் |

| | | | |
|---|---|---|---|
| 16. | ஊர்த்துவ கணபதி | - | பொன் வண்ணம் |
| 17. | ஏகாட்சரகணபதி | - | செந்நிறம் |
| 18. | வரகணபதி | - | செவ்வண்ணம் |
| 19. | திரயாட்சரகணபதி | - | பொன்னிறம் |
| 20. | சிப்ரபிரசாத கணபதி | - | செம்மை |
| 21. | அரித்திரா கணபதி | - | மஞ்சள் |
| 22. | ஏகதந்த கணபதி | - | நீலம் |
| 23. | சிருஷ்டி கணபதி | - | சிவப்பு |
| 24. | உத்தண்ட கணபதி | - | செம்மை |
| 25. | ரணமோசன கணபதி | - | வெண்பளிங்கு |
| 26. | டுண்டி கணபதி | - | செம்மை |
| 27. | துவிமுக கணபதி | - | பசுநீலம் |
| 28. | மும்முக கணபதி | - | செம்மை |
| 29. | சிங்க கணபதி | - | பொன்னிறம் |
| 30. | யோக கணபதி | - | இளஞ்சூரியன் |
| 31. | துர்க்கா கணபதி | - | சுட்ட பசும்பொன் |
| 32. | சங்கடஹர கணபதி | - | இளஞ்சூரியன் |

## ஸ்ரீ தத்துவ நிதி கூறும் 32 கணபதிகள்

| வகை | முகங்களின் எண் | வலக்கைகள் ஏந்துவன | இடக்கைகள் ஏந்துவன |
|---|---|---|---|
| 1. பால கணபதி | 1 | வாழைப்பழம் | கரும்பு |
| | | மாம்பழம் | பலாப்பழம் |
| 2. தருண கணபதி | 1 | அங்குசம் | பாசம் |
| | | கரும்புத்துண்டு | நெற்கதிர் |
| | | விளாம்பழம் | நாவற்பழம் |
| | | ஒடித்த கொம்பு | மோதகம் |
| 3. பக்தி கணபதி | 1 | வாழைப்பழம் | தேங்காய் |
| | | மாம்பழம் | பாயசக்கலசம் |
| 4. வீரகணபதி | 1 | 1. அம்பு | வில் |
| | | 2. அங்குசம் | வேல் |
| | | 3. மழு | நாகம் |
| | | 4. குந்தாலி | பாசம் |
| | | 5. சம்மட்டி | கொடி |
| | | 6. சூலம் | கதை |

| | | | |
|---|---|---|---|
| | | 7. வாள் | கேடயம் |
| | | 8. சக்கரம் | சங்கு |
| 5. சக்தி.கணபதி | 1 | அங்குசம், அபயம் | பாசம், அணைத்தல் |
| 6. துவிஜ கணபதி | 4 | தண்டம் | கமண்டலம் |
| | | அக்கமாலை | ஏடு |
| 7. சித்தி கணபதி | 1 | ப்ரசு,மாம்பழம் | கரும்புத்துண்டு |
| | | | மலர்க்கொத்து |
| 8. உச்சிட்ட கணபதி | 1 | நீலோற்பலம் | நீலோற்பலம் |
| | | மாதுளம் பழம் | நெற்கதிர், |
| | | அக்கமாலை | வீணை |
| 9. விக்கின கணபதி | 1 | 1. கோடரி | பாசம் |
| | | 2. சக்கரம் | சங்கு |
| | | 3. மலரம்பு | கரும்புவில் |
| | | 4. தந்தம் | பூங்கொத்து |
| 10. சிப்ரகணபதி | 1 | அங்குசம் | பாசம் |
| | | தந்தம் | கற்பகக்கொடி |
| 11. ஏரம்ப கணபதி | 5 | 1. பரசு | பாசம் |
| | | 2. அக்கமாலை | சம்மட்டி |
| | | 3. தந்தம் | மலர்மாலை |
| | | 4. பழம் | மோதகம் |
| | | 5. அபயம் | வரதம் |
| 12. இலட்சுமி கணபதி | 1 | 1. அங்குசம் | பாசம் |
| | | 2. கலசம் | கற்பகக்கொடி |
| | | 3. மாதுளம்பழம் | கட்கம் |
| | | 4. கிளி | வரதம் |
| 13. மஹாகணபதி | 1 | 1. தாமரை | பாசம் |
| | | 2. சக்கரம் | நீலோற்பலம் |
| | | 3. கரும்புவில் | நெற்கதிர் |
| | | 4. கதை | தந்தம் |
| | | 5. மாதுளம்பழம் | தழுவுதல் |
| 14. விஜய கணபதி | 1 | 1. அங்குசம் | பாசம் |
| | | 2. தந்தம் | மாம்பழம் |
| 15. நிருத்த கணபதி | 1 | 1. தந்தம் | அப்பம் |
| | | 2. கோடரி | வீசியகை |
| | | 3. அங்குசம் | பாசம் |

| | | | |
|---|---|---|---|
| 16. ஊர்த்துவ கணபதி 1 | | 1. தந்தம் | அணைத்தல் |
| | | 2. நெற்கதிர் | கரும்புவில் |
| | | 3. தாமரை | செங்கழுநீர் மலர் |
| 17. ஏகாட்சர கணபதி | 1 | 1. அபயம் | வரதம் |
| | | 2. அங்குசம் | பாசம் |
| 18. வர கணபதி | 1 | 1. தேன்கிண்ணம் | கொடி |
| | | 2. அங்குசம் | பாசம் |
| 19. திரயாட்சர கணபதி | 1 | 1. தந்தம் | மாம்பழம் |
| | | 2. அங்குசம் | பாசம் |
| 20. சிப்ரபிரசாத கணபதி | 1 | 1. தருப்பை | வரதம் |
| | | 2. தாமரை | கற்பகக் கொடி |
| | | 3. அங்குசம் | பாசம் |
| 21. ஹரித்திரா கணபதி | 1 | 1. தந்தம் | மோதகம் |
| | | 2. அங்குசம் | பாசம் |
| 22. ஏகதந்த கணபதி | 1 | 1. தந்தம் | கோடரி |
| | | 2. அக்கமாலை | இலட்டு |
| 23. -சிருஷ்டி கணபதி | 1 | 1. தந்தம் | மாம்பழம் |
| | | 2. அங்குசம் | பாசம் |
| 24. உத்தண்ட கணபதி | 1 | 1. தந்தம் | அணைத்தல் |
| | | 2. நெற்கதிர் | பாசம் |
| | | 3. கதை | மாதுளம்பழம் |
| | | 4. மாலை | கரும்புவில் |
| | | 5. நீலோற்பலம் | தாமரை |
| 25. ரணமோசன கணபதி | 1 | 1. தந்தம் | நாவற்பழம் |
| | | 2. அங்குசம் | பாசம் |
| 26. துண்டி கணபதி | 1 | 1. தந்தம் | கோடரி |
| | | 2. அக்கமால | ரத்தின பாத்திரம் |
| 27. இருமுக கணபதி | 2 | 1. தந்தம் | ரத்தின பாத்திரம் |
| | | 2. அங்குசம் | பாசம் |
| 28. மும்முக கணபதி | 3 | 1. அபயம் | வரதம் |
| | | 2. அக்கமாலை | அமுதகலசம் |
| | | 3. அங்குசம் | பாசம் |
| 29. சிங்க கணபதி | 1 | 1. வரதம் | அபயம் |
| | | 2. வீணை | ரத்தின கலசம் |
| | | 3. சிங்கம் | மலர்க் கொம்பு |



| | | | |
|---|---|---|---|
| | | 4. கற்பகக் கொடி | தாமரை |
| 30. யோக கணபதி | 1 | 1. அட்சமாலை | பாசம் |
| | | 2. யோகதண்டம் | கரும்பு |
| 31. துர்க்கா கணபதி | 1 | 1. அங்குசம் | பாசம் |
| | | 2. பாணம் | வில் |
| | | 3. அட்சமாலை | கொடி |
| | | 4. தந்தம் | நாவற்பழம் |
| 32. சங்கடஹர கணபதி | 1 | 1 அங்குசம் | பாசம் |
| | | 2. வரதம் | பாயசபாத்திரம் |

## 32 வகை கணபதி திருமேனிகளையும் பகுத்து ஆய்வோம்

*கைகளினால் வேறுபட்டவர்*

| | |
|---|---|
| நான்கு கைகள் கொண்டவர் | 21 |
| ஆறு கைகள் கொண்டவர் | 1 |
| எட்டுக் கைகள் கொண்டவர் | 4 |
| பத்துக் கைகள் கொண்டவர் | 4 |
| பன்னிரண்டு கைகள் கொண்டவர் | 1 |
| பதினாறு கைகள் கொண்டவர் | 1 |

*நிறங்களால் வேறுபட்டவர்*

| | |
|---|---|
| சிவப்பு வண்ணமுடையவர் | 15 |
| வெண்மை வண்ணமுடையவர் | 6 |
| பொன் வண்ணமுடையவர் | 4 |
| மஞ்சள் வண்ணமுடையவர் | 3 |
| நீல வண்ணமுடையவர் | 2 |
| கருநீல வண்ணமுடையவர் | 1 |
| சிந்தூர வண்ணமுடையவர் | 1 |

*தேவிகளையுடையவர்*

| | |
|---|---|
| ஒரு தேவியைக் கொண்டவர் | 6 |
| இரு தேவியைக் கொண்டவர் | 2 |
| தேவியர் அற்ற திருமேனிகள் | 24 |

*முகங்களால் வேறுபட்டவர்*

| | |
|---|---|
| ஒரு முகம் கொண்டவர் | 28 |
| இரு முகங்கள் கொண்டவர் | 1 |

| | |
|---|---|
| மும் முகங்கள் கொண்டவர் | 1 |
| நான்கு முகங்கள் கொண்டவர் | 1 |
| ஐந்து முகங்கள் கொண்டவர் | 1 |

ஒரு முகம் கொண்டவரே பெரும்பாலும் வழிபடப் பெறுகிறார். இரு முகம் கொண்டவர் அக்கினி வடிவையும், மும்முகம் கொண்டவர் சிவன் வடிவையும், நான்கு முகம் கொண்டவர் பிரம்மா வடிவையும் ஐந்து முகங்கள் கொண்டவர் ஐம்பெரும் பூதங்கள் அல்லது சிவன்வடிவான தத்புருடம், அகோரம், வாமதேவம், சத்யோஜாதம், ஈசானம் ஆகிய வடிவினையும் குறிப்பிடுகின்றன என்பர். [11]

இம் முப்பத்திரண்டு வகைகளுள் தமிழ் நாட்டின் பெரும்பாலான கோயில்களில் வழிபடப் பெறுபவர் அரித்திரா கணபதி வடிவமே. நான்கு கைகளில் மேற்கைகளில் அங்குசம், பாசம் பற்றியும், கீழ்க் கைகளில் தந்தம், மோதகம் பற்றியும் உள்ள உருவமே அரித்திரா கணபதி. இவ்வகைப் பிள்ளையார் சிலைகளை தமிழ்நாட்டு அனைத்து ஊர்களிலும் காணலாம்.

*வலம்புரியும் இடம்புரியும்*

கணபதியின் துதிக்கை வலப்புறமாக வளைந்திருந்தால் வலம்புரி என்றும், இடப்புறமாக வளைந்திருந்தால் இடம்புரி என்றும் கூறுவர். வலம் என்ற தமிழ்ச் சொல்லுக்கு வெற்றி எனப் பொருள். வலம்புரி விநாயகரை வழிபடுதலைச் சிறப்பாகத் தமிழர் கருதுவர்.

## திருவுருவம்

கணபதி திருமேனி கீழே பூதவுடம்பு; இடைக்கும் மேல் கழுத்து வரை தேவவுடம்பு. தலை-யானைத்தலை. ஒரு கொம்பு ஆண் தன்மை; கொம்பில்லாத பகுதி பெண் தன்மை; யானைத் தலை அஃறிணை. தெய்வசரீரம் உயர்திணை. எல்லாமானவர் என்பதை இவ்வடிவு காட்டும். அஃதாவது பூதமாய், தேவராய், விலங்காய், அஃறிணையாய், உயர்திணையாய் விளங்குபவர். [12]

பொதுவாக ஒருகொம்பு, இரு செவிகள், முக்கண், நான்கு தோள்கள் ஐந்து கரங்கள் உடையவர்.

*பருவங்கள்*

இவருள் பால கணபதி குழந்தைப் பருவத்தினரென்றும், தருண கணபதி விடலைப் பருவத்தினரென்றும், மகா கணபதி முதுமைத் தோற்றமுடையவரென்றும் கூறுகிறார் சுயம்பு. [13] து வச கணபதி அச்சுறுத்தும் தோற்றமுடையவர்.

### தேவியோடு கூடிய வடிவங்கள்

முப்பத்திரண்டுவகையுள் சக்தி கணபதி, உச்சிட்ட கணபதி. மகாகணபதி. ஊர்த்துவ கணபதி. உத்தண்ட கணபதி. சங்கடஹர கணபதி ஆகியோர் இடப்புறம் தேவியைக் கொண்டு விளங்குகின்றனர்.

### மனைவியர் பெயர்கள்

தேவியரை அணைத்திருப்பது அருட் சக்தியோடு கூடியவர் என்பதைக் காட்டவே. மரீசி முனிவர்க்குச் சிவனருளால் பிறந்த மகள் வல்லபை. இவளை அணைத்த விநாயகர் தமிழ் நாட்டில் 'வல்லபை கணபதி' எனப் பெயர் வழங்கப் பெறுகிறார். சித்தி புத்தி (பிரம்ன் மக்கள்) என்னும் இரு தேவியரைக் கொண்டவர் தமிழ் நாட்டில் சித்தி புத்தி விநாயகர் எனப் பெயர் பெறுகிறார். இவர்களை வலப்புறம் ஒருத்தியாகவும் இடப்புறம் ஒருத்தியாகவும் கொண்டிருப்பார். திருமால் கணபதிக்குப் பன்னிரு மகளிரை மணம் செய்வித்தார் எனக் கூறுவர். அவர்களின் பெயர்கள் வருமாறு: மோதை. பிரமோதை. சுமநசை. சுந்தரி. மநோரமை. மங்கலை. கேசினி. காந்தை. சாருஉறாஸை. சுமத்தியமை. நந்தினி. சாமதை.[14]

### வல்லபை கணபதி

தமிழ்நாட்டில் தேவியோடு கூடிய கணபதியை வல்லபை கணபதி என்கின்றனர். வடநாட்டினர் இலக்குமி கணபதி என்கின்றனர். உகரம் காத்தல் தொழிலை உணர்த்தும். கணபதி காத்தற் தொழிலைச் செய்வதால் திருமாலாகவே பாவிக்கப்படுகிறார். கணபதிக்குத் திருமாலுக்குரிய சங்கு சக்கரங்கள் ஆயுதங்களாக உள்ளன.[15] அதனால் அவர் மடியிலுள்ள தேவி இலக்குமியாகக் கருதப்படுகிறார்.[16]

### உச்சிட்ட கணபதி

கணபதி தனது இடத் தொடையில் அமர்த்தியிருக்கும் தேவியின் குறியில் துதிக்கையை வைத்துக் கொண்டு எச்சிற்படுத்தும் கோலம் இது.. மணி மூர்த்தீசுவரம் (நெல்லை) கணபதி கோயில் மூலவராக விளங்கும் கணபதி இவ்வாறு காட்சியளிக்கிறார். முன் கூறிய முப்பத்திரண்டு வகையுள் இதனை வேறுவகை எனத் தண்டபாணி தேசிகர் கூறுகிறார்.[17]

### த்ரைலோக்ய மோகன கணபதி

இக்கோலம் முன்கூறிய முப்பத்திரண்டு வகையுள் அடங்காதது. இவர் வெண்மை நிறம் வாய்ந்தவர் என்றும் இடத்தொடையில் அமர்த்திய தேவியின் குறியைத் தம் துதிக்கையால் தொட்டுக் கொண்டிருக்க. தேவி கணபதியின் குறியினைத் தன் வலக்கையால் பற்றிய நிலையிலும் அமைந்துள்ளது. இதனை.

தைலோக்ய மோகன கணபதி எனக் கணேச கோசா கூறுகிறது.[18] இக்கணபதி சிலைகள் தமிழ்நாட்டில் தாராசுரத் (தஞ்சை) திலும் கும்பகோணம் (தஞ்சை) நாகேசுவரர் கோயிலில் நடராசர் அம்பலத்திற்கு வெளியே வலப்புறமும் காணப்படுகின்றன. (நி.ப.எண்.5)

இஃதும் ஒருவகை யோக நெறியே என்பதைச் சேக்கிழார், பெரிய புராணத்துள் சுந்தரர் பரவை நாச்சியாரோடு வாழ்க்கை நடத்தியதை யோகம் பயின்றார் என்றே குறிப்பிடுகிறார்.[19]

*ஏரம்ப கணபதி (ஐம்முகப் பிள்ளையார்)*

கணபதியின் ஐந்து முகங்களையும் வரிசையாக அமைப்பதும் உண்டு. நான்கு திசைகளை நோக்கி நான்கும் மேலே ஒன்றுமாக அமைப்பதும் உண்டு. புதுக்கோட்டை (புதுக்கோட்டை) யில் இராசராசேசுவரி கோயிலிலும், சேலத்திற்கு அருகிலுள்ள கந்தகிரியிலும், திருவானைக்கா அகிலாண்டேசுவரி கோயில் திருச்சுற்றிலும் கல்லால் அமைந்த ஐம்முகப்பிள்ளையார்கள் உளர். சிவகாசி (காமராசர்) பத்திரகாளி அம்மன் கோயிலிலும், சென்னை திருவொற்றியூர் தியாகராசர் கோயிலிலும் முகங்கள் வரிசையாக அமைந்த ஐம்முகப்பிள்ளையார் உள்ளனர். ஐம்முகப்பிள்ளையாருக்குச் சிம்மவாகனம் அமைப்பது மரபு. சிவகாசியில் மட்டும் பெருச்சாளி வாகனம் காணப்டுகிறது. (பின் அட்டையில் படம் உள்ளது)

நாகைக் காரோணத்திலும் ஆறுமுகமங்கலம் (வ.உ.சி.) ஆயிரத் தெண் விநாயகர் கோயிலிலும் ஐம்முகப்பிள்ளையாரின் உலோகத் திருமேனிகள் உள்ளன. [20] (நி.எண்.9)

## வாகனங்கள்

*மூசிகம்*

மூசிகம் என்று வடமொழியில் கூறப்படுவது சுண்டெலியைக் குறிக்கும். ஆயினும் எலி, பெருச்சாளி, மூஞ்சுறு ஆகியன கணபதியின் வாகனங்களாகக் கொள்ளப்படுகின்றன. குப்தர்காலத்தில் வட இந்தியாவில் காணாபத்திய இனம் தோன்றியது. அவர்களே கணபதியை இந்து சமயத்தின் முழுமுதற் கடவுளாக மாற்றினர். அவர்கள் யானையைத் தங்கள் குழுவின் குறியாகக் கொண்டிருந்தனர். இக் குழுவிடம் மூசிகத்தைக் குழுக் குறியாகக் கொண்ட குழு தோற்றபோது வென்றவரின் கடவுளுக்குத் தோற்றவரின் குழுக்குறியை ஊர்தியாகவும், கொடியாகவும் கொடுத்துவிட்டனர்.- [21]

*சிம்ம வாகனம்*

ஏரம்பகணபதி எனப்படும் ஐம்முகக் கணபதிக்குரிய தாகச் சிம்மவாகனம் கருதப்படுகிறது. இவ்வாகனம் தன் தாயாகிய பார்வதி தேவியிடமிருந்து இரவலாகப் பெறப்பட்டதென்கிறார் ஈராசு பாதிரியார்.[22]

*காளை வாகனம்*

சுசீந்திரம் (குமரி) தாணுமாலயன் கோயிலுள் நுழைந்தவுடன் வலப்புறம் நோக்கினால் அங்குக்காளைவாகனம் கணபதி முன் தென்படும். திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலில் சிவன் கோயிலுக்கும் காந்திமதி அம்மன் கோயிலுக்கும் இடையேயுள்ள அம்மையப்ப விநாயகர் முன்பும் காளை வாகனம் உள்ளது. இராசபாளையம் (காமராசர்) உமா மகேசுவர விநாயகர் கோயிலிலும் கணபதிக்குமுன் காளை வாகனம் காணப்படுகிறது. சிவனுக்குரிய காளை வாகனம் சிவனைப் போன்று முக்கண், இளம்பிறை கொண்ட கணபதிக்கும் கொடுக்கப்பட்டதென்பதை அலிசு கெட்டி கூற்றால் அறியலாம்.[23]

*யானை வாகனம்*

திருச்செந்தூர் (வ.உ.சி.) ஆவுடையார் குளக்கரையிலுள்ள அரசாள்வார் விநாயகர் முன்பும், ஸ்ரீவில்லிபுத்தூர் (காமராசர்) மடவார் வளாகம் வைத்தியநாத சுவாமி கோயில் நுழைவாயிலுள்ள கல்யாண விநாயகர் முன்பும் யானை வாகனம் காணப்படுகிறது. யானையை அடக்குவதற்குரிய பாசம், அங்குசம் ஆகியவற்றைக் கொண்ட ஆனை முகனுக்கு ஆனை வாகனம் தந்தது பொருந்தும்.[24]

*மயில் வாகனம்*

திருவானைக்கா (திருச்சி) அகிலாண்டேசுவரி திருக்கோயிலில் காணப்படும் ஓவியத்தில் கணபதி மயில் வாகனத்தில் உள்ளார். பாண்டிச்சேரி மணக்குளவிநாயகர் கோவில் சுவரிலுள்ள சுதைச் சிற்பத்திலும் கணபதி தோகை விரித்த மயில்மேல் அமர்ந்து காட்சிதருகிறார். அருப்புக்கோட்டை தாதன் குளவிநாயகர் கோயிலிலும் மயில்வாகனம் உள்ளது. திரேதாயுகத்தில், மயில் வாகனமாயிருந்தது என்பர்.

*குதிரை வாகனம்*

இது கலியுகத்திற்கு உரியதென்பர்.[25] கடலூர் வட்டம் சென்னப்ப நாயக்கன் பாளையம் மலையாண்டவர் விநாயகர் கோயிலில் குதிரை வாகனம் அமைந்துள்ளது. கோயம்புத்தூர் குருபதேசிக் கவுண்டர் விநாயகர் கோயிலிலும் குதிரை வாகனம் உள்ளது.[26]

*கருட வாகனம்*

விஸ்வக்சேனசம் உறிதையில் விநாயகர் நாராயணன் அம்சமாக விளங்குபவரென்றும், அவருக்கு முன் மூசிகம் அல்லது கருடனை நிறுவலாம் என அனுமதிக்கிறது எனச்சிற்பச் செந்நூல் கூறுகிறது.[27] ஆனால் கருட வாகனம் ஆய்வாளர் கண்ட கணபதி கோயில்களில் இல்லை.

*ஐந்தலை நாகம்*

திருவாரூரில் (நாகை) ஐந்து தலைப் பாம்பின் மேல் நடனமாடும் கணபதி உள்ளார். (நி.ப.எண்.4)

*பூதவாகனம்*

திருப்பிரங்குன்றம் (மதுரை) பழைய சொக்கநாதர் கோயில் முன் மண்டப வலப்புறத் தூணில் பூதத்தின் மீதேறிப் போருக்குப் புறப்படும் நிலையில் கணபதி காணப்படுகிறார். இஃது ஓர் அபூர்வச் சிற்பம்.

## பொள்ளாப் பிள்ளையார்

உளியினால் செதுக்கப்படாத பிள்ளையார் 'பொள்ளாப்பிள்ளையார்' எனப்படுவார். இவரைப் பாமரர் 'பொல்லாப் பிள்ளையார்' என்பர். தமிழ்நாட்டில் இத்தகைய கணபதிகள் திருநெல்வேலி, திருநாரையூர், மருதமலை, சேண்பாக்கம், திருப்புறம் பயம் முதலிய இடங்களில் உள்ளனர்.

*திருநெல்வேலி*

திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலில் சுவாமிகோயில் இரண்டாம் திருச்சுற்றின் தென்பகுதியில் உள்ளார். அமர்ந்த கோலத்திலுள்ள இவரது கைகளும் முகமும் தெளிவாகத் தெரியவில்லை. ஒல்லியான துதிக்கை மட்டுமே இவரைப் பிள்ளையாரென அடையாளம் காட்டுகிறது.[28]

*திருநாரையூர்*

சிதம்பரத்திலிருந்து (தெ. ஆ) காட்டுமன்னார்குடி செல்லும் வழியில் பதினாறாவது கி.மீட்டரில் இறங்கி 2 கி.மீ நடந்து சென்றால் திருநாரையூரை அடையலாம். குறிப்பிட்ட நேரங்களில் இவ்வூருக்குப் பேருந்து உள்ளது. இவ்வூர்த் திரிபுரசுந்தரி அம்பிகை உடனாய சுந்தரேசுவர சுயம் பிரகாசர் திருக்கோயில் திருச்சுற்றில் கன்னிமூலையில் பொள்ளாப் பிள்ளையார் உள்ளார். இவர் வலம்புரி விநாயகர், தொந்தியில்லை. நான்கு கைகள் உண்டு. ஆனால் அவை தெளிவாகத் தெரியவில்லை.[29] (வரலாற்றைக் கதைப் பகுதியில் காண்க.) கோபுரம் அரைத்திங்கள் வடிவில் உள்ள அபூர்வ அமைப்பாகும்.

*மருதமலை*

மருதமலை (கோவை) யின் அடிவாரத்தில் படியேறுவதற்கு முன்னால் முதல் தங்கு மண்டபத்திற்கு வலப்புறம் கணபதி கோயில் உள்ளது. செதுக்கப்பட்ட கணபதி சிலைக்கு முன்னால் ஏறத்தாழ ஓரடி நீளம் அரையடி உயரத்தில் யானை படுத்திருப்பது போன்ற தோற்றத்தில் ஒரு பாறை தென்படுகிறது அதன் மேட்டுப் பகுதியில் துதிக்கை தென்படுகிறது. துதிக்கை,

முகம். காதுகள் ஆகியன இருக்குமிடங்களில் சந்தனம்குங்குமப் பொட்டுகள் வைத்து கணபதி தோற்றத்தைக் கற்பனை செய்யுமாறு அமைத்துள்ளனர். இவருக்குத் "தான் தோன்றி விநாயகர்" எனப் பெயர். பிற இடங்களில் காண இயலாத இயற்கை அமைப்பு இது.[30]

### சேண்பாக்கம்

வேலூர் (வ.ஆ) அருகிலுள்ளது சேண்பாக்கம் செல்வ விநாயகர் கோயில். இங்கு நடுவில் மூவரும் பக்கத்திற்கு நான்குமாக பதினோரு தான் தோன்றிக் கணபதிகள் ஓங்கார வடிவில் அமைந்துள்ளனர். (அவருள்) முதலில் காணப்படும் சிறிய கல்லைப் பால கணபதி என்கின்றனர்.[31] (வரலாறு கதைப் பகுதியில் காண்க.)

### *திருப்புறம்பயம்*

கும்பகோணத்திதற்கு (தஞ்சை) வடமேற்கே எட்டு கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. திருப்புறம்பயம் என்ற பாடல் பெற்ற தலம். அங்குள்ள சாட்சி நாதர் திருக்கோயில் ஆதித்த சோழனால் கட்டப்பெற்றது. (கி.பி. 870-907) இக்கோயில் மகாமண்டபத்திற்கு வெளியே வலப்புறம் சிறு மண்டபத்துள் பிரளயம் காத்த விநாயகர் உள்ளார். அருச்சகர் காட்டிய விளக்கின் துணைக்கொண்டு (பகலில்) ஆய்வாளர் கண்டார். சந்தன நிறமாய் விளங்குகிறார். கடற்பஞ்சாலும் கிளிஞ்சல்களாலும் அமைந்த திருவுரு இது.[32] (வரலாற்றை இதே இயலில் தனித்தன்மை வாய்ந்த கணபதி சிலைகள் என்னும் தலைப்பில் காண்க.( நி.ப.எண்.7)

## புனிதக்கல்

துதிக்கை போன்ற அமைப்பு காணப்படும் தான் தோன்றி விநாயகர்களைக் கண்டோம். ஆனால் எவ்வடிவும் இல்லாத இயற்கையான புனிதக்கற்களைக் குறிப்பிட்ட கடவுளின். விக்கிரகமாகக் கருதி அதில் எழுந்தருளச் (ஆவாகனம்) செய்து வழிபடுவது ஒரு மரபு. சிவன். அம்பிகை. திருமால். கணபதி. சூரிய ன் ஆகிய ஐவரையும் இத்தகைய கூழாங்கற்களில் எழச்செய்து வழிபடுவதைப் பஞ்சாயதன பூசை என்பர். இக் கற்கட்குக் கண். காது.மூக்கு ஏதுமில்லை. இவை அழுக்கடைவதும் இல்லை எல்லாமே சின்னச் சின்னக்கற்களாக இருக்கும். இவை கிடைக்குமிடங்கள் வருமாறு[33]

| *கல்லின் பெயர்* | *கிடைக்கும் இடம்* | *தெய்வம்* |
|---|---|---|
| 1. பாணலிங்கம் | நர்மதையாற்றின் ஓங்கார குண்டம் வெண்ணிறக்கல் | சிவன் |

| | | |
|---|---|---|
| 2. சொர்ணமுகிசிலை | ஆந்திராவிலுள்ள சொர்ணமுகி ஆறு. தங்கரேக்கு ஓடியகல் | தேவி |
| 3. சாளக்கிரமம் | நேபாளத்திலுள்ள கண்டகி ஆறு. கருநிறக்கூழாங்கல் | திருமால் |
| 4. சூரியனுக்குரிய கல் | தஞ்சாவூர் வல்லத்துக்கு அருகில் பளிங்குக்கல் | சூரியன் |
| 5.சோணப்த்திரக்கல் | கங்கையில் கலக்கும் சோணா ஆற்று செந்நிறக்கூழாங்கல் | கணபதி |

இவ்வைந்தினையும் ஒன்று சேர்த்தால் நாடு முழுவதையும் ஒன்று சேர்த்து வைத்தது போலாகும். சோணபத்திரக்கல் திருநல்லூர் (தஞ்சை) கோயிலில் உள்ளதாகக் கூறுகின்றனர்.[34]

## ஆலமரத்தில் இயற்கை விநாயகர்

செதுக்கப்படாத கல்லில் துதிக்கை தோன்றிய இடங்களைக் கண்டோம். மரங்களிலும் துதிக்கை தோன்றிக் காணப்படும் இடங்கள் தமிழ் நாட்டில் உள.

### *சென்னை*

சென்னை, அரசினர் தோட்டத்தில் சட்ட சபை உறுப்பினர் விடுதிக்குச் செல்லும் வழியில் ஆலமர இயற்கை விநாயகர் கோயில் உள்ளது. ஆலமரத்தின் அடிப்பகுதியில் துதிக்கை, தொந்தி, கால்கள் படிப்படியாகத் தோன்றி வந்ததை அக்கோயிலிலுள்ள நிழற்படங்கள் விளக்குகின்றன.[35]

### *கோயிற்பட்டி*

கோயில்பட்டி (வ.உ.சி.) யில் இதே போன்ற அமைப்பு எட்டையா புரம் சாலையருகே நின்ற வேப்பமரத்தில் நாற்பதாண்டுகட்கு முன் தோன்றியதை ஆய்வாளர் அறிவார். இப்போது புளிய மரத்தில் விநாயகர் உரு தோன்றியுள்ளது என்கின்றனர்.[36]

## சிறப்புத் தன்மை வாய்ந்த கணபதிகள்

தமிழ் நாட்டில் ஓரிடத்தில் மட்டுமே காணத்தகும் அமைப்புடைய கணபதி சிலைகள் ஆங்காங்கே அமைந்துள்ளன. அவற்றின் தன்மைகளைக் காண்போம். இரண்டு கணபதிகளையும் இங்குக் கூறியுள்ளோம். அவற்றையும் சிறப்புத் தன்மையுடையனவாகக் கருதலாம்.

### 1. *நிறம் மாறும் விநாயகர்*

தக்கலை (குமரி) அருகேயுள்ள கேரளபுரத்தில் மகாதேவர் கோயிலில் சுவாமிக்கு வலப்புறம் ஓர் அரச மரத்தடியில் உள்ள விநாயகர்

ஆவணிமாதத்திலிருந்து ஆறுமாதம் வெள்ளை நிறமாகவும் மாசி மாதத்திலிருந்து ஆறுமாதம் கறுப்பு நிறமாகவும் தோற்றமளிக்கிறார். இச்சிலை சந்திரகாந்தக் கல்லால் உருவாக்கப்பட்டது என்பர். ஆய்வாளர் வெண்மையாக இருக்கும்போதும் கண்டார். கருமையாக இருக்கும்போதும் கண்டார். அவருக்குப் பின்புறமுள்ள அரசமரமும் வியக்கும் வகையில் உள்ளது. விநாயகர் வெண்மையாயிருக்கும்போது அரசமரத்தின் முன்பகுதிக் கிளைகளில் இலைகள் செழுமையாயிருக்கின்றன. பின்பகுதி இலையை உதிர்த்து விடுகின்றது. இம்மரத்துக்கும் கல்லுக்குமுள்ள தொடர்பு ஆராயத்தக்கது.

## 2. *தேன் உறிஞ்சும் விநாயகர்*

திருப்புறம்பயம் (தஞ்சை) சாட்சி நாதர் கோயிலிலுள்ள வெள்ளம் (பிரளயம்) காத்த விநாயகருக்கு ஆவணி மாதம் விநாயக சதுர்த்தியன்று தேனபிடேகம் நடைபெறும். தேனை விநாயகர் உறிஞ்சி விடுகிறார். இவ்விநாயகர் கடல்படு பொருட்களான நத்தைக்கடு. கிளிஞ்சல்கள். கடல்நுரை. சங்குகள். கடற்பஞ்சு முதலியவற்றால் அமைக்கப்பெற்றவர். விநாயகர் சதுர்த்தியன்று இரவு எட்டுமணி முதல் விடியும்வரை அபிடேகம் நடைபெறும். ஒருடின் (20படி) தேன் அபிடேகத்திற்கு வரும். ஒரு துணியில் 1 படி தேனை நனைத்து இச்சிலை மீது ஒத்தி ஒத்தி எடுப்பர் என்றும் அப்போது அச்சிலை தேன் முழுவதையும் உறிஞ்சிவிடும் என்றும். மீண்டும் மீண்டும் அவ்வாறே செய்வர் என்றும். முன்பு இதைப்போல இருமடங்கு தேனை இவ்விநாயகர் உறிஞ்சியதாகவும் திரு. காசிநாதபிள்ளை கூறினார்.[37]

## 3. *திருப்பரங்குன்றம் கரும்புவிநாயகர்*

திருப்பரங்குன்றம் (மதுரை) கோயிலில் முருகனுக்கு இடப்புறம் விளங்கும் கற்பகவிநாயகர் மேல் கைகள் இரண்டிலும் கரும்பினை- வில் போல் பிடித்துள்ளார். கீழ் வலக்கையில் தந்தம் விளங்க. கீழ் இடக்கை தொடையில் உள்ளது. தாமரை இருக்கையில் அமர்ந்துள்ளார். அவருக்கு மேலே பூதகணங்களும் தேவமாதரும் உளர். மேற்கைகளில் பாச அங்குசம் இல்லாத சிலை இது. கரும்பினை இவ்வாறு பிடித்த நிலையிலுள்ள சிலை வேறெங்குமில்லை. இது கி.பி. 6ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பாண்டியர் காலச்சிற்பமாகும்.[38] (நி.ப.எண்.17)

## 4. *வெண்ணெய் விநாயகர்*

சென்னை திருவல்லிக்கேணி பார்த்தசாரதிகோயில், நுழைவுவாயிலின் வலம்புரி விநாயகர் காட்சி தருகிறார். மேல் வலக்கையில் அங்குசமும் மேல் இடக்கையில் பாசமும் தாங்கியுள்ளார். கீழ் வலக்கையில் வெண்ணெய்

உள்ளது. நீண்ட துதிக்கை அதைத் தொடுகிறது. கீழ் இடக்கையில் தண்டாயுதம் உள்ளது. இவருக்கு வெண்ணெய் சாத்திவழிபட்டனர் .இக்காலத்தில் கோயில் நிர்வாகம் வெண்ணெய் சாத்துவதைத் தடைசெய்துள்ளது.[39] (நி.ப. எண். 18)

### 5. கற்பகவிநாயகர்

பிள்ளையார்பட்டிக் (பசும்பொன்) கற்பக விநாயகரின் தோற்றம் அவரைத் தமிழ்நாட்டு விநாயகருள் முந்தியவராகக் காட்டுகிறது. அவர் இரண்டுகைகளே கொண்டு விளங்குகிறார். அங்குச பாசங்கள் இல்லை. கால்கள் மடிந்திருக்க அமர்ந்த நிலை. இடக்கையை இடையில் நாட்டி அமர்ந்துள்ளார். வலக்கையில் சிவலிங்கம் தாங்கியுள்ளமை, இடப்புறமுள்ள தந்தம் குறுகிக் காணப்படுவது ஆகியன இவரது தனித்தன்மைகளாகும். பாண்டியரது கி.பி. 5ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டு இவரது குகைக்கோயிலில் உள்ளது. இவர் புடைப்புச் சிற்பமாக விளங்குகிறார்.[40] (முன்புற அட்டையில் படம் உள்ளது)

### 6. நரமுகவிநாயகர்

சிதம்பரம் தெற்கு வீதியில் மனிதமுகத்தோடு கூடிய நரமுக விநாயகர் உள்ளார்.[41] கலைக்களஞ்சியம் தொகுதி மூன்றில் (பக்.127) திருச்செங்காட்டங்குடியிலும் இத்தகைய விநாயகர் உள்ளார் எனப்படம் வெளியிட்டுள்ளனர். ஆக தமிழ் நாட்டில் இரு நரமுக விநாயகர்கள் உள்ளனர் இவரைச் சிறப்புத் தன்மை விநாயகர்களாகக் கொள்ளலாம். (நி.ப.எண்.15)

### 7. மூக்கறு விநாயகர்

விநாயகரை மட்டுமே குறைபாடுடைய சிலையாக இருந்தாலும் வைத்து வழிபடலாம் என்கின்றனர்.[42] காட்டு மன்னார் குடியிலிருந்து (தெ.ஆ) ஏழு கி.மீட்டர் தொலைவிலுள்ளது வேலம்பூண்டி. இங்கு மூக் கறு விநாயகர் சிலை உள்ளது. துதிக்கை முற்றிலுமாக வெட்டப்பட்டுள்ளது. ஆசிரியர் சிவசுப்பிரமணியன் என்பார் குதிரைகள் பூட்டிய தேர் வடிவில் கோயில் கட்டியுள்ளார். இதைப் போன்ற விநாயகர் வேறெங்குமில்லை எனத் தினமலர் குறிப்பிடுகிறது.[43]

ஆயினும் இதே போன்ற சிலையைத் திருமங்கலம் (மதுரை) பேருந்து நிலையத்திற்கு முன்பு ஆய்வாளர் கண்டார்.[44] ஆனால் இச் சிலையில் தலை வெட்டப்பட்டு ஒட்ட வைக்கப்பட்டுள்ளது. விபூதி இவர் மேனியில் கொட்டப்பட்டுள்ளது. கணபதி வழிபாட்டில் உறுப்புக்குறைந்த சிலைகள் இடம் பெறலாம் என்பர்.

### 8. மொட்டை விநாயகர்

மதுரை விளக்குத்தூண் அருகே கீழமாசி வீதியில் இவரது கோயில் உள்ளது. இச்சிலை முகலாயர் படையெடுப்பால் சேதமுற்றது. முகம், கை,

கால்களை இழந்து விளங்குவதால் இவரை மொட்டை விநாயகர் என அழைக்கின்றனர்.[45]

### 9. ஆதி விநாயகர்

ஸ்ரீவில்லிபுத்தூர் அருகே திருவண்ணாமலைக்கோயில் குன்றின் அடிவாரத்தில் உள்ளார். குளத்தில் மறைந்திருந்த இவர் வெளிக் கொணரப்பெற்றார். இவர் 17 அடி உயரம். (பீடம் 6 அடி என்பர்) ஆய்வாளர் கண்ட அமர்ந்த கோலவிநாயகருள் அதிக உயரமானவர் இவர் எனலாம் அது மட்டுமல்ல. இவரது துதிக்கையில் திருநீற்றுப்பட்டைகள் மேடுகளாக ஆங்காங்கே செதுக்கப்பட்டுள்ளன.[46] திருவக்கரை (தெ.ஆ.) விநாயகர் மிகவும் உயரமானவர் என்பாருமுளர்.

### 10. கங்கை கண்ட விநாயகர்

கும்பகோணம் (தஞ்சை) நாகேசுவரர்கோயில் சுவாமி மகாமண்டபத்தில் வலப்புறம் நிறுவப்பட்டுள்ளார். கங்கை கண்ட கணபதி கி.பி. 12ஆம் நூற்றாண்டில் முதல் இராசேந்திரசோழன் வங்கத்திலிருந்து கொண்டு வந்து நிறுவிய சிலை என்பர்.[47] (நி.ப.எண்.3) வலக்கை மேற்கையில் தந்தமும் கீழ்க்கையில் அட்சமாலையும் கொண்டு விளங்குகிறார். இடக்கை மேற்கையில் இலட்டுத்தட்டினையும், கீழ்க்கையில் தண்டாயுதம் ஊன்றியநிலையிலும் விளங்குகிறார். மேலே தேவமாதர் உள்ளனர்.

### 11. தான் தோன்றி விநாயகர்

மருதமலை (கோவை) அடிவாரத்தில் காணப்படும் தான் தோன்றி விநாயகர் போன்ற அமைப்பு தமிழ் நாட்டில் வேறெங்குமில்லை.

### 12. வெள்ளைப்பிள்ளையார்

திருவலஞ்சுழி (தஞ்சை) யிலுள்ள வெள்ளைப்பிள்ளையார் தோன்றிய வரலாறு புராண அடிப்படையிலானது. தேவரும் அசுரரும் திருப்பாற்கடலைக் கடைந்த போது அதினின்றும் ஆலகாலவிடம் தோன்றியது. விநாயகரை வணங்காமல் தொடங்கியதால் இவ்வாறு ஆயிற்றென்று கருதிக் கடல் நுரையால் விநாயகரை அமைத்து வழிபட்டனர். பின் அமுதம் பெற்றனர். அதுவே இவ்வெள்ளை விநாயகர், இவருக்கு திருமுழுக்கு இல்லை. பச்சைக் கற்பூரம் மட்டுமே சாத்தப்படுகிறது.[48] திருப்புறப்பயம் வெள்ளம் காத்த விநாயகர் சிலையில் சங்குகளும் இடம் பெற்றுள்ளன. அவர் செந்நிறம் வாய்ந்தவர். கடல் நுரையிலான பிள்ளையார் தமிழ்நாட்டில் வேறெங்குமில்லை.

### 13. சோணபத்திரக்கல்

திருநல்லூரில் (தஞ்சை) சோணபத்திரக்கல்லைப் பிள்ளையாராக வழிபடுகின்றனர். வேறு கோயில்களில் இருப்பதாகத் தெரியவில்லை.

### 14. திருநீலகண்ட விநாயகர்

சுசீந்திரம் (குமரி) தாணுமாலயன்கோயிலில் உள்ள திருநீல கண்ட விநாயகர் முன்புள்ள மேடையில் நவக்கிரகங்கள் தத்தம் வாகனங்களில் அமர்ந்துள்ளனர். மேலே இராசிமண்டலம் உள்ளது. இத்தகைய அமைப்பு வேறு விநாயகர் கோயில்களில் இல்லை.[49]

### 15. ஆதியந்தப் பிரபு

சென்னை அடையாறு மத்திய கைலாசு ஆலயத்தில் கொடுக்கப்படும் அர்த்த நாரீசுவரர் போன்ற நிழற்படத்தில் கணபதியின் இடப்புறம் அனுமன் தோன்றுகிறார். கணபதி பாதி அனுமன் பாதியாக அமைந்த செப்புச்சிலை நிறுவப்பட்டுள்ளது. கந்தகிரி (சேலம்)யிலும் இத்தகைய திருவுரு உள்ளது.

### 16. நாகபாசக் கணபதி

சங்கர நயினார் கோயில் (நெல்லை) கோமதியம்மை உடனாய சங்கரலிங்க சுவாமி கோயிலில் சுவாமி கோயில் கன்னி மூலையில் விளங்கும் கணபதி பாச அங்குசங்கட்குப் பதிலாக பாம்பினைப் பிடித்து ஆட்டுகிறார். அதே திருச்சுற்றில் பாம்புப்புற்றும் உண்டு.[50](நி.ப.எண்.27) நாகபாசம் கணபதிக்குரிய ஆயுதங்களில் ஒன்றாகும்.

### 17. ஈச்சனாரி

ஈச்சனாரி (கோவை) விநாயகர் திருமேனியில் உருத்திராக்க மாலைகள் சிலையிலே வடிக்கப்பெற்றுள்ளமை தனிச்சிறப்பாகும்.

### 18. மாயப்பிள்ளையார்

திருப்பத்தூரில் (வ.ஆ.) மாயப்பிள்ளையார் திடீரென்று தோன்றியிருக்கிறார். சிறுவர் விளையாட்டாகப் பூசை செய்து வந்த விநாயகர் இன்று வளர்ந்து இடுப்பளவு பூமியிலிருந்து வெளி வந்திருக்கிறார். நள்ளிரவில் ஒரு பாம்பு அப்பிள்ளையாரைச் சுற்றிக் கொண்டிருப்பதைப் பலர் கண்டனராம்.[51]

### 19. பாதிரிப் பிள்ளையார்

திருப்பாதிரிப்புலியூரில் மேற்கு மதில் விநாயகர் தம்மேல் திருக்கரங்கள் இரண்டிலும் பாதிரிப் பூக்களைப் பற்றிக் கொண்டிருக்கிறார்.[52]

### 20. கயிலாசநாதர் கோயில் விநாயகர்

காஞ்சி கயிலாய நாதர் கோயிலுள்ள பிள்ளையார் பொதுவான அமைப்பிலிருந்து மாறுபட்டுள்ளார். வலது மேற்கைகளில் பாசம். அங்குசம். வலது கீழ்க்கையில் தந்தம். இடக்கை கொழுக்கட்டை ஏந்தவில்லை. மாறாக இடத்தொடையில் அமர்த்தப்பட்டுள்ளது. துதிக்கை மேல் நோக்கி

வளைந்துள்ளது. அதில் கொழுக்கட்டை உள்ளது. இவர் காலத்தில் இடக்கையில் கொழுக்கட்டை கொடுக்கும் வழக்கமில்லை என அறிகிறோம். மணற்கல்லால் அமைந்த சிற்பம் இது. (நி.ப.எண்.8) இராச சிம்ம பல்லவனும் அவன் மகன் மூன்றாம் மகேந்திரனும் அமைத்த கோயில் இது. பல்லவர் கோயில் பரிவார தேவதையாகக் கணபதி முதலில் காணப்படுவது இங்குத்தான்.[53]

### 21. ஆறுமுக கணபதி

பாண்டிச்சேரி மணக்குள விநாயகர் கோயில் வலப்புறச்சுவரில் ஆறுமுகப்பிள்ளையார் புடைப்புச் சிற்பமாகக் காணப்படுகிறார்.[54]

### 22. ஒலி எழுப்பும் கணபதி

காஞ்சிபுரம் பஞ்சுப் பேட்டைப் பகுதியில் திருவோண காந்தன் தளி என்னும் பாடல் பெற்ற கோயிலில் கருவறை மண்டபத்தின் நுழை வாயிற் சுவரின் முகப்பில் விநாயகர்திருவுருவம் உள்ளது. அவர் அருகே காதுகளை அணுக வைத்துக் கேட்டால் ஒருவகை ஓங்கார ஒலி ஒலிப்பதைக் கேட்கலாம்.[55] இவ்வாறான முருகன் சிற்பம் நெல்லையருகே உள்ளது.[56]

### 23. பதினாறு கைகள் கொண்டவர்

சங்கரன் கோயில் (நெல்லை) சங்கரலிங்க சுவாமி கோயில் திருச்சுற்றில் வடபுறம் சுவரில் பதினாறு கைகளைக் கொண்ட உச்சிட்ட கணபதி உருவம் அமைந்துள்ளது. இவ்வுரு சிவனையும் மிஞ்சியவர் கணபதி என்பதைக் காட்டுகிறது..

### 24. இருகைகளிலும் கொழுக்கட்டை

சேலம் சுகவனேசுவரர் கோயிலில் ஔவையாரால் பாடப் பெற்ற கணபதி கீழ்க்கைகள் இரண்டிலும் கொழுக்கட்டை ஏந்தியவராகக் காணப்படுகிறார்.

## கணபதி கையில் ஏந்தும் பொருட்கள்

1. பாசம் - இது கயிறு. நாகமே பாசமாக அமைவதுமுண்டு
2. அங்குசம் - யானையை அடக்கப்பயன்படுவது
3. தந்தம் - ஒடிந்த யானைக் கொம்பு
4. வேதாளம் - வீரகணபதி கையில் விளங்கும் பூதம்
5. சக்தி வேல் - வீரகணபதிக்குரியது
6. அம்பு
7. வில்
8. சக்கரம் - இது பல வடிவங்கள் பெறும்,

9. கத்தி - பிச்சுவா என்பர். தலைப்பக்கம் மண்டை ஓடு போலிருக்கும்.
10. கேடகம் - வெட்டினைத் தடுக்கப் பயன்படுவது
11. சம்மட்டி - கனத்த தலைப்பகுதியுடையது. இரும்பாலானது.
12. கதை - குண்டாந்தடி
13. நாகபாசம் - பாம்பே கயிறாக அமையும்
14. சூலம் - மூன்று நுனிகளையுடையது
15. குந்தாலி - தலைகன்த்து. கூரிய நுனியுடைய இரும்பு
16. மழு - வாய்ச்சி எனும் கருவியின் வேறுபட்டது
17. கொடி - வெற்றிக்கு அறிகுறி
18. தண்டம் - நீளமான கைத்தடி
19. கமண்டலம் - நீர் வைக்கும் பாத்திரம்
20. பரசு - மழுப்போன்றது
21. கரும்புவில் - மன்மதனை வென்றதைக் காட்டும்
22. சங்கு - வெற்றியை அறிவிப்பது
23. பூ அம்பு - மன்மதனிடம் பறித்தவை
24. கோடரி - வெட்டுவதற்குப் பயன்படும்
25. அட்சமாலை - உருத்திராக்கமாலை
26. சாமரம் - கவரிமான் முடி
27. கட்டுவாங்கம் - நீளமான கத்தி
28. தீ அகல் - தீப்பிழம்பு
29. வீணை -- வீரர்க்கு உணர்ச்சியூட்டுவது

இவையனைத்தும் கணபதி என்னும் நூலில் கண்டவை.[57]

## செப்புப் படிமங்கள்

செப்புத் திருமேனி என அழைக்கப்படும் படிமங்கள் ஐந்துவகை உலோகங்களின் கலவையால் வார்த்துச்செய்யப்படுகின்றன. கும்பகோணம், சுவாமிமலை (தஞ்சை) முதலிய இடங்கள் இப்படிமங்கள் செய்வதற்குப் பெயர் பெற்றவை ஆகும். பல்லவர் காலத்திலிருந்தே தமிழர் உலோகச் சிலை செய்வதில் வல்லுநராக விளங்கினர். சென்னை அருங்காட்சியகத்தில் கணபதியின் படிமங்கள் நான்கு உள்ளன. அவற்றை வகைப்படுத்தலாம். எல்லாம் பொதுத் தோற்றத்தில் உள்ளன.[58]

| கோலம் | கிடைத்த இடம் | உயரம் | நூற்றாண்டு |
|---|---|---|---|
| 1. நின்றகோலம் | வேளாங்கன்னி (நாகை) | பீடத்துடன் 2அடி பீடம் ¾ அடி | கி.பி. 10 |
| 2. நின்றகோலம் | கோடியக்காடு (தஞ்சை) | பீடத்துடன் 1½ அடி | கி.பி.10 |
| 3. நின்றகோலம் | திருவாலங்காடு (செங்கை) | பீடத்துடன் 1¼ அடி | கி.பி. 12 |
| 4. நடனமாடும் கணபதி வலக்கால் தூக்கியவர் | தென்னிந்தியா | 2¼ அடி பீடமில்லை | கி.பி. 17 |

திருவிழாக் காலங்களில் சுவாமி அம்பாள் சப்பரம் உலா வரும்போது பஞ்ச மூர்த்திகளான விநாயகர், தேவாரம் பாடிய மூவர், சண்டிகேசுவரர் ஆகிய ஐவருள் கணபதி முதலில் எழுந்தருளுவார். இதற்காக பெரிய கோயில்களில் செம்புக்கணபதி சிலைகள் உண்டு. அவை பெரும் பாலும் நின்ற கோலத்தில் பொதுத் தோற்றத்தில் காணப்படும். (பக்கம் 160)

## செம்புத்திருமேனி–தனித்தன்மை வாய்ந்தவை

### 1. *தஞ்சை நாயக்கர் கொலு மண்டபம்*

தஞ்சாவூர் அரண்மனை வளாகத்தில் அமைந்துள்ள கலைக்கூடத்தில் ஓர் அரிய செப்புச் சிலை உள்ளது. (எண் 271) இது முத்துப்பேட்டையிலிருந்து கிடைக்கப்பெற்றது. இதைச்செய்த சிற்பி வட இந்தியப் பாணியை இச்சிலையில் புகுத்தியிருக்கிறார். பிரபாவளி சாஞ்சி தூபி பாணியில் அமைக்கப்பட்டுள்ளது. கணபதி தலையில் சடை முடி உள்ளது. இடக்கொம்பு ஒடிந்துள்ளது. வயிற்றின் மேல் பூணூலுக்குப் பதில் நாகபந்தம் உள்ளது. வலப்பின்கையில் உருத்திராக்க மாலை உள்ளது. மற்றொரு வலக்கையில் தன் ஒடிந்த தந்தம் உள்ளது. இடப் பின்கை கீழே ஊன்றிய நிலையிலுள்ளது அங்குசத்தைப் பற்றியுள்ளது. மற்றுமோர் இடக்கையில் துதிக்கையால் பற்றப்பெற்ற இலட்டுத்தட்டு (மோதகத்தட்டு) உள்ளது. இது கி.பி. 11ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. பெருச்சாளி வாகனமுண்டு. [59]

இதைப்போன்ற கற்சிலை கும்பகோணம் நாகேசுவர சுவாமி திருக்கோயில் கங்கை கண்ட கணபதி என்னும் பெயரில் உள்ளது. ஒப்பீட்டிற்காக நி.ப.எண்.3ஐக் காண்க. இது வங்கப்பகுதியில்

ஆண்டபாலர்களது சிலை. ஒப்பிடுவதற்காக இச்சிலையையடுத்து (சிலை எண். 158) தமிழ்நாட்டுப் பாணியில் அமைந்த சிலை வைக்கப்பெற்றுள்ளது. இது மதுக்கூரிலிருந்து கிடைத்தது. வலது மேல் கையில் அங்குசம், இடது முன்கையில் பாசம். வலது முன்கையில் ஒடிந்த கொம்பு. இடது முன் கையில் துதிக்கையால் பற்றப் பெற்ற நிலையில் மோதகம், தலையில் மகுடம் உள்ளது.[60]

*திருவானைக்கா*

முதல் இராசேந்திர சோழன் வங்காள தேசம்வரை வெற்றி கண்டான். ஆயிரம் ஆண்டுகட்கு முன்வென்ற அவன் அங்கிருந்த கலைப்பொருட்கள் சிலவற்றைக் கொணர்ந்துள்ளான்.[61] கும்பகோணத்தில் "கணபதி கரத்தில் சிங்கம் பூண்டு மோதகம் கொண்டுள்ளதே அழகாயிருக்கும். இச்சிலையைப் பார்த்துத் தமிழகச் சிற்பி ஒருவர் கி.பி.12ஆம் நூற்றாண்டிலேயே ஒரு கணபதியைச் செம்பில் வடித்திருக்கிறான் அது இப்பொழுது திருவானைக்கா கோயிலில் இருக்கிறது. வங்கத்துக் கலை (இடக்கையில் மோதகம் கொடுப்பது) தமிழகக் கலைக்கு அடிப்படையாக அமைந்ததை இங்கே காண்கிறோம்" என்கிறார் இரா. நாகசாமி.

## 3. *திருவண்ணாமலை*

திருவண்ணாமலை அண்ணாமலையார் திருக்கோயிலில் காலத்தால் பழமையான "பக்தானுக்கிரக சோமாஸ் கந்தர் செப்புச் சிலை உள்ளது. இது கி.பி. 11ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. இச்சிலையில் கந்தருடன் கணபதியும் சேர்ந்துள்ளார். இத்திருமேனி எவ்விழாவிலும் வெளியே புறப்படுவதில்லை.

சுவாமி அம்மன் இருவருக்கும் இடையே கந்தர் ஐந்தடி உயரமுடையவராக இரு கரங்களிலும் தாமரை மலர்களை ஏந்தியவராக விளங்குகின்றார்.

சுவாமியின் வலப்பக்கம் பீடத்தில் மூலையில் முன்புறமாகத் தவழ்ந்து தாவிவரும் கணபதி சிலை உள்ளது. இக்கணபதி ஒன்றரை அடி (45 செ.மீ.) உயரமுடையவராகக் கையில் மாங்கனி கொண்டு விளங்குகிறார். இந்த அமைப்பு தமிழ்நாட்டில் வேறெங்கும் காண இயலாதது. இவரது கையிலுள்ளது மோதகம் என்பர். மாங்கனியாகவும் இருக்கலாம் என்று கூறுவர் மேலும் இருகைகளைக் கொண்ட கணபதி இவர்.[63]

## 4. *இக்காலத்து அரிய சிலை*

திருச்சி பாரத மிகுமின் (பெல்) நிறுவனத்தில் நடனமாடும் கணபதி சிலை ஆறடி உயரத்தில் அமைக்கப்பட்டுள்ளது. நடராசர்போல கையை வீசி இடக்காலைத் தூக்கி ஆடுகிறார். இதன் எடை 450 கிலோ. மதிப்பு சுமார் ரூ.80

ஆயிரம் மேற்கைகள் அங்குசம், பாசம் ஏந்தியுள்ளன. முகத்தைச் சாய்த்துத் துதிக்கையை நீட்டி ஆடுவது போல் அமைத்தது புதுமை. கால்களுக்கிடையே பெருச்சாளியும் நடனமாடுவது போல் அமைக்கப்பட்டுள்ளது. இதை அமைத்தவர் சுவாமிமலை எஸ். தேவசேனாபதி ஸ்தபதி.[64]

## ஓவியங்களில் கணபதி

*பிள்ளையார் சுழி*

பிள்ளையார் சுழி என்பது அகரம் உகரம் மகரம் ஆகிய மூன்றையும் அடக்கியுள்ள நாதப்பிரமம் ஆகிய ஓம் என்னும் பிரவணத்தின் ஆரம்ப வடிவம். அதிலுள்ள வட்ட வடிவம் சிவசக்தி பீடம் என்னும் ஆவிடை என்றும் நீண்டு நிற்கும் கோடு மூலத்தம்பம் எனும் சிவலிங்கம் என்றும் சொல்லப்படும். இவற்றை முறையே விந்து, நாதம் என வழங்குவர்.[65]

மேலும் பிள்ளையார் சுழியின் வட்ட வடிவு மூலாதார பீடம் எனவும் நீளவடிவு அதன் கண் எழும் பிரமநாடி எனவும் அது மூலக் கணபதி நிலையம் எனவும் அக்கணபதி சொருபமாகிய பிரணவாதாரம் எனவும், எழுத்துக்களின் வித்து எனவும் வேதத் தலை தரு பொருளாய் விளங்கும் ஊமை எழுத்து எனவும் வழங்கப்படும்[66]

ஒருவன் யாதேனும் ஒரு பொருள் பற்றியோ செய்தி குறித்தோ எழுதுவதற்குத் தொடங்குமுன் பிள்ளையார் சுழியை எழுதுவது அவன் செய்ய மேற்கொள்ளும் செயல் இடையூறின்றி நிறைவேற்றி அருளுமாறு பிள்ளையார் திருவுருவினைப் பிடித்து வைத்து வழிபடுவது போன்றதாகும்.[67]

*பிள்ளையாரும் ஓம்காரமும்*

ஓம் என்னும் மந்திர வடிவு பிள்ளையார் திருமுகத்தில் அடங்குவதைச் சிற்பச் செந்நூல் விளக்கப்படம் மூலம் காட்டியுள்ளது. நி.ப.எண்.- 19, இல் ஓம்காரம் வலம்புரி விநாயகரைச் சுட்டும்.

*ஓம்காரத்தின் சுருங்கியவடிவமே பிள்ளையார் சுழி*

ஓம்காரத்தின் சுருங்கிய வடிவமே பிள்ளையார் சுழி என்பதை அதே சிற்பச் செந்நூல் அடுத்துள்ள வரைபடத்தின் மூலம் விளக்கியுள்ளது (நி.ப.எண் 20) உகரம் இடம்புரி விநாயகரைச் சுட்டும்.[69]

## வழிபடப் பெறாத ஓவியங்கள்

தமிழ்நாட்டில் பல கோயில்களில் கணபதி ஓவியங்கள் உள. அவற்றிற்கு நாள் வழிபாடு பூசை முதலியன இல்லை. ஆயினும் காட்சிப் பொருளாகக் கருதலாம். அவை அமைந்துள்ள இடங்களைக் காண்போம்.

*திருக்குற்றாலம்*

திருக்குற்றாலம் (நெல்லை) சித்திரசபையில் மகாகணபதி, தருணகணபதி, பக்தி கணபதி, வீரகணபதி, பிங்கள கணபதி, உச்சிட்ட கணபதி (தேவியில்லை) சிப்பிரகணபதி, இலட்சுமி கணபதி, விக்னேசுவரர், ஏரம்பகணபதி, நிருத்த கணபதி, புவன கணபதி, ஊர்த்துவ கணபதி (தேவியைத் தழுவிய நிலை) சக்தி கணபதி, துவிச கணபதி, வல்லப கணபதி ஆகிய பதினாறு கணபதியின் வடிவங்கள் பலவண்ணங்களில் ஓவியமாகத் தீட்டப்பட்டுள்ளன.[70]

*சேண்பாக்கம்*

சேண்பாக்கம் (வ.ஆ) செல்வவிநாயகர் கோயிலில் வலப்புறச் சுவரில் பின்வரும் பதினோரு ஓவியங்கள் காணப்பெறுகின்றன. பாலகணபதி (தாமரையில்), நடனகணபதி, கற்பக கணபதி, ஓங்கார கணபதி, சிந்தாமணி கணபதி, செல்வ கணபதி, மயூர கணபதி, மூசிக கணபதி, வல்லப கணபதி, சித்திபுத்தி கணபதி, ஐம்முக கணபதி.[71]

*சங்கரநயினார் கோயில்*

சங்கரநயினார் கோயில் (நெல்லை) சங்கரநாராயணர் கோயில் சுவர்களில் இருபுறமுமாக முப்பத்திரண்டு கணபதி ஓவியங்களை ஐம்பது ஆண்டுகட்கு முன் ஆய்வாளர் கண்டார். இன்று அவை அழித்தெழுதப்பட்ட நிலையில் வலப்புறச்சுவரில் மட்டுமே கணபதி ஓவியங்கள் பதினாறு இடம்பெற்றுள்ளன.[72]

*கரும்பாயிரப்பிள்ளையார்*

கும்பகோணம் (தஞ்சை) திருமஞ்சனக்காரத்தெருவிலுள்ள கரும்பாயிரப்பிள்ளையார் கோயில் சுவர்களில் கணபதி திருவிளையாடல் கள் ஓவியமாகத் தீட்டப்பெற்றுள்ளன.[73]

## சுதையுருவங்கள்

*பாண்டிச்சேரி*

பாண்டிச்சேரி மணக்குள விநாயகர் கோயில் வலப்புறச் சுவரில் கணபதியின் பல்வேறு வடிவங்கள் சுதையுருவில் காணப்படுகின்றன. அவற்றுள் பின்வருவன தமிழ்நாட்டில் வேறெங்கும் காண இயலாதவை. அவை வருமாறு: சயன கணபதி, பார்வதி தேவியின் இடுப்பில் புத்திர கணபதி, ஆறுமுக கணபதி, மயில்வாகன கணபதி, விட்டுணுராச கணபதி, யோக கணபதி (ஜெபமாலை, தண்டம் கொண்டவர்) டுண்டி கணபதி,

திருமணக்கோலத்தில் சித்திபுத்தி கணபதி, பார்வதி பூசை செய்யும் கணபதி அதைப்போல சிவன், முருகன், நம்பியாண்டார் நம்பி, இராவணன் பூசை செய்யும் கணபதி திருவுருவங்கள் உள.[74] இவை தனித்தனியாக அமைக்கப்பெற்றுள்ளன.

## மரச்சிற்பங்கள்

பெரிய கோயில்களிலுள்ள தேர்களில் கணபதி உருவங்கள் பல்வேறு வடிவங்களில் காணப்பெறுகின்றன. வாசுதேவநல்லூர் தேர், நெல்லையப்பர் தேர், ஆவுடையார் கோயில் ஆத்மநாதசுவாமி தேர், சிதம்பரம் அனந்தேசுவர கோயில் தேர், ஆகியவற்றில் காணப்படும் கணபதியின் நிழற்படங்கள் பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளன. (நி.ப.எண் 14)

### *சங்கரநயினார் கோயில்*

சங்கரநயினார்கோயில் கோமதியம்மை உடனாய சங்கரலிங்கசுவாமி கோயிலில் சங்கரலிங்கம் கோயிலுக்கும் சங்கரநாராயணர் கோயிலுக்கும் இடையே மரத்தினாலாகிய பூலித்தேவர் அறையுள்ளது. அதில் முன்புறத்தில் வடபுறம் ஒரு கணபதி சிற்பமுள்ளது. நின்றகோலத்தில் முகத்தைத் தென்புறமாகத் திருப்பி நிற்கிறார். அவருக்கு இடப்புறம் சக்தியும் நிற்கிறார் உயரம் ஓரடி இருக்கலாம்.

### *வேலூர் அருங்காட்சியகம்*

வேலூர் (வ.ஆ) அருங்காட்சியகத்தில் கோயம்பேடு (செங்கல்பட்டு) என்னுமிடத்தில் கிடைத்த கி.பி.18ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த வல்லப கணேசர் மரச்சிற்பமும், அரக்கோணம் வட்டத்தில் (வ.ஆ.) கிடைத்த பொய்கை நல்லூர் கணபதி சிற்பமும் உள்ளன. பொய்கை நல்லூர்ச் சிற்பம் திருவாசியோடு கூடியது. அமர்ந்த கோலம்.

### *தனித்தன்மை*

அபூர்வமான நடன கணபதி சிலை பேரூர் (கோவை) பட்டீசுவரர் கோயில் பெரிய தேரில் முன்புறமுள்ளது நடனகணபதி உச்சிட்ட கணபதியாகவும் விளங்குகிறார்.[75] தூக்கிய இடக்காலில் தேவி அமர்ந்துள்ளார். தேரின் பின்புறம் யோக நரசிம்மர் உள்ளார்.

## காலத்தின் கோலங்கள்

பல்வேறு காலங்களிலும் கோயில்களை அமைத்த சிற்பிகள் தம் கற்பனைத் திறத்தைக் கணபதியுருவினைத் தூணில் அமைக்கும்போது

காட்டியுள்ளனர். கோபுரங்களிலும் இத்தகைய சிற்பங்கள் உள. வேலூர் ஜலகண்டேசுவரர் திருக்கோயில் கல்யாண மண்டபத்தூண்கள் கணபதி உருவங்கள் பலவற்றைக் காணும் காட்சிக் கூடமாகும்.

*நின்ற கோலம்*

மாமல்லபுரச் சிற்பிகள் இக்காலத்தில் வடித்துள்ள கணபதி சிலைகள் காண்பவர்க்கு நகைப்பை விளைவிப்பனவாகும். புதிய கணபதி வடிவங்களை அங்குள்ள சிற்பக் கூடங்களில் காணலாம்.

*மத்தளம் அடிக்கும் கணபதி*

கணபதி நின்று கொண்டு தம் இருகைகளாலும் (இருகைகளே உண்டு) தோளில் தொங்கவிடப்பட்டுள்ள மத்தளத்தை அடித்துக் கொண்டிருக்கிறார்.

*மாப்பிள்ளை விநாயகர்*

ஆறடி உயரத்தில் நின்று கொண்டிருக்கும் கணபதி அங்க வஸ்திரத்தைத் தோளில் தொங்கவிட்டுக்கொண்டு அதன் இரு தலைப்புகளையும் தன் இருகைகளால் (இருகைகளே) பிடித்துக் கொண்டு நிற்கிறார்.

*அமர்ந்த கோலம்*

நன்றாகச் சப்பணம் கூட்டி அமர்ந்த கணபதி தம் இரு கைகளாலும் விரித்து வைத்த புத்தகத்தை ஏந்திப் படிக்கும் காட்சியை இங்கு மட்டுமே காணலாம். இச்சிலையில் உயரம் அரை அடி முதல் மூன்றடி வரை அமையும்.

அமர்ந்த கோலத்தில் இருகைகளில் வீணை ஏந்தி தந்தியை மீட்டும் தந்திமுகன் சிலைகளுமுள.

*கிடந்த கோலம்*

இருகைகளைக் கொண்ட கணபதி திருவரங்கர் போலப்பள்ளி கொண்ட கோலத்தில் உள்ளார். பல்வேறு உயரங்களிலுள்ள சிலைகள் காணக்கிடக்கின்றன.

*நடனமாடும் கோலம்*

பிற இடங்களிலுள்ள நடனக் கோலம் போலன்றி இங்கு முகத்தை மேல் நோக்கியும் துதிக்கையை உயரத்தூக்கியும் ஆடும் கணபதி ஆறடி உயரத்தில் உள்ளார்.

*தவழும் கோலம்*

தவழும் கண்ணன் உருவம் போல கால்களால் தவழ்ந்து இருகைகளுள் ஒரு கையைத் தரையில் ஊன்றி ஒரு கையை உயரத்தூக்கியுள்ளார். தூக்கிய கையில் பலாப்பழம் அல்லது மோதகம் ஏந்தியுள்ளார்.

சிற்ப நூல் இலக்கணத்திற்குச் சிறிதும் பொருந்தாத வகையில் பல சிலைகள் இருந்தன. அங்குள்ள சிற்பியிடம் ஆய்வாளர் வினவிய போது சிற்பி கூறிய பதில்: கணபதி எங்களுக்கு ஒரு பபூன் போல. (விகடராசர் என்றழைப்பது இதனால்தானோ?) எங்கள் கற்பனை வழியே கணபதி உருவை அமைக்கின்றோம். அத்தனை சிலைகளையும் அயல் நாட்டினர் கலைக்கண் கொண்டு நோக்கி விலைக்கு வாங்கிச் செல்கின்றனர் என்கிறார்.[76]

## தூண் சிற்பங்கள்

தமிழ் நாட்டிலுள்ள பெரிய சிவாலயங்களிலுள்ள தூண்களிலும், கோபுரங்களிலும், சுவர்களிலும் கணபதி உருவினைப் பல கோலங்களில் வடித்துள்ளனர். இவை அனைத்தும் வழிபாட்டிற்குக் கொள்ளப்பட்டில.

*நின்ற கோலம்*

வைத்தீசுவரன் கோயில் (தஞ்சை) இராசகோபுரத்தின் உட்புறம் வாயிலுக்கு மேலே நோக்கினால் வலப்புறம் ஒன்றும் இடப்புறம் ஒன்றுமாக இரு கணபதிகள் நின்றகோலத்தில் உள்ளனர்.

*நின்று வணங்கும் கோலம்*

ஆழ்வார்திருநகரி (வ.உ.சி.) யில் ஊருக்கு வடபுறம் திருநெல்வேலி செல்லும் பெருவழியில் ஆற்றின் கரையில் அமைந்த மண்டப முகப்புத் தூண்கள் ஒன்றில் இருகைகளையுடைய கணபதி நின்று கொண்டு கைகளைக் குவித்து வணங்குகிறார். (நி.ப.எண். 25) இவரது கால்கள் குட்டையாக இல்லாததால் இவரைக் கணபதியாக ஏற்றுக்கொள்ளுதல் இயலாது என்பர் முனைவர் சுப. அண்ணாமலை.[77] இது சிற்பியின் கற்பனை உருவமே என்பர் முனைவர் ஆர். வெங்கட்ராமன்

*அமர்ந்த கோலம்*

சிதம்பரம் (தெ.ஆ) சபா நாயகர் கோயிலில் சபாநாயகருக்கு வலப்புறம் அமைந்துள்ள திண்ணையில் ஏறப்படிகள் உள்ளன. அப்படிகளை நோக்கி நின்றால் நமக்கு வலப்புறமுள்ள தூணில் ஓர் அரிய காட்சி புலப்படும். அமர்ந்த நிலையிலுள்ள கணபதி தம் அருகிலுள்ள தேவியைக் குளிப்பாட்டுகிறார். முகத்தைத் திருப்பிய நிலையில் துதிக்கையில் குடத்தை ஏந்தி உயர்த்திய நிலையிலுள்ளார். இது தனித்துவம் வாய்ந்த அபூர்வமான தூண் சிற்பம்.[78] பொதுவாக வழிபடும் சிலைகள் அமர்ந்த கோலமே கொண்டிருக்கும்.

*நடனமாடும் கோலம்*

மதுரையிலும். பேரூரிலும் காணப்படும் தூண் சிற்பங்கள் அற்புதமானவை. அவை வருமாறு

*மதுரை*

மதுரை மீனாட்சியம்மன் கோயிலிலுள்ள ஆயிரக்கால் மண்டபத்தின் தூண் ஒன்றில் இடக்காலைத் தூக்கி ஆடும் கணபதி சிலை உள்ளது. இடத்தொடையில் தேவியை அமர்த்தியிருப்பது சிற்பியின் கற்பனை (நி.ப.எண்.12) இம்மண்டபம் வீரப்பநாயக்கர் காலத்தில் தளவாய் அரியநாத முதலியாரால் (கி.பி.1572) கட்டப்பட்டதென்பர்.[79] இடக்காலைத் தூக்கி ஆடுகிறார்.

*பேரூர்*

கணபதி. பேரூர் (கோவை) பட்டீசுவரர் திருக்கோயிலுள்ள கனகசபையில் நடராசர் இடக்கால்தூக்கி ஆட அவருக்கு வலப்புறமுள்ள தூணில் பெருச்சாளியின் மேல் இடக்காலை ஊன்றி வலக்காலைத் தூக்கி ஆடுகிறார். வலம்புரியாக வளைந்த துதிக்கையில் அமுத கலசம் உள்ளது. இக்கனகசபைக் கூடம் மதுரை அழகாத்திரி நாயக்கரால் (கி.பி.18ஆம் நூற்றாண்டு) கட்டப்பெற்றது.

*தவழும் கோலம்*

வேலூர் (வ.ஆ.) சலகண்டேசுவரர் கோயில் தூணில் காணப்படும் தவழும் கணபதி பெண்ணுருவில் உள்ளார். இடக்கையை ஊன்றி துதிக்கையை நீட்டி வலக்காலை மடித்துத் தரையை உதைக்கும் நிலையில் உள்ளார். (நி.ப.எண். 1)

*வில்லேந்திய கோலம்*

திருச்சி மாவட்டம் செயங்கொண்டானிலிருந்து பத்து கிலோ மீட்டர் தொலைவிலுள்ள உடையார் பாளையம் வைரவனீச்சுவரர் கோயிலில் வில்லேந்திய விநாயகர் உள்ளார். இவர் அருச்சுனனுக்கு வில்வித்தை (பாசுபதாஸ்திரம் ஏவ) கற்பித்தாராம். [80] (நி.ப.எண். 6)

## பெண்கோலம்

கணபதியைப் பெண்ணுருவில் காண விரும்பிய சிற்பிகள் தமிழ்நாட்டுப் பெரிய சிவன் கோயிலிலுள்ள தூண்களிலும். தேர்களிலும் கணேசானி, வைநாயகி, விக்கினேசுவரி என்றழைக்கப்படும் பெண் பிள்ளையார்களைச் செதுக்கியுள்ளனர். பிள்ளையாரின் பெண் வடிவிற்குப் புராண வரலாறில்லை. வட நாட்டில் இத்தகைய சிலைகள் உள. [81]

*சுசீந்திரம் அமர்ந்த கோலம்*

சுசீந்திரம் (குமரி) தாணுமாலயன் கோயிலின் சிவன் சந்நிதியில் இடப்புறமுள்ள தூணில் கணேசானி உருவம் அமைந்துள்ளது. சுமார் இரண்டடி

உயரத்தில் உள்ளது. விநாயகரைப் போலவே மேல் வலக்கையில் அங்குசமும் மேல் இடக்கையில் பாசமும் கொண்டிருக்கிறார். அபய வரத முத்திரைகளை முறையே கீழ் வலக்கையும், கீழ் இடக்கையும் கொண்டுள்ளன. கணேசானி சிலைகளில் இடுப்புக்குக் கீழே மனிதனுடைய கால் அமைப்புக் கொண்ட சிலை இஃதொன்றேயாம். வலக்காலைமடித்து இடக்காலைத் தொங்கவிட்ட நிலையில் அமர்ந்துள்ளார்.[82] இவ்வுரு கி.பி. 15-ஆம் நூற்றாண்டில் அமைக்கப்பட்டது.

பெண் தன்மை வாய்ந்த பிள்ளையாரின், மூலம் காண முயன்ற முனைவர் எஸ். பத்மனாபன் திருஞானசம்பந்தரின் 'பிடியதன் உரு உமை கொண்டதை'க் குறிப்பிடுகிறார். [83] ஆயினும் சுசீந்திரம் கணேசானி உருவைப் பார்வதிதேவி கொண்ட பிடிவேடமாகக் கருதுதல் இயலாது. ஏனெனில் இவ்வுருவில் களிற்றிறுக் குரிய நீண்ட கொம்பு காணப்படுகிறது. (நி.ப.எண். 10)

### மதுரை - நின்ற கோலம்

மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் கோயிலில் சுவாமி சந்நிதியில் இடப்புறமுள்ள துவாரபாலகருக்கு முன்புள்ள தூணில் கணேசானி உருகாணப்படுகிறது. இருகைகளைக் கொண்ட உருவம் இது. வலக்கையில் மீனாட்சியம்மை போல பூச்செண்டு தாங்கியும் இடக்கையைத் தொங்கவிட்டும் உள்ளார். அரைக்குக் கீழேயாழியின் உருவம் உள்ளது. (நி.ப.எண். 11) இவ்வுருவம் நாயக்கமன்னர் காலத்தில் கி.பி. 17ஆம் நூற்றாண்டில் அமைக்கப்பட்டது.

### வீணை ஏந்திய கணேசானி

நாகர்கோயில் (குமரி) வடிவீசுரம் அழகம்மை கோயிலில் சுவாமிக்கு நேராக அமைந்த துவாரபாலகருள் வலப்புறம் அமைந்த துவாரபாலகர் நிற்கும் தூணின் புறத்தே ஓரடி உயரத்தில் கணேசானி உரு உள்ளது. இஃதும் அரைக்குக் கீழே யாழி வடிவம் உடையதாகக் காணப்படுகிறது. இது கைகளில் வீணையைத் தாங்கியுள்ளது. [84]

சுசீந்திரம் கோயில் தெப்பக்குளக்கரையிலுள்ள திருவாவடுதுறை மண்டபத்துத்தூண் ஒன்றிலும் மேற்கூறியவாறமைந்த கணேசானி உருவம் உள்ளது. [85]

### போர்க்கோலம்

போர்க்கோலம் கொண்ட கணேசானி உருவம் வாசுதேவ நல்லூர் (நெல்லை) தேரில் உள்ளது. அரைக்குக்கீழே யாழி உருவம். வாலை மேலே தூக்கிக் கொண்டு ஓடுவது போன்ற தோற்றம். ஒரு கையில் கோடரி மற்றொரு

கையில் வாளும் கொண்டு விளங்குகிறார். [86] பெண்களும் வாளேந்தலாம் என்பதை அன்றே குறிப்பாகக் காட்டியுள்ளான் தமிழ்நாட்டுச் சிற்பி.

சென்னை அரசு அருங்காட்சியகத்தில் பழநி (மதுரை) யிலிருந்து பெறப்பட்ட கி.பி.18-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கணேசானி உருவம் உள்ளது. இதிலும் இடுப்புக்குக் கீழேயாழி உருவமும் இடக்கையில் கேடகமும் வலக்கையில் தண்டமும் கொண்டு வாலைக்கிளப்பிக் கொண்டும் வாயைப் பிளந்து கொண்டும் நிற்கக் காணலாம்.

## பஞ்சபூத வடிவம்

மண். நீர். தீ. காற்று. விண் (ஈதர்) ஆகிய ஐம்பெரும் பூதங்களின் வடிவமே கணபதி. அவர் உருவத்தில் இவ்வைந்தும் அடங்கியுள்ளன. நீண்ட சதுரம் மண்ணையும். வட்டம் நீரையும், முக்கோண வடிவம் தீயையும். பிறைத்திங்கள் வடிவம் காற்றையும், தீச்சுடர் விண் (ஈதர்)ணையும் குறிக்கும் என்கிறார் அலிசுகெட்டி. [87] (வ.ப.எண். 3)

## வளர்கலையில் கணபதி

சென்னையை யடுத்த சோழ மண்டலம் என்னும் சிற்றூரில் கோபால் என்னும் ஓவியர் உள்ளார். இவர் செப்புத்தகடுகளில் தாந்திரீக ஓவிய வகையைச் சார்ந்த 32 கணபதி ஓவியங்களை வளர் கலை முறையில் (Con temporary Art) வரைந்துள்ளார்.

அவர் செப்புத் தகட்டில் ஓவியமாக வரைந்த அர்த்த கணேசுவரி உருவம் யோகதத்துவத்தை அடிப்படையாகக் கொண்டது (நி.ப.எண். 16) வயிற்றுக்குக் கீழே வரை நீண்ட துதிக்கை மூலாதாரத்தின் அதிபதி கணபதி எனக் காட்டுகிறது. ஆந்தை முகம் ஞானத்தைக் காட்டுகிறது. [88] வலப்புறம் சிவன். இடப்புறம் தேவி. நடுவில் கணபதி விளங்கக் காணலாம்.

*பூரணதத்துவமகா கணபதி*

மேலே ஒரு கணபதி முகத்தில் தொடங்கிபடிப்படியாக ஒவ்வொரு முகத்தைக் கூட்டிக் கீழே ஒன்பது முகங்களை அமைத்துள்ளார். [89] பக்கங்களிலுள்ள கைகளின் எண்ணிக்கை தொன்னூறு!.

இயல் – 2

*அடிக்குறிப்புகள்*

1. அரு. ராமநாதன். விநாயகர் புராணம். ப. 506
2. ஆய்வாளர் கண்டறிந்தது.

3. ஆய்வாளர் பாளையங்கோட்டை (நெல்லை) குலவாணிகர்புரத்தில் திரு. எஸ்.கே. முருகன் வீட்டில் இவ்விநாயகரைக் கண்டார். பத்து ஆண்டுக்காலமாக இதற்குப் பூசை செய்து வருவதாகவும் அபிடேகம் செய்த போதும் கரைவதில்லை என்றும் கூறினார்.

4. ஞான பூமி. மே 1991. பெட்டிச் செய்தி-ஷண்முகபிரியா இச்செய்தி. அகத்தியர் மூலிகை ஜாலரத்தினம் என்னும் நூலிலும் உள்ளது என தினமணிக்கதிர் டிசம்பர் 27,1992 கூறுகிறது. ப. 16.

5. பக்தியோகம். நவம்பர் 91-தீபாவளிச் சிறப்பிதழ். மயிலை. சென்னை4.

6. ஆய்வாளர் நேரில் கண்டது.

7. கிருபானந்த வாரியார். விநாயகர் ப. 30.

8. ஆய்வாளர் நேரில் கண்டது.

9. S.K.R. Rao, Ganesa - Kosha, PP. 220-222.

10. மேலது ப. 222

11. மேலது ப. 232

12. கிருபானந்தவாரியார் அ.நூ. ப. 7

13. பெ. சுயம்பு கடவுள் உருவங்கள் ப. 75

14. கிருபானந்தவாரியார். அ.நூ.ப. 29

15. வை. கணபதிஸ்தபதி. சிற்பச்செந்நூல் ப. 275

16. மதுரை காமராசர் பல்கலைக் கழக நுண்கலைப் பேராசிரியர் டாக்டர் ஆர். வெங்கட்ராமன் ஆய்வாளரிடம் கூறியது.

17. ச. தண்டபாணிதேசிகர். கணபதி. ப. 44

18. S.K.R. Rao, Ganesa - Kosha, P. 260

19. கா. சுப்பிரமணிய பிள்ளை. சுந்தரமூர்த்தி சுவாமிகள் சரித்திரம் ப. 57 'திருநாவலூரர் பரவையின் துணை கொண்டுயோக நெறியிற்பயின்றார்' திருமூலர் இதைப் பரியங்க (கட்டில்) யோகம் என்பார்.

20. இப்பத்தியில் கூறப்பட்ட இடங்களை ஆய்வாளர் நேரிற் கண்டறிந்தார்.

21. Lokayata, Devi prasad Chattopadhyaya. pp. 138-139.

22. Heras - The Problem of Ganapathi, p. 35.

23. Alice Getty, A Monograph on the Elephant faced God. p. 57 In Java there is a statue of Ganesa that holds a small Nandhi, the vahana of siva.

24. ஆய்வாளர் கருத்து.

25. பிள்ளையார் கதைகள் ப. 79.

26. Census of India 1961, Temples, Coimbatore Dist. p. 235.

27. வை. கணபதிஸ்தபதி, அ.நூ.ப. 287.

28. ஆய்வாளர் 23-6-92 அன்று கண்டபோது இவர் கோயிலில் விளக்கு எரியாததால் தீக்குச்சியைக் கொளுத்திக் காண நேர்ந்தது. 13ஆம் நூற்றாண்டில் விளக்கெரிப்பதற்கு மன்னர் மானியம் பெற்றவர் இவர்.

29. ஆய்வாளர் 21-11-92 அன்று நேரில் கண்டது.

30. ஆய்வாளர் 16-03-93 அன்று நேரில் கண்டது.

31. ஆய்வாளர் 16-12-93 அன்று நேரில் கண்டது.

32. ஆய்வாளர் 21-02-93 அன்று நேரில் கண்டது.

33. ஞானபூமி, மே 1992, பக் 32-33

34. கிருபானந்தவாரியார், விநாயகர், ப. 27 சாளக்கிராம விநாயகர் எனக் குறித்துள்ளார்.

35. ஆய்வாளர் 30-04-93 அன்று கண்டறிந்தது.

36. செய்தி கூறியவர் திருமதி இராசம் அம்மையார், கோயில்பட்டி

37. காசிநாத பிள்ளை திருப்புறம்பயத்தைச் சேர்ந்தவர். இவரை ஆய்வாளர் 21-02-93 அன்று பேட்டி கண்டார்.

38. S.V.S. & Co./ Op. Cit./ p.4

39. ஆய்வாளர் 26-05-92 அன்று நேரில் கண்டது.

40. சா. கணேசன், பிள்ளையார் பட்டித்தலவரலாறு, ப. 42

41. ஆய்வாளர் 21-11-92 அன்று நேரில் கண்டது.

42. நெல்லை அறிஞர் கிருட்டிண மூர்த்தி கூறியது.

43. தினமலர், தீபாவளி மலர் 92, ப. 20

44. ஆய்வாளர் நேரில் 02-06-93 அன்று கண்டது.

45. மேலது.

46. மேலது.

47. இரா. நாகசாமி, கல்லும் சொல்லும் பக். 83, 84

48. திருவலஞ்சுழி அருச்சகரிடம் 20-02-93 அன்று ஆய்வாளர் கேட்டறிந்தது.

49. ஆய்வாளர் 09-06-92 அன்று நேரில் கண்டது.

50. மேலது.

51. செந்தில்துறவி, காணாபத்யம், ப. 106. 52. உஷா 2.7.93 ப.79.

53. S.V.S. & Co. Op. Cit p. 334.

54. மேலது.

55. திருக்கோயில், அக்டோபர் 1989, விநாயகர் பெருமை ப. 36.

56. தினமலர், நகர்மலர் 26-04-93 நெல்லைப் பதிப்பு ப. 7.

'முடங்கிக் கிடக்கும் இசை பாடும் முருகன்' திருநெல்வேலியிலிருந்து 7 கி.மீ. தொலைவிலுள்ள குன்னத்தூரில் உள்ளது. மயிலின் முகமும் இசை பாடுமாம்.

57. ச. தண்டபாணி, கணபதி, பக். 104-107.

58. ஆய்வாளர் 29-05-92 அன்று கண்டது.

59. ஆய்வாளர் 23-02-93 அன்று கண்டு கேட்டறிந்தது.

60. மேலது.

61. இரா. நாகசாமி, கல்லும் சொல்லும், ப. 83

62. மேலது. ப. 84

63. அ.மி. அண்ணாமலை யார் திருக்கோயில் கும்பாபிடேகமலர் 04-04-1976 த.கோ. பரமசிவம் 'செப்புத்திருமேனிகள்' ப. 51.

64. தினமணி சுடர், 03-10-1992, ப. 13.

65. திருக்கோயில், நவம்பர் 1965, விடைவிளக்கம், ப. 81

66. மேலது

67. கிருபானந்தவாரியார் சொற்பொழிவில் ஆய்வாளர் கேட்டசெய்தி

68. வை. கணபதிஸ்தபதி, அ.நூ.ப. 274

69. மேலது ப. 275

70- 73. ஆய்வாளர் நேரில் கண்டவை.

74. ஆய்வாளர் 19-11-92 அன்று நேரில் கண்டவை

75. ஆய்வாளர் நேரில் கண்டது.

76. ஆய்வாளர் 29-04-93 அன்று மயன் சிற்பக் கூடச் சிற்பி (மாமல்லபுரம்) ஒருவரைப் பேட்டி கண்டறிந்தது.

77. முனைவர் சுப. 'அண்ணாமலை பேட்டி 20-08-92. மதுரை.

78. ஆய்வாளர் நேரில் கண்டது.

79. S.V.S. & Co. Op. Cit, p. 532

80. The Hindu, 20-11-92, p. 27
81. Vainayaki, B.N. Sharma
82. ஆய்வாளர் கண்டது
83. Indian Express, 09-11-92, p. 7
84. ஆய்வாளர் நேரில் கண்டது.
85. Indian Express, 09-11-92, p. 7 Last Para.
86. Raju Kalidos, Temple cars of Medieval Tamilaham, Annexure Plates.
87. Alice Getty, Op. Cit, pp.21 & 22
88. குங்குமம். 19-25 பிப்ரவரி 1993. விசித்திர விநாயகர் பக். 49-51.
89. ஆய்வாளர் திரு. கே.எம். கோபால் அவர்களைப் பேட்டிகண்டறிந்தது. நாள் 30-04-93.

## கணபதி பற்றிய கதைகள்

கணபதி பற்றிய புராணக்கதைகள் பார்க்கவ புராணம் என்ற விநாயகர் புராணத்துள் தொகுத்து வழங்கப்படுகின்றன. அக்கதைகள் இவ்வாய்வில் இப்பிரிவில் இடம் பெறவில்லை. ஆய்வாளர் கேட்டும் படித்தும் அறிந்த கதைகளே ஈண்டு இடம் பெறுகின்றன.

### *கணபதியும் இராமாயண மாந்தரும்*

இராமாயணத்துக் காப்பிய நாயகன் இராமன் மற்றும் அனுமன். வீடணன் ஆகியோருக்கும் கணபதிக்குமிடையே தொடர்பிருந்ததாகத் தமிழ் நாட்டில் பல கதைகள் வழங்கப்படுகின்றன. அவற்றைக் காண்போம்.

### *கணபதியும் இராமரும்*

வேதாரண்யம் என்னும் திருமறைக்காட்டிலுள்ள வேதாரண்யேசுவரர் கோயிலின் வெளிப்பிரகாரத்தின் மேற்குப்புறம் மேற்கு நோக்கி வீரஹத்தி விநாயகர் அமர்ந்துள்ளார். இராமபிரான் இராவணன் முதலிய அரக்கர்களைக் கொன்ற பிரமஹத்திதோடம் நீங்க இராமேசுவரத்தில் சிவலிங்கப் பிரதிட்டை செய்து கும்பிட்ட பின்பும் எஞ்சி நின்று விடாது துரத்தியது வீரஹத்தி. அது ஒரு பெண்ணுருவில் பின் தொடர்ந்தது. அதை இவ்விநாயகர் விரட்டினார் எனத் தலபுராணம் கூறுகிறது. இவ்வேதாரண்யேசுவரர் கோயில் கி.பி. 1182-இல் கட்டப்பட்டதாகவும். இக்கதை அங்கு வழங்கப்படுவதாகவும் கொரியே என்னும் ஆசிரியர் குறிப்பிடுகிறார்.[1]

### *கணபதியும் அனுமனும்*

இருவரும் பிரமச்சரிய விரதிகள் என்பது தமிழர் கருத்து. சனைச்சரன் (சனியன்) ஒருவரது இராசிக்கு முன்னும். இராசியிலும். பின்னும் சஞ்சரிக்கும் ஏழரை ஆண்டுகள் இடர்ப்படுத்துவார் என்பது தமிழர் நம்பிக்கை. ஒரு தடவை தும்பிக்கையானைப் பற்றி இடர்ப்படுத்த வேண்டுமென்று சனியன் சென்றான்.

கணபதி சனியனை நோக்கி: "என் முதுகில் நாளை என்று எழுதிவிட்டுப் பின்பு என்னைப் பிடியுங்கள்" என்றார். சனியனும் ஆராயாமல் அப்படியே எழுதிவிட்டான். 'இனி உங்களைப் பிடிக்கலாமா?' என்றான் சனியன்.

கணபதி மெதுவாகத் திரும்பியமர்ந்து முதுகில் எழுதியிருப்பதைப் படிக்குமாறு கூறினார். சனியனும் 'நாளை' என்றான். 'சரி நாளை வருகிறேன்' என்று போய்விட்டான் சனியன். இப்படியே பல நாட்கள் கடந்தன.

சனியனுக்குக் கோபம் வந்துவிட்டது. 'இன்று எப்படியும் தங்களைப் பிடிப்பேன்' என்றான் சனியன். கணபதி சந்நிதிக்கு எதிரே அனுமன் சந்நிதி இருந்தது. கணபதி சனியனிடம், "அதோ நிற்கிறாரே அனுமன். அவரை முதலில் பீடித்து விட்டு வாரும். நான் ஆயத்தமாக இருக்கிறேன்" என்றார்.

சனியனும் அந்தணர் உருவில் அனுமன் முன்தோன்றினான். அனுமன் விசுவருபமெடுத்தார். சனியனின் குடுமியைப் பிடித்து மேலே தூக்கினார். அந்தரத்தில் ஊசலாடிய சனியனை வாயால் ஊதினார். கணபதி முன்வந்து விழுந்தார் சனியன். "உங்கள் இருவரின் சுயஉருவை இதுவரை அறியவில்லை. இனி எக்காலமும் உங்களைப் பீடிக்கமாட்டேன். உங்கள் அன்பர்கள் என்னால் பீடிக்கப்பட்டாலும் அதிகமாய் அல்லல்படாமல் நற்பயன் அடைவர்" எனச் சனியன் வாக்களித்தார். [2]

### *கணபதியும் வீடணனும்*

திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டை உச்சியிலுள்ள பிள்ளையாருக்கு உச்சிப்பிள்ளையார் எனப்பெயர். உச்சிட்ட கணபதி என்பதன் சுருக்கமே உச்சிப்பிள்ளையார் என ஆசிரியர் கொரியே தவறாகக் குறிப்பிட்டுள்ளார். [3]

திருவரங்கத்தில் அரங்கநாதன் அமர இவரே காரணர் என்ற கதை வழங்குகிறது. இராவணன் தம்பியாகிய வீடணருக்கு இராமன் அயோத்தி அரண்மனையிலிருந்து திருவரங்கர் சிலையை அன்பளிப்பாகக் கொடுத்து இலங்கையை அடையும் வரை எந்த இடத்திலும் அதைக் கீழே வைக்கக் கூடாது என்று கட்டளையிட்டு அனுப்பினாராம்.

ஒரு நாள் வழியிலே காவிரி நீர்ப் பெருக்கைக் கண்டான் வீடணன் காலை வேளை, நீராட விரும்பிய வீடணன். சிலையை யாரிடம் கொடுக்கலாமெனச் சுற்றுமுற்றும் பார்த்தான். பிள்ளையார் ஓர் அந்தணச் சிறுவனாய் அவன் முன் நின்றார். வீடணன் அச்சிலையை அச்சிறுவனிடம் கொடுத்துத்துத்தான் வரும் வரை வைத்திருக்குமாறு வேண்டினான். அச்சிறுவனும் மும்முறை அழைப்பேன். நீர் வராவிட்டால் சிலையைக் கீழே வைத்து விட்டுப் போய் விடுவேன்" என்றான். சிறுவன் மும்முறை குரல் கொடுத்தும் வீடணன் வரவில்லை. திருவரங்கர் சிலையைக் கீழே வைத்து விட்டான் சிறுவன். வீடணன் வந்து சிலையை அசைத்துப் பார்த்தான். சிலை அசையவில்லை.

சிறுவனைத் துரத்தினான் வீடணன். பிள்ளையார் திருச்சி மலைக் கோட்டை மலையுச்சியில் வந்து அமர்ந்து விட்டார். வீடணனும் விடாது துரத்தி வந்து அவர் தலையில் குட்டி விட்டான். உச்சிப்பிள்ளையார் தலையில் குட்டுப்பட்டவடு உள்ளதாக அருச்சகர் கூறினார். [4]

இவ்வரலாறு உச்சிப்பிள்ளையார் கோயிலுக்குச் செல்லும் வழியிலுள்ள பதினாறு கால் மண்டபத்தில் அறிவிப்பாகக் காணப்படுகிறது. அம்மண்டப முகப்பிலுள்ள முதல் தூணில் வீடணன் தன் இருகைகளினாலும் திருவரங்கநாதர் சிலையைக் கொண்டு வரும் காட்சி சாட்சியாக அமைந்துள்ளது. [5]

இப்பிள்ளையார் 273 அடி உயரத்தில் உள்ளார். இவரைக்காண 417 படிகள் ஏறிச் செல்ல வேண்டும்.

### *கணபதியும் இராவணனும்*

இராவணன் கயிலை நாதனிடம் சிவலிங்கத்தைப் பெற்றுத்தென்திசை நோக்கினான். அமரர் அஞ்சினார். 'சங்கரன் தந்த லிங்கம் இலங்கையில் நிறுவப்பட்டால் யாராலும் இலங்கையை அழிக்க இயலாதே' என எண்ணினர். அனைவரும் ஆனை முகனை வேண்டினர். கணபதி அந்தணச் சிறுவனாய் வந்து முந்திய கதையில் கூறியவாறு திருவிளையாடல் நிகழ்த்தினார். இக்கதை ஒரு காலத்தில் தமிழ் நாட்டின் பகுதியாய் இருந்த மேற்குக் கரையிலுள்ள திருகோகர்ணத்தில் நிகழ்ந்தது. இலிங்கத்தை எடுக்க இராவணன் பற்றியிழுக்க இலிங்கம் பசுவின் காது போல நீண்டது (கோ-பசு. கர்ணம்-காது) அவ்விடம் கோகர்ணம் எனப்பட்டது. கோகர்ணத்திலுள்ள கணபதியும் தலையில் இராவணனால் குட்டுப்பட்டார். இன்றும் அவர் தலையில் பெரும் பள்ளம் காணப்படுகிறது.[6]

### *கணபதியும் மாபாரதமும்*

வேத வியாசர் இமயமலையில் மூன்றாண்டுகள் தவஞ்செய்தார். அவருடைய அறிவுக் காட்சியில் பாரத வரலாறு புலனாயிற்று. பிரமதேவர் பாரதத்தைப் பாடுமாறு வியாசரிடம் வேண்டினார்.

பாடுகின்றவரே எழுதினால் வேகம் தடைப்படும்-விரைவில் எழுத வல்லார்யாரென வியாசர் சிந்தித்தார். ஞான விநாயகரே ஏற்றவர் என முடிவு செய்து கணபதியிடம் வேண்டுகோள் விடுத்தார்.

கணபதியோ, 'நான் எழுதுகின்ற வேகத்திற்கு நீர்பாடுவதானால் எழுத இசைகிறேன்' என்றார். வியாசர் சற்றுச் சிந்தித்து, 'அப்படியே ஆகட்டும். ஆனால் தேவரீர் பொருள் தெரிந்து எழுத வேண்டும்' என்றார்.

கணபதி தம் வலக்கொம்பை ஒடித்து எழுத்தாணியாகக் கொண்டு எழுதினார். விநாயகரின் எழுதும் வேகத்தை மட்டுப்படுத்த வியாசர் கடினமான பதங்களை அமைத்துப் பாடினார். கணபதி சிந்திக்கும் வேளையில் வியாசர் பல சுலோகங்களை ஆயத்தம் செய்தும் கொண்டார். மகா மேருமலையில் பாரதம் எழுதப்பட்டதெனத் திருப்புகழ் கூறும். [7]

*கணபதியும் அருச்சுனனும்*

திருச்சி மாவட்டத்தில் செயங்கொண்டானிலிருந்து 10 கி.மீ. தொலையிலுள்ளது உடையார் பாளையம். அங்கு வாழ்ந்த பெருநிலக் கிழார்கள் பைரநீச்சுரர் கோயிலைக் கட்டியுள்ளனர். அக்கோயிலில் காணப்படும் கணபதி தனித்தன்மை வாய்ந்தவர். கையில் வில்லேந்தியவராகக் காணப்படுகிறார். (நி.ப.எண். 6) மாபாரத அருச்சுனன் காண்டீபம் என்னும் வில்லை வளைக்க இயலாமல் இடர்ப்பட்ட போது இக்கணபதி அவ்வில்லை இப்படி வளைக்க வேண்டும். இப்படி அம்பை எய்தல் வேண்டும் எனக் கற்பித்தாராம். இதற்கு நன்றி செலுத்துமுகமாக அருச்சுனன் அக்கோயிலின் முன்பு காண்டீப தீர்த்தத்தை அமைத்துக் கொடுத்தானாம். அத்தீர்த்தக்குளம் வில் விடிவில் அமைந்துள்ளது. [8]

*கணபதியும் கண்ணபிரானும்*

கண்ணபெருமான் சத்திரியர்களோடு போரிடச் சிவபெருமானிட-மிருந்து கோடரியை இரவல் வாங்கிச் சென்றார். திரும்பக் கொடுப்பதற்காகக் கயிலாயம் சென்றார். சிவன் உமாதேவியோடு தனிமையிலிருக்க வெளியே விநாயகர் காவலிருந்தார். கண்ணபிரான் உள்ளே செல்லக் கணபதியிடம் அனுமதி கேட்டார். 'இஃது உரியநேரமல்ல' என்று கூறித்தடுத்தார், கணபதி. கண்ணபிரான் கோபம் கொண்டு கோடரியைக் கணபதியை நோக்கி வீசினார். அதன் வலிமையைக் கணபதி தடுத்திருக்க இயலும். ஆயினும் தன் தந்தையின் ஆயுதம் வலிமையற்றதாகி விடக்கூடாதே என எண்ணித் தம் இடக் கொம்பால் அதைத் தடுத்தார். அக்கோடரி இடக் கொம்பை ஒடித்து விட்டது. [9]

இடக்கொம்பு குறுகியநிலையிலுள்ளகணபதி சிலை பிள்ளையார் பட்டிக் (பசும்பொன்) குடவரைக் கோயிலில் உள்ளது (முன்அட்டை)

## கணபதியும் நாயன்மாரும்

திருத்தொண்டர் புராணத்தில் கூறப்படும் நாயன்மார் பலரோடு கணபதி நிகழ்த்திய திருவிளையாடல்கள் பற்றிச் செவி வழியாகவும் தலபுராணங்கள் வாயிலாகவும் அறிகிறோம்.

*கணபதியும் ஞானசம்பந்தரும்*

'பிடியதன் உரு உமை கொள' என்று கணபதியைத் துதித்துப் பாடிய ஞான சம்பந்தரோடு பின்வரும் ஊர்களில் கணபதி திரு விளையாடல் நிகழ்த்தினார்.

*தேரழுந்தூர்*

தஞ்சை மாவட்டம் மயிலாடுதுறையையடுத்த தேரழுந்தூரில் திருஞான சம்பந்த விநாயகர் காட்சியளிக்கிறார். இவ்விநாயகர் திருமால் சிவன்கோயில்

கட்கும் மத்தியிலிருந்து திருஞான சம்பந்தருக்குத் தம் தந்தையார் திருக்கோயிலைக் காட்டியருளினாராம்.[10]

*திருத்தெளிச்சேரி*

காரைக் காலையடுத்த திருத்தெளிச் சேரியில் கோபுர வாயிலில் உள்ள கணபதி திருஞானசம்பந்த விநாயகராகக் காட்சியளிக்கிறரார். புத்தர்களை வென்று வந்த திருஞானசம்பந்தப் பெருமானை மகிழ்வுடன் இவ்விநாயகர் வரவேற்றருளினார்.[11]

*திருவீழிமிழலை*

தஞ்சை மாவட்டம் நன்னிலம் வட்டத்திலுள்ள திருவீழி மிழலையில் பஞ்சத்தைப் போக்குவதற்காகத் திருஞான சம்பந்தருக்கும் திருநாவுக்கரசருக்கும் திருவீழிமிழலை இறைவர் படிக்காசளித்தார். உழவாரப்பணி செய்த அப்பர் வட்டம் தராமல் மாற்றத்தக்க பொற்காசைப் பெற்றார். இக்காசுகளைச் சரிபார்த்த விநாயகர் 'படிக்காசு விநாயகர்' என்னும் பெயருடன் விளங்குகிறார்.[12]

*அன்பில் (லால்குடி அருகில்)*

திருச்சி மாவட்ட கொள்ளிடக்கரையில் அம்பில் என்ற ஊரில் ஆலந்துறை என்ற திருக்கோயில் திருச்சுற்றில் செவி சாய்த்த விநாயகர் உள்ளார். இங்கு தலை திரும்பிய நிலையில் சிலை உள்ளது. இவ்வாறு செவி சாய்ந்துள்ளதற்கு அவ்வூர்த்தலபுராணம் கூறும் செய்தியாவது: திருஞான சம்பந்தரும் அப்பரும் அக்கரையிலிருந்து அம்பிலாலந்துறைப் பெருமானைப் பாடினர். அருகில் ஓடும் கொள்ளிட ஆற்றின் அலையோசை பாடலை முழுவதும் கேட்கத் தடை செய்தது. அதனால் தன் திருச்செவி சாய்த்து இவ்விநாயகர் கேட்டாராம்.[13] சீவில்லிபுத்தூர் (காமராசர்) மடவார்வளாகம் வைத்தியநாத சுவாமி கோயிலிலும செவி சாய்க்கும் விநாயகர் உள்ளார். இவர் அன்பர் வேண்டுகோளுக்குச் செவி சாய்க்கிறார்.

*கணபதியும் அப்பரும்*

அப்பர் எனப்படும் திருநாவுக்கரசர் சமண சமயத்திலிருந்து சைவ சமயத்தைச் சார்ந்த போது மன்னன் மகேந்திர வர்மப்பல்லவன் அவரை அழைத்து வந்து அழிக்க முற்பட்டான். அப்பரது தலையை மதயானையின் காலால் இடறி அழிக்குமாறு ஆணையிட்டான். அப்பர் பின்வரும் பாடல் பாடியதும் ஆனை அடங்கிப்பணிந்தது.

"பல பல காமத்த ராகிப் பதைத்தெழு வார்மனத் துள்ளே
கலமலக் கிட்டுத் திரியும் கணபதி என்னும் களிறும்

வலமேந் திரண்டு சுடரும் வான்கயி லாய மலையும்
நலமார் கெடிலப் புனலு முடையார் ஒருவர் தமர்நாம்
அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை"

விநாயகர் பற்றற்றவர்க்கு உற்றதுணையாவார் என்கிறார் அப்பர்.

## கணபதியும் சுந்தரரும்

கணபதி சுந்தரரோடு பின்வரும் ஊர்களில் திருவிளையாடல் புரிந்ததாகக் கதைகள் கூறப்படுகின்றன.

## முதுமலை (விருத்தாசலம்)

விருத்தாசலத்திலுள்ள விநாயகருக்கு மாற்றுரைத்த விநாயகர் எனப்பெயர். சுந்தரர், இறைவன் கொடுத்த பொன்னை ஆற்றிலிடுமுன் இக்கணபதியிடம் கொடுத்து மாற்றுரைத்து வைத்துக் கொண்டாராம். [15] ஆழத்துப்பிள்ள்ளை யாரைத் தரிசிக்க 14 படிகள் இறங்க வேண்டும்.

## திருவாரூர்

திருவாரூர் (நாகை) கமலாலயக்குளக்கரையிலுள்ள கணபதிக்கும் மாற்றுரைத்த பிள்ளையார் எனப்பெயர். சுந்தரர் ஆற்றிலிட்ட பொன்னைக் குளத்திலிருந்து எடுத்தவுடன் அதன் மாற்றுச் சரியாக உள்ளதா என இக்கணபதியிடம் கேட்டறிந்தாராம் சுந்தரர். [16]

## திருப்பனையூர்

தஞ்சை மாவட்டம் நன்னிலம் வட்டம் திருப்பனையூரில் வீற்றிருக்கும் விநாயகர் பொற்காசு விநாயகர் எனப் பெயர் பெறுகிறார். சுந்தரர் திருப்புகலூரில் பெற்ற பொன்னைத் திருவாரூர் போகின்ற வழியில் இவ்விநாயகர் மாற்றுரைத்துப் பார்த்ததால் பொற்காசுப்பிள்ளையார் எனப்பெயர் பெற்றார். [17]

## திருவையாறு

சுந்தரரும் சேரமானும் கண்டியூர்ப்பெருமானை வழிபட்டுத் திருவையாற்றை (தஞ்சை) வழிபட எண்ணுகையில் காவிரியாற்றில் வெள்ளம் வர ஐயாறப்பரை வழிபட இயலாநிலைமையில் சுந்தரர் வருந்திப்பாடினார். அஞ்சவேண்டா எனக் கணபதி ஓலம் ஓலமெனக் குரலெடுக்க காவிரி வழிவிட்டது. அப்போது இவ்விநாயகர் ஓலமிட்டு வரவேற்றார். அதனால் இப்பிள்ளையார் ஓலமிட்ட விநாயகர், சுந்தரவிநாயகர் என்னும் பெயர்களுடன் விளங்குகிறார். [18]

## திருநாட்டியத்தான்குடி

திருவாருருக்கு அண்மையிலுள்ள திரு நாட்டியத்தான்குடி என்னுமூரிலுள்ள விநாயகர் கைகாட்டி விநாயகர் என்றபெயரில்

விளங்குகிறார். இவ்வூருக்குச் சுந்தரர் சென்ற போது சிவபிரானைக் காணப்பெறாமல் கணபதியிடம், 'இறைவர் எங்குள்ளார்?' என விவை, கணபதி சிவபெருமான் இருந்த இடத்தைக் கை நீட்டிச் சுட்டிக் காட்டினாராம். அதனால் 'கைகாட்டிப்பிள்ளையார்' எனப்பெயர். [19]

### *திருமுருகன் பூண்டி*

திருமுருகன் பூண்டி என்னும் ஊருக்கு அண்மையிலுள்ள பிள்ளையாருக்குக் கூப்பிடு விநாயகர் எனப்பெயர். சுந்தரர் தம் நண்பரான சேரமானிடம் பொன்னும் பொருளும் மிகுதியாகப் பெற்று ஊர் திரும்பினார். சிவன் அவரிடம் விளையாட எண்ணித்தம் கணங்களை வேடர்வடிவில் அனுப்பிச்சுந்தரர் பெற்ற செல்வத்தைப் பறித்துக் கொணரும்படி செய்து அவற்றை ஓரிடத்தில் மறைத்து வைத்தார். சுந்தரர் திருமுருகன் பூண்டி சென்று சிவனிடம் தம் பொருள் பறிபோனதை முறையிட்டார்.

அப்போது இவ்விநாயகர் சுந்தரரைக் கூவி அழைத்துச்செல்வம் மறைத்து வைத்திருக்குமிடத்தைக் காட்டினார். இவ்வாறு கூப்பிட்டதால் இவர் 'கூப்பிடுவிநாயகர்' எனப்பெயர் பெற்றார். [20]

### *கணபதியும் சோமாசி மாறனாரும்*

அறுபத்து மூன்று நாயன்மார்களில் சோமாசிமாறர் ஒருவர். அவர் அம்பர் என்னும் ஊரைச் சேர்ந்த அந்தணர். அவர் சிவனைப் போற்றிப் பல வேள்விகள் செய்தார். தாம் இயற்றும் வேள்வியில் சிவனை எழுந்தருளச் செய்ய எண்ணிச் சுந்தரரிடம் வேண்டினார். சுந்தரர் சிவனை வேண்ட சிவனும் அதற்கிணங்கி வேள்விக்கு எழுந்தருளினார். ஆனால் ஈசன் ஒரு நீசன் உருக் கொண்டு வந்தார். சோமாசிமாறர் அவரை இன்னார் என்று அறியாமல் அவர் வருகையால் தம் வேள்வியின் புனிதம் இழந்து போகுமென அஞ்சினார். அப்போது விநாயகர், 'நீசனாக வந்திருப்பவர் நீர் விரும்பிய ஈசனே' என அறிவித்து அவர் அச்சம் போக்கினார். இதனால் அவ்விநாயகருக்கு 'அச்சம் தீர்த்த விநாயகர்' எனப்பெயர் அமைந்தது. [21] இப்பெயருடைய விநாயகர் நெல்லை மாவட்ட பத்தமடை அருகிலுள்ள கரிசூழ்ந்த மங்கலத்திலுமுள்ளார் [22]

### *கணபதியும் குங்கிலியக்கலயனாரும்*

திருக்கடையூரில் வாழ்ந்த குங்கிலியக்கலய நாயனார் மகன் இறந்த போது அவன் பிணத்தைத் தகனம் செய்ய எடுத்துச் சென்றனர். செல்லும் வழியில் விநாயகர் அவர்களை மறித்து அவ்வூரிலுள்ள நாககன்னிகைத் தீர்த்தத்தில் பிணத்தை நீராட்டி வீட்டிற்குக் கொண்டு செல்லுமாறு பணித்தார். அவர்களும் அவ்வாறு செய்ய வீட்டுக்குச் சென்றதும் இறந்தவன் எழுந்தான். இது நடந்த இடம் கும்பகோணத்திற்கு வடக்கே 18 கி.மீ. தொலைவிலுள்ள திருப்பனந்தாள்

என்னுமிடம் இவ்வூரிலுள்ள விநாயகருக்குப் 'பிணம் மீட்ட விநாயகர்' எனப்பெயர்.[23]

### கணபதியும் திருநாளைப்போவாரும்

தஞ்சை மாவட்டம் வைத்தீசுவரன் கோயிலுக்கு அருகிலுள்ளது திருப்புன்கூர். அங்குள்ள சிவலோகநாதனை வணங்குவதற்குத் திருநாளைப்போவார் சென்றார். நந்தியைவிலகச் செய்து நாதனைத் தரிசித்தபின் கோயிலுக்கு மேற்குப்புரத்தில் பள்ளமான இடமிருப்பதைக் கண்டார். அதைத் தோண்டி ஆழமாக்கிக்குளமாக மாற்றினால் மக்களுக்கு உதவுமென எண்ணினார்.[24] ஒரே நாள் இரவில் பணியை முடித்துத் திரும்ப வேண்டியதிருந்தது. சிவனை மனத்தில் சிந்தித்துப் பணியில் இறங்க, சிவன் விநாயகரை அவருக்கு உதவி செய்ய அனுப்பினார். விநாயகர் துணையால் குளம் தோண்டும் வேலை ஓர் இரவிலே முடிந்தது.[25] அங்குக் 'குளம்தொட்ட விநாயகர்' உள்ளார்.

## வரலாற்றுக் கதைகள்

தமிழ் நாட்டை ஆண்ட மன்னர் பலர் வாழ்வில் விநாயகர் விளையாடல் நிகழ்த்திய கதைகளைக் காண்போம்.

### கணபதியும் கரிகாலனும்

திருவாருருக்கு அருகிலுள்ள திருப்பனையூர் என்னும் ஊரில் துணையிருந்த விநாயகர் வீற்றிருக்கிறார். கரிகாலன் இளைஞனாக இருக்கும் போதே அவன் தந்தை இயற்கை எய்தினான். அந்நிலையில் அவனைக்கொன்று அரசினைக் கவரப் பகைவர் சூழ்ந்தனர். ஆனால் கரிகாலனை அரசுகட்டிலில் ஏற்ற அவன் தாய்மாமன் இருப்பிடர்த் தலையார் அரும்பாடுபட்டார். கரிகாலன் திருப்பனையூர் வந்து தங்கிப் பிறர் அறியாமல் வளர்ந்து வந்தான். அப்போது அவனுக்கு எவ்விதத் தீங்கும் நேராமல் இங்குள்ள விநாயகர் துணையிருந்து காத்தார்.[26]

குத்தாலம் என்றழைக்கப்படும் திருத்துருத்தியிலுள்ள விநாயகருக்கும் துணை வந்த விநாயகர் எனப்பெயர். அம்பிகையை மணக்க வந்த இறைவனுடன் கயிலையிலிருந்து துணையாக உடன் வந்ததால் இப்பெயர் ஏற்பட்டது எனத் தல புராணம் கூறும்.[27]

### கணபதியும் இராசஇராசனும்

சிதம்பரத்திற்கு மேற்கே திருநாரையூர் உள்ளது. அங்குள்ள சிவன்கோயில் திருச்சுற்றில் பொள்ளர்ப் (உளிகொண்டு செதுக்கப்படாத) பிள்ளையார் உள்ளார். அவருக்குப் பூசை செய்து வந்த அருச்சகர் அயலூர்

போக வேண்டியதிருந்ததால் தன் மகன் நம்பியாண்டார் நம்பியை அழைத்து. 'இன்று நீ பிள்ளையாருக்குப் பூசை செய்து வருக' எனக்கட்டளையிட்டார்.

நம்பியாண்டார் நம்பி பிள்ளையாரை நீராட்டி நிவேதனத்தைப் பிள்ளையார் முன் வைத்து. 'அமுது செய்யும்' என வேண்டினார். தினமும் உண்ணுவார் பிள்ளையார் என்று எண்ணினார்.. 'ஐயனே. நான் என்ன பிழை செய்தேன்? ஏன் உண்ணாமலிருக்கின்றீர்?' என்று வேண்டினார். 'நீர் இதை உண்ணாவிடில் உம் தலைமீது என் தலையை மோதுவேன்' என்று கூறி மோதச் சென்றார். பிள்ளையார் அச்சிறுவனைத் துதிக்கையால் தடுத்து நிவேதனத்தை மறைத்து அருளினார். ஆடிப்பாடி மகிழ்ந்தான் நம்பி. அழுததால் பயன் பெற்றான்.

நம்பி மீண்டும் அழத் தொடங்கினான். விநாயகர் 'ஏன் அழுகின்றாய்?' என்றார். சுவாமி, 'அழாதே. நானே உனக்குச் சகல கலைகளையும் கற்பிப்பேன்' என்றார் கணபதி. நம்பி கணபதி திருவருளால் சகல கலைகளையும் கற்று விநாயகர் மீது பல பாடல்கள் பாடினான்.

அப்போது சோணாட்டை ஆண்ட இராசராசசோழன் இந்த அதிசயத்தைக் கேட்டுத் திருநாரையூர் வந்தான். கணக்கில்லாத தேங்காய் பழங்களைக் காததூரம் பரப்பி அவற்றைக் கணபதிக்கு நிவேதனம் புரிய வேண்டினான். நம்பிகள் வேண்ட ஒரே நொடியில் அவற்றை உண்டருளினார் கணபதி.

பொள்ளாப்பிள்ளையார் மூலம் திருமுறைகள் சிதம்பரத்திலிருப்பதை அறிந்தான் சோழ மன்னன். சிதம்பரம் கோயிலில் 'திருமுறை காட்டிய விநாயகர்' உள்ளார். சிதம்பரத்திலுள்ள தீட்சிதர்கள் தேவாரம் பாடிய மூவரும் வந்தால்தான் திருமுறைகள் உள்ள அறையைத் திறப்போம்' என்று கூற இராசஇராசன் மூவரின் சிலைகளை எழுந்தருளச் செய்து 'இவர்கள் யாரென?' வினவ, தீட்சிதர் 'மூவர்' என்றனர். திருமுறைகள் வெளிக்கொணரப்பெற்றன.[28]

### *கணபதியும் துக்கோசியும்*

வேலூரு (வ.ஆ.)க்கு அருகே சேண்பாக்கம் என்ற இடத்தில் பதினோரு பிள்ளையார்கள் உள்ளனர். அனைவரும் பொள்ளாப்பிள்ளையாரே! பதினொன்றும் ஓம்கார வடிவில் அமைந்துள்ளன.

கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் (1768) மராட்டிய மன்னனின் ஆணைப்படி வேலூரை நோக்கி விரைந்தார் அமைச்சர் துக்கோசி. சேண்பாக்கத்தை அடைந்ததும் வண்டியின் அச்சு முறிந்தது. இறங்கிப் பார்த்தார். தரையில் செந்நீர் பெருக்கெடுத்தது. ஆனால் ஆள்யாரையும் காணோம். இரவு முழுவதும் அங்கேயே தங்க வேண்டியதாயிற்று. விநாயகர் அவர் கனவில் தோன்றி அந்த இடத்தில் என் பதினொரு மூர்த்தங்கள் புதைந்துள்ளன.

மூடிக்கிடந்தது போதும். வெளியே வந்து அருள வேண்டியே இவ்வாறு செய்தேன் என்றார். துக்கோசி அனைத்துச் சிலைகளையும் வெளியே கொண்டு வந்து குடமுழுக்காட்டினார். [29] (நடுவிலுள்ள) பெரிய சிலையின் பின்புறம் வண்டிச் சக்கரம் பதிந்த சுவடு சான்றாக உள்ளது.

துக்கோசியிடம் உன் எதிரிகளைப் பாம்புப் படைகொண்டு விரட்டி விட்டேன். அஞ்சாமல் செல் எனவும் அப்பிள்ளையார் கூறினார். அது கேட்டு மகிழ்ந்த துக்கோசி, விநாயகர் அருகே நாகப்பிரதிட்டையும் செய்து வைத்தார்[30].

### *கணபதியும் மூவேந்தரும்*

சேலம் சுகவனேசுவரர் கோயிலில் வலம்புரி விநாயகர் உள்ளார். இவரைப் போற்றிய ஔவையார் மூவேந்தரின் விருப்பத்தை நிறைவேற்ற வேண்டி ஒரு பனந்துண்டத்தை மரமாக்கிப் பனம் பழங்களை வரவழைத்துக் கொடுத்தார். இதற்குச் சான்றாக,

**"திங்கள் குடையுடைச் சேரனும் சோழனும் பாண்டியனும்**
**பங்குக்கு மூன்று பழம்தர வேண்டும் பனந்துண்டமே"**

என்ற பாடலைக் காட்டுவர். இப்புலவரைச் சங்ககாலத்து ஔவையாரெனக் கொண்டு திரு.பி.என். நம்பியார் இக்கோயில் கி.பி. 100-க்கும் 250-க்குமிடையே கட்டப்பட்டிருக்கலாம் என்கிறார். [31] ஆனால் இக்கோயிலில் உத்தமசோழன் கல்வெட்டு க்கள் உள்ளதால் இது கி.பி. 9-ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டிருக்கலாம் என்கிறார் ரிச்சர்டு[32].

### *கணபதியும் கொங்கு வேந்தனும்*

சுவாமிமலை (தஞ்சை) யில் 'நேத்திரவிநாயகர்' சந்நிதி அமைந்துள்ளது. சுவாமி நாதனைத் தரிசிப்பதற்காகப் பிறவிக் குருடனான மன்னன் ஒருவன் கொங்கு நாட்டிலிருந்து வந்தான். காவிரி நீராடிக் கரையேறினான். வழி தெரியாமல் திகைத்து நின்ற வேளையில் விநாயகர் அவன் கையைப் பற்றி அழைத்து வந்து தம் சந்நிதியில் நிறுத்திவிட்டு மறைந்து விட்டார். மன்னனுக்கு அவ்விடத்திற்கு வந்ததும் கண்பார்வை வந்து விட்டது. கண் திறந்தவுடன் அவன் தரிசித்த மூர்த்தி விநாயகர். அதனால் இவருக்கு நேத்திர (கண்கொடுத்த) விநாயகர் என்ற பெயர் ஏற்பட்டது.[33]

திருவலஞ்சுழியில் (சுவாமி மலைக்கு அருகிலுள்ளது) வெள்ளை விநாய கரின் பெருமையை அறிந்த அம்மன்னன் மண்டபம் ஒன்றை ஒரே நாளில் நிறுவினான். இதற்கு 'அபராத மண்டபம்' எனப் பெயர். [34]

### *கணபதியும் கொற்கைப் பாண்டியனும்*

திருச்செந்தூர் அருகிலுள்ள ஆறுமுகமங்கலம் (வ.உ.சி.) என்னும் ஊரில் அமைந்துள்ள கோயிலில் மூலவராக விளங்கும் கணபதிக்கு 1008 விநாயகர்

என்று பெயர். ஒரு காலத்தில் கொற்கைப்பாண்டியருள் ஒருவன் (இவனைப் பொற்கைப் பாண்டியன் என்றும் கூறுகின்றனர்) தான் செய்த பாவம் நீங்க 1008 துறவிகளுக்கு அன்னதானம் செய்வதற்காக ஏற்பாடுகள் செய்தான். 1008 இலைகள் போடப்பட்டன. உணவும் பரிமாறப்பட்டது. ஆனால் ஓர் இலைகாலியாக இருந்தது. அஃதாவது 1007 துறவிகளே வந்திருந்தனர். துறவி ஒருவர் குறைவது கண்ட மன்னன் நேராகக் கணபதியிடம் சென்று முறையிட்டுத் திரும்பினான். என்னே வியப்பு! 1008 ஆவது துறவி வந்தார். துறவியாக விநாயகரே வந்து அமர்ந்தார் என எண்ணிய பாண்டியன் அவ்விநாயகருக்கு ஆயிரத்தெண் விநாயகர் எனப் பெயரிட்டான். இக் கோயிலில் நேர்த்திக் கடனாக ஒருவரே 1008 சிதறுதேங்காய்கள் உடைப்பது வழக்கம்.[35]

### *கணபதியும் மொகலாய மன்னரும்*

திப்பு சுல்தான் படையெடுப்பின் போது சிதம்பரத்தில் முகமதிய வீரர்கள் கலகம் விளைவித்து அங்கிருந்த செங்கழுநீர் விநாயகரது துதிக்கையை ஒடித்து விட்டார்கள். கலகம் முடிந்ததும் ஊர்மக்கள் இவரது உருவத்தை அப்புறப்படுத்திவிட்டு வேறோர் உருவத்தை வைக்க முயன்றனர். விநாயகர் அவர்கள் கனவில் தோன்றிக் “கையொடிந்த உன் மகனை நீக்கிவிடுவாயோ?” எனக் கேட்டு மறைந்தார். தங்கள் தவறு உணர்ந்த மக்கள் அந்த எண்ணத்தைக் கைவிட்டனர். மேற்கு பார்த்த பிள்ளையாராக அவ்வடிவிலேயே இன்னும் அருள் செய்கிறார்.[36]

### *மொட்டை விநாயகர்*

மதுரையிலும் இதைப்போன்றதொரு நிகழ்ச்சி நடைபெற்றது. முகமதிய வீரர்களால், தலை, கைகள், கால்கள் துண்டிக்கப்பட்ட கணபதி சிலை கீழமாசி வீதியில் விளக்குத்தூண் அருகிலுள்ள ஒரு கிணற்றில் போடப்பட்டது. கி.பி. 1940-ல் அக்கிணற்றிலிருந்து முனகல் சப்தம் கேட்டது. அன்பர் ஒருவர் கனவில் கணபதி தோன்றி ‘என் உடல் வலிக்கிறது. வெளியில் கரையேற்றிவிடு’ என வேண்டினாராம். அவ்வாறு கரையேற்றப்பட்ட மொட்டை விநாயகர் கீழ மாசிவீதியில் அமர்ந்துள்ளார்.[37]

### *பிள்ளையாரும் பிரெஞ்சுத்துரையும்*

புதுச்சேரியிலுள்ள பிள்ளையார் மணக்குள விநாயகர் எனப் போற்றப்படுகிறார். இவரைப் பாரதியார் போற்றியுள்ளார். ஒயிட் டவுண் என்றழைக்கப்படும் வெள்ளையர் வாழும் அரண்மனைக்கும் அரவிந்த ஆசிரமத்திற்கும் அருகில் அமைந்துள்ளது, மணக்குள விநாயகர் கோயில். இக்கோயில் ஏறத்தாழ முந்நூறு ஆண்டுகட்கு முன் கட்டப்பட்டது. மணம் மிகுந்த குளத்தின் கரையில் அமைந்ததால் இப்பெயர் பெற்றது.

மொம்பரே என்ற துரையின் பூங்காவில் கடலுக்கு அருகே இவ்விநாயகர் குடி கொண்டுள்ளார். இவரை வழிபட மக்கள் பெருந்திரளாக வந்தனர். இது துரைக்குத் தொந்தரவாக இருந்தது. துரை ஏவலர்களை அழைத்து விநாயகர் சிலையை அகற்றிக் கடலில் எறிந்து விடுமாறு ஆணையிட்டார். இரவோடிரவாக சிலை கடலில் எறியப்பட்டது.

ஆனால் மறுநாள் சிலை முன்பு இருந்த இடத்திலே காணப்பட்டது. துரை ஏவலர்மீது ஐயங்கொண்டு மீண்டும் கடலில் எறியுமாறு ஆணையிட்டுத்தானும் உடன் சென்று பார்வையிட்டார். அவ்வேளை துரையின் கண்பார்வை மறைந்தது. துரை தன் செயலுக்கு மன்னிப்புக் கேட்டுப் பார்வைபெற்றார். அவ்விநாயகருக்கு அவ்விடத்திலேயே கோயில் அமைத்துக் கொடுத்தார். வெளிநாட்டினரும் இவ் விநாயகரை வணங்கிச் செல்கின்றனர். [38]

புதுச்சேரி தனிமாநிலமாயினும் தமிழ் மக்கள் மிகுதியாக வாழ்வதாலும் தமிழ்நாட்டின் நிலப்பகுதியை ஒட்டியுள்ளதாலும் இக்கதை எடுத்தாளப்பட்டது.

### *கணபதியும் அமைச்சரும்*

மன்னர்கட்கும் மன்னர் பிரதிநிதிகட்கும் துணை செய்தது போலவே அமைச்சர்க்கும் விநாயகர் துணை புரிந்துள்ளார். கங்கை கொண்ட சோழ புரத்து ஆலயம் முதலாம் இராசேந்திர சோழனால் கட்டப்பட்டது. அமைச்சர் சரியாகக் கணக்கு எழுதி வைக்கவில்லை. அடுத்த நாள் அரசவையில் கணக்குக் காட்ட வேண்டும். எவ்வாறு கணக்குக் காட்டுவது? எனத் தவித்த அமைச்சர் கணபதியே கதி என வேண்டினார்.

அரசவை கூடிற்று. கணபதியே கணக்கன் போல் வேடம் பூண்டு மன்னர் முன் நின்றார். கணக்கைப் படிக்குமாறு ஆணையிட்டான் அரசன். கணபதி ஏட்டைவிரித்து. 'எத்து நூல் எண்பது இலட்சம்' என்று தொடங்கினார்.

அரசன். 'மேற்கொண்டு படிக்கத்தேவையில்லை' என்றான். மற்றக் கணக்குகளில் மஞ்சள் முதலில் இடம்பெறுவது போல, கட்டடக் கலைக்கு மட்டம் சரி பார்க்கும் நூல்-எத்து நூல்-முதலில் இடம் பெறும். எத்துநூலே எண்பது இலட்சம் பொற்காசு எனில் மொத்தச் செலவை அதிலிருந்தே கணித்துத் தெரிந்து கொள்ளலாம். அதனால் மேலும் படிக்க வேண்டாவென்றான் மன்னன்.[39] அங்குள்ள கணபதி கணக்கெழுதிய விநாயகர் என அழைக்கப்படுகிறார்.

*கணபதியும் அகத்தியரும்*

அகத்தியர் சிவனிடமிருந்த காவிரியாற்றைக் கமண்டலத்தில் அடக்கிக் கொண்டு தென்திசை நோக்கி வந்து கொண்டிருந்தார். அக்காலத்தில் இந்திரன் சீகாழியில் சிவபூசை செய்து கொண்டிருந்தான். மழையின்றி நந்தவனம் வாடியது. நாரதர் இந்திரனைப் பார்த்து. 'அகத்தியரது கமண்டலத்திலுள்ள காவிரி பெருகுமானால் உன் பூங்கா பொலிவுறும்' என்றார். இந்திரன் விநாயகரை வழிபட்டு வேண்டினான்.

விநாயகர் காக்கை வடிவுடன் சென்று காவிரியடங்கிய கமண்டலத்தின் மீது அமர்ந்தார். அகத்தியர் காகத்தை ஓட்டினார். காகம் காலால் கமண்டலத்தைக் கவிழ்த்துவிட்டுப் பறந்தது. கமண்டல நீர் பெருகி காவிரி பெருக்கெடுத்தது.

அகத்தியர் காகத்தின் மீது சீறிப் பாய்ந்தார். அஃது ஓர் அந்தணச் சிறுவனாய் நின்றது. அச்சிறுவனை இரு கைகளாலும் குட்டுவதற்கு குறு முனி ஓடினார். கணபதி காட்சி தந்தார். 'ஓங்காரப் பொருளே. உம்மைக்குட்டுவதற்குக் கையை ஓங்கினேனே' என்னே என்சிறுமதி எனக் கூறித்தன் தலையிலே குட்டிக் கொண்டார். கணபதி அவர் கைகளைப் பற்றி "இன்று முதல் நம்முன் தம் சென்னியில் குட்டுவோர் கூரியமதியும் சீரியநிதியும் பெறுவர்" என வரமளித்தார். அன்று முதல் அடியார் விநாயகர் திருமுன் குட்டிக் கொள்ளும் மரபு தோன்றியது. [40] காகம் விரித்த நீர் காவிரி எனப்பெற்றது.

*வாதாபி கணபதி*

அகத்தியர் தென்னாடு நோக்கி வரும் வழியில் வாதாபி, இல்வலன் என்னும் இரண்டு அரக்கர்கள் அவரை விருந்துண்ண வீட்டிற்கு அழைத்தனர். அரக்கருள் இல்வலன் வாதாபியை ஆடாக்கிக் கொன்று கறி சமைத்து வழங்குவான். தம்பி அழைக்கும்போது உண்பவர் வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளியே வருவது அண்ணன் வாதாபி வழக்கம். பின்பு விருந்தினரை இருவரும் உணவாக அருந்துவர். அகத்தியருக்கும் இதே போல உணவளித்தான். ஆனால் அகத்தியரோ கணபதியை வழிபட்டு வயிற்றைத் தடவி அவனைச் சீரணித்து விட்டார். இல்வலன் அகத்தியரோடு மோத அவர் அவனைச் சாம்பராக்கினார். அகத்தியர் வாதாபியைக் கொல்வதற்கு உதவிய விநாயகர் 'வாதாபி கணபதி' எனப் பெயர் பெற்றார்.[41]

*கணபதியும் ஔவையாரும்*

திருக்கோவலூர், விழுப்புரத்திலிருந்து திருவண்ணாமலை செல்லும் பாதையில் அமைந்துள்ளது. தென்பெண்ணையாற்றின் தென் கரையில்

உள்ளது. இவ்வூர்க் கோயிலிலுள்ள கணபதிக்குப் பெரியானைக் கணபதி என்று பெயர். ஔவையார் முத்தியடையக் காரணமாயிருந்தவர் இவர்தான் என்பர்.

நாள்தோறும் நிதானமாகப் பூசை செய்யும் ஔவையார், சுந்தர மூர்த்தி நாயனாரும் சேரமான் பெருமாள் நாயனாரும் முறையே யானை மீதும் குதிரை மீதும் ஏறித் திருக்கயிலாயம் செல்வதை அறிந்து தாமும் உடன் செல்லும் எண்ணம் கொண்டு சற்று அவசரமாகப் பூசை செய்தார். அவர் பதற்றம் கண்ட கணபதி "அம்மே, அவசரம் வேண்டா, நிதானமாகப் பூசை செய். அவர்களுக்கு முன் உன்னைக் கயிலையில் சேர்ப்பிக்கிறேன்" என்றார்.

ஔவையாரும் 'சீதக்களப' எனத்தொடங்கும் விநாயகர் அகவலைப் பாடினார். பாடலின் பொருளில் மகிழ்ந்தபிள்ளையார் பூசை முடிந்ததும் தம் துதிக்கையால் ஔவையைத் தூக்கிக் கைலாயத்தில் விட்டுவிட்டார். சுந்தரரும் சேரமானும் அவருக்குப் பின்பே வந்து சேர்ந்தனர். [42]

### கணபதியும் மணிவாசகரும்

மதுரையை ஆண்ட அரிமர்த்தன பாண்டியனுக்கு அமைச்சராய் விளங்கிய மணிவாசகர் மன்னனுக்காகக் குதிரை வாங்கச் செல்லுமுன் மீனாட்சியம்மன் கோயிலில் உள்ள சித்தி விநாயகரை வழிபட்டுச் சென்றார் என்றும் அவ்வழிபாடே அவரது முத்திக்கு வழிகாட்டியாய் அமைந்தது என்றும் கூறுவர்.[43]

### கணபதியும் ஆதிசங்கரரும்

திருவானைக்கா (திருச்சி) வில் அன்னை அகிலாண்டேசுவரி மிகக் கொடூரமானவளாகக் காட்சியளித்தார். இரவில் அவள் சந்நிதிக்குச் செல்ல மக்கள் அஞ்சுவர். ஆதிசங்கரர் அங்கு அவளைத்தரிசிக்க வந்தார். நடப்பனவற்றை அறிந்தார். சக்கரங்கள் எழுதப்பட்ட தோடுகளை அன்னையின் காதுகளில் சாத்தினார். அகிலாண்டேசுவரியின் முன்னால் அவள் கண் படுமிடத்திற்கு நேராக கணபதியின் திருவுருவை நிறுவினார். கணபதி அம்மையை அமைதியுறச் செய்தார்.[44]

### கணபதியும் பட்டினத்தாரும்

திருவெண்காடர் எனப்படும் பட்டினத்தார் 'காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே' என்னும் குருமொழியைப் படித்துத் துறவியாகி திருவெண்காட்டிலுள்ள கணபதி கோயிலில் கணபதி சிலைக்குப்பின் அமர்ந்து தவம் செய்தார். ஒரு நாள் இரவில் சில திருடர்கள் அக்கோயிலுக்கு வந்து இன்று அரண்மனையில் திருடச் செல்கிறோம். பிள்ளையாரே, நீர் காட்டிக்

கொடாமலிருந்தால் உமக்குப் பொற்சங்கிலி ஒன்று காணிக்கையாகத் தருவோம்' என்று கூறி அரண்மனைக்குச் சென்று திருடிவிட்டுத் திரும்பும் வழியில் கணபதி கோயிலை நெருங்கும்போது காவலர் வரும் சத்தம் கேட்டனர். கணபதியை நோக்கி ஒரு சங்கிலியை வீசி எறிந்து விட்டுத் தப்பி ஓடினர். அச்சங்கிலி பட்டினத்தார் கழுத்தில் விழுந்தது. நிட்டையிலிருந்த அவர் அதைக் கவனிக்கவில்லை. காவலர் கணபதி கோயிலுக்கு வந்தனர். பட்டினத்தார் கழுத்தில் அரண்மனை நகை கிடப்பதைக் கண்டு ஆராயாது, இவரே திருடர் என முடிவு கட்டி அரசனிடம் கொண்டு சென்றனர். அரசனும் ஆராயாது அவரைக் கழுவிலேற்றும்படி ஆணையிட்டான். ஊருக்கிளைத்தவன் பிள்ளையார் கோயில் ஆண்டி என்ற பழமொழி இதனால்தான் ஏற்பட்டது போலும். பட்டினத்தார் இறைவனை எண்ணிப் பாடினார். கழுமரம் தீப்பற்றி எரிந்தது.[45]

### *சிறைமீட்ட கணபதி*

பட்டினத்தாரின் முதன்மை அலுவலர் பெயர் சேந்தனார். குருவின் ஆணையின்படி சேந்தனார் பட்டினத்தாரது திரண்ட செல்வத்தை வீதியில் விட்டெறிந்தார். அதனால் வேந்தன் சேந்தனாரைச் சிறையிலிட்டான். இதையறிந்த பட்டினத்தார் திருவெண்காட்டுச் சிவபெருமானை நோக்கிப் பாடினார். சேந்தனை வேந்தனிட்ட கைத்தளை நீக்கி என் முன் காட்டும் வெண்காட்டுளானே என வேண்டினார். இப்பாடல் கேட்ட சிவன் தம் மூத்த பிள்ளையை நோக்க அவர் தம் துதிக்கையைச் சிறைச்சாலைக்கு நீட்டிச்சேந்தனாரை விடுவித்தார்.[46]

### *கணபதியும் காஞ்சிமுனிவரும்*

வேலூரை (வ.ஆ) அடுத்த சேண்பாக்கத்தை நோக்கி ஊர்வலமாகக் காஞ்சிமுனிவர் சகத்குரு மகா (சந்திரசேகரேந்திர சரசுவதி) சுவாமிகளும் சின்ன சுவாமியும் சென்றனர். சின்னசுவாமி ஸ்ரீசயேந்திரசரசுவதி சுவாமிகள் யானை மேல் வந்து கொண்டிருந்தார். யானை கணபதி கோயில் பக்கம் வந்ததும் மேற்கொண்டு செல்லாமல் சுழன்று சுழன்று வந்தது. நெடுநேரமாக முரண்டு செய்தது. எல்லோருக்கும் யானைக்கு மதம் பிடித்துவிட்டதோ என்ற அச்சம். மகா சுவாமிகள் கூறுகிறார்:

“அப்புறம்தான் சேண்பாக்கம் பிள்ளையாருக்கு 108 சிதறுகாய் போடுவதாக வேண்டிக் கொண்டிருந்தது, நினைவுக்கு வந்தது. பாடம் கற்பிக்கத்தான் கணபதி இப்படிப் பண்ணியிருக்கிறார் எனப் புரிந்தது. தம் உருவான யானை மூலம் உணர்த்தியதை உணர்ந்தோம். உடனே

பிள்ளையாருக்கு 108 சிதறுகாய் போடப்பட்டன" யானையும் சட்டெனத்தன் நிலைக்கு வந்து மேலே போகத் தொடங்கியது.[47]

## இதழ்கள் கூறும் நிகழ்ச்சிகள்

இக்காலத்தில் கணபதியின் அருளால் நடைபெற்ற நிகழ்ச்சிகள் சிலவற்றை இதழ்கள் எடுத்துரைத்துள்ளன. அவற்றைக் காண்போம்.

### *பனிகொண்டு வந்த தெய்வம்*

கிளாஸ்கோ நகரில் திரு. எம்.வி. இராமகிருட்டினன் தங்கியிருந்த போது ஹார்லிக் என்பவர், "உணவுக்கூடத்துச் சுவரிலுள்ள கண்ணாடி வழியே பார்த்தால் தொலைவிலுள்ள மலைகள் மனங்கவரும் காட்சி வழங்கும். இது திசம்பர்த்திங்கள். இன்னும் ஒரு திங்கள் கழித்து பனி வரும்போது பார்த்தால் மிக இரம்மியமாக இருக்கும் " என்றார்.

திரு. இராமகிருட்டினன் "நான் போகுமுன் பனிகொட்ட வேண்டும் என்று என் பிரியமான கடவுளிடம் வேண்டுவேன் " என்றார். ஆர்லிக் "ஓ எலிபென்ட் (யானை) காட் (கடவுள்) இதைச் செய்வாரா?" என்றார். நிச்சயம் நம்புகிறேன், என் பிராத்தனைக்குப் பலனுண்டு என்றார். திரு. இராமகிருட்டினன். ஒருவாரம் கழிந்தது. சூழ்நிலையில் மாற்றம் ஏற்பட்டது. என்ன வியப்பு! கூரையில் பனி மூடியது. பனித்துளி விழுந்தது சுவர்கள் குளிர்ந்தன. திடீர்ப்பனியை எதிர்பாராததால் போக்குவரவு தலை கீழ்!

உணவு விடுதியில் கூடிய அனைவரும் "பிரேவோ" என ஆரவாரமாகக் கூவினார். கை குலுக்கினர். உமது யானைத் தெய்வம் பதிலளித்து விட்டது என்றனர். அன்று ஒரு நாள் மட்டுமே பனி பெய்தது. சில நாட்களில் கொட்டிய பனி இருந்த இடம் தெரியவில்லை. ஆர்லிக் விநாயகர் படமொன்றை கட்டுரை ஆசிரியரிடமிருந்து பெற்றுத் தம் நாற்காலிக்குப் பின்புறம் சுவர்மீது ஒட்டினார்.[48]

### *மழை பெய்வித்த இரட்டைப்பிள்ளையார்*

சீவலப்பேரி (நெல்லை) இரட்டை விநாயகர் கோயிலுக்குத் தென்புறம் ஒரு கிணறும் நந்தவனமும் அமைந்துள்ளன. கி.பி. 1978 ஆம் வருடம் மார்ச்சுத் திங்கள் 15ஆம் நாளில் இக்கிணற்றில் பெருவியப்பிற்குரிய செயல் நிகழ்ந்தது. அவ்வாண்டில் அங்குக் காஞ்சி காமகோடி மடத்துப் புதுப்பெரியவர் தவத்திரு சயேந்திர சரசுவதி சுவாமிகள் 17ஆம் நாள் சீவலப்பேரிக்கு வருவதாக ஏற்பாடு. அவரைத் தங்க வைப்பதற்கு இரட்டைப் பிள்ளையார் கோயிலைத் தேர்ந்தெடுத்தனர். காலையில் சுவாமிகள் தண்பொருநையாற்றில் குளித்து

விட்டு வரலாம் என்றனர். ஏற்பாடு செய்த திரு. காந்திமதி நாதபிள்ளை. மடத்த மேலாளர். சுவாமிகள் ஈர ஆடையுடன் ஒரு கிலோ மீட்டர் தொலைவிலுள்ள ஆற்றிலிருந்து நடந்துவருவது இயலாது என்றார். மேலும் அருகில் கிணறு இருக்கிறதா? என்றார். ஆம் என்று பிள்ளையவர்கள் கூறியதும் அதைப் பார்க்காமலே ஒப்புதலளித்து விட்டுச் சென்று விட்டார் மேலாளர்

பிள்ளை அவர்கள் கூறிய கிணறோ பாழ்பட்டுக் கிடந்தது. உள்ளூ உயர்நிலைப்பள்ளி மாணவர் ஒத்துழைப்போடு கிணற்றில் தூர் வாரப்பட்டது அப்போது தண்ணீர் அதில் ஓரடி ஆழமே இருந்தது. அதுவும் உப்புக்கரிக்கும் நீர்! நிலைமையை விளக்கிச் சுவாமியை எப்படியும் ஆற்றுக்கு அழைத்து செல்லலாம் என்றிருந்தார் பிள்ளையவர்கள்.

மார்ச்சு 15ஆம் நாள் - சுவாமி வருவதற்கு இரண்டு நாட்கட்கு முன் மாலை மூன்று மணிக்கு வானம் கறுத்தது. ஒரு மணி நேரம் மழை கொட்டியது கோயிலைச் சுற்றி விழுந்த மழை நீர் முழுவதும் கிணற்றுக்குள் விழுந்தது சிலமணி நேரத்தில் ஒன்பதடி தண்ணீர் பெருகிவிட்டது. கண்ணாடி போல் பளபளவென்றிருந்த நீரை வாயில் ஊற்றிப் பார்த்தார் பிள்ளையவர்கள் கல்கண்டின் சுவை கண்டார். இரட்டைவிநாயகர் திருவருளை மனத்தில் எண்ணி மகிழ்ச்சிக் கண்ணீர் விட்டார், திரு. காந்திமதி நாதப்பிள்ளை.[49]

*குரல் தந்து காத்த கணபதி*

தமிழ்நாட்டில் பத்திப் பாடகர் காலஞ்சென்ற வீரமணி த இசையரங்கினைத் தொடங்குமுன் சிறிய விநாயகர் சிலையை வைத்து வழிபாடியற்றுவது வழக்கம். 20-10-90 அன்று அவர் காலமானார். அவ உடன்பிறந்தவராகிய சோமு தன் மகனுடன் இசையரங்கு நிகழ்த்தப் பெங்களூ சென்றார். சோமுவின் மகன் இராசு, வீரமணியைப் போலக் கணீரென பாடுவான். பெங்களூரில் இசையரங்கு தொடங்குமுன் இராசுவுக்கு குர கட்டிக்கொண்டது. என்ன செய்வதென்று தெரியாமல்திணறினான். அங் ஒரு பெரியவர் தோன்றிப் பிள்ளையார் படமொன்றைக் கொடுத்தா பிள்ளையாரைப் பூசை செய்துவிட்டுத்தானே பாடத்தொடங்குவீர். இன் மட்டும் அவ்வழக்கத்தை மறந்ததேன்? என்றார்.. கணபதி பூசையை விரைவி முடித்துவிட்டுக் கன்னிமூலை கணபதியே எனச் சோமுவும் கண்ணனு பாடத்தொடங்க இராசுவும் சேர்ந்து கொண்டார். தொண்டைக்கட்( விட்டுவிட்டது. இசையரங்கு நிகழ்ச்சி முடிந்தபின் கணபதி படம் தந் பெரியவரைத் தேடினார். அவரைக் காணஇயலவில்லை.[50]

## கணபதியும் மகளிரும்

கணபதி பிரமசாரியாயினும் தம் தம்பிக்கு உதவிக் கருப்பாதை சாத்தியும், பூசாரிக்கு உதவியும் தாசி சுந்தரி விழுந்த இடம் காட்டியும், தம் புதல்வர் வேண்டுகோளுக்காக சந்தோசிமாதாவைப்பெற்றெடுத்ததையும் தமிழர்கதையாகக் கூறுகின்றனர்.

*தாயைப்போலப் பெண் கேட்டவர்*

பிள்ளையாருக்குத் திருமணப் பருவம் வந்ததும், தாய் பார்வதி தேவி உனக்கு விருப்பமான பெண்ணைச் சொல். திருமணம் செய்து வைக்கிறேன் என்றாளாம். கணபதியோ, தாயே உன்னைப்போன்ற அழகும் குணமும் வாய்ந்த பெண் வாய்த்தால் தான் மணப்பேன், என்றாராம்.

பார்வதி, அப்படி ஒரு பெண் பூவுலகில் இருந்தால் நீயே போய்த் தேடிப்பார்த்து அழைத்து வா. அவளைத் திருமணம் செய்து வைக்கிறேன் என்றாளாம். தன் தாய் போன்ற ஒரு கன்னிப்பெண்ணைத் தேடிக் கொள்வதற்காகத்தான் கணபதி பெண்கள் நடமாடும் சந்திகளிலும், குளக்கரை, ஆற்றங்கரை போன்ற நீர்த்துறைகளிலும் இன்றும் அமர்ந்திருக்கிறாராம். பெண் எந்நாளில் கிடைப்பாளே?[51]

*கருப்பாதை சாத்திய கணபதி*

வல்லப கணபதியின் சிலைகளில் சில உச்சிட்ட கணபதி உருவமாக விளங்குகின்றன. கணபதி தம் இடத்தொடையில் சக்தியை அமரவைத்துத் தம் துதிக்கை நுனியால் அவளது குறியினைத் தொடுவது போன்ற அமைப்பு இது. திருச்செந்தூரில் மேலவாசல் விநாயகர் வல்லப கணபதியாக விளங்குகி-றார். இத்திருவுருவம் ஆறுமுகப்பெருமானுக்கு உதவி செய்வதற்காக அமைந்ததாம். திருச்செந்தூரில் ஆறுமுகப் பெருமானுக்கும் சூரனுக்கும் போர் நடைபெற்றது. ஆறுமுகப்பிரான் சூரனை அழிக்க அழிக்க சூரன் தாய் மீண்டும் மீண்டும் அரக்கர்களை ஈன்று கொண்டேயிருந்தாளாம். ஆறுமுகன் தன் அண்ணன் ஆனைமுகனை வேண்ட அவர் சூரன் தாயைத் தூக்கித் தம் இடத்தொடையில் அமர்த்தித் தம் துதிக்கையால் அவளது கருப்பாதையைச் சாத்திவிட்டாராம். இக்கதை பாமரரிடையே வழங்கப்படுகிறது.[52]

*சுந்தரிக்கு அருளிய கணபதி*

திருச்செந்தூரில் (வ.உ.சி.) தூண்டுகை விநாயகர் கோயில் உள்ளது. ஆதியில் இவர் துண்டி விநாயகர் என்றே வழங்கப்பெற்றார். இவரது கோயிலின் அருத்த மண்டபத்தில் நடுகல் போன்ற சிற்பம் ஒன்று உள்ளது. அதில் தலையில் கூடையுடன் ஒரு பெண், அவள் காலடியில் ஒரு பாம்பு, மேலே பறக்கும் மயில் ஆகியவற்றைக் காணலாம்.

ஒரு காலத்தில் திருச்செந்தூர் ஆறுமுகப்பிரானுக்குப் பூசை செய்யும் சிவாச்சாரியார்கள் அருகிலுள்ள சண்முகபுரத்தில் வாழ்ந்தனர். அவர்களிடமிருந்து பூசைப் பொருட்களைப் பெற்றுக் கோயிலுக்குக் கொண்டு வருவது பதியிலார் (தாசி) பணி. அவ்வாறு வாங்கிவரும் போது ஒருநாள் வழியில் சுந்தரி என்ற தாசியைப் பாம்பு கடித்து விட்டது. சிவாச்சாரியார் வேறு வழியாகக் கோயிலை அடைந்து சுந்தரியைத் தேடினார். அவளைக் காணாது வருந்தித் துண்டிவிநாயகரிடம் முறையிட்டார். விநாயகர் அருளால் ஒரு மயில் வந்து அவருக்கு வழிகாட்டியது. சுந்தரி மோட்சமடைந்த இடத்தை. முற்பிறவியில் ஒரு பாம்புக்குத் தீங்கு செய்தாள். அதனால் இவ்வாறாயிற்று என்று சிவாச்சாரியார் கனவில் கணபதி கூறித் தம்மிடம் அவளைச் சேர்த்துக் கொண்டதாகவும் கூறினாராம்.[53]

*மகளை ஈந்த கணபதி*

சென்னையையடுத்த விருகம்பாக்கத்தில் சந்தோசி மாதா கோயில் உள்ளது. வடநாட்டிலுள்ள கோயில்களில் சந்தோசி மாதா இடம் பெறாத கோயில்களே இல்லை எனலாம்.

கணபதி சித்தி புத்தி என்னும் இரு பெண்களை மணந்து முறையே இலட்சன். இலாபன் என்னும் இரு ஆண் மக்களைப் பெற்றெடுத்தார் என்பர். அவர்கள் இருவரும் தங்களுக்கு இரட்சை கட்ட ஒரு தங்கையில்லையே என்று ஏங்கி வருந்தினார்களாம். அவர்களைச் சந்தோஷப்படுத்தவே சந்தோஷி மாதா என்ற பெண்ணையும் பிள்ளையார் பெற்றுக் கொடுத்தாராம். அந்த சந்தோஷிமாதா தனது அண்ணன்மாருக்கு இரட்சை கட்டி மகிழ்வித்ததோடு மக்களனைவரையும் இரட்சிக்கிறாராம். இவளது அருளைப் பெற வெள்ளிக்கிழமை விரதம் முறைப்படி இருத்தல் வேண்டும்.[54]

## கணபதியும் வணிகரும்

பொய்யான வணிகரைத் திருத்தி நல்வழிக்குக் கொண்டு வந்த கணபதி கதைகள் தமிழ்நாட்டில் ஆங்காங்கே வழங்கி வருகின்றன. அவற்றைக் காண்போம்

*பொய்யா விநாயகர்*

தென்னார்க்காடு மாவட்டம் திண்டிவனம் வட்டம் தேவனூர் என்னும் சிற்றூரிலுள்ள விநாயகருக்குப் பொய்யா விநாயகர் எனப்பெயர். ஒரு நாள் இரவில் மிளகு வாணிகன் ஒருவன் இவ்விநாயகர் கோயிலின் அருகில் தங்கியிருந்தான். அக்கோயிலின் அருச்சகர் நைவேத்தியத்திறகாகச் சிறிது மிளகு கேட்டார். அவ்வாணிகன் இது மிளகு அல்ல. உழுந்து என்பொய்

கூறினான். மறுநாள் அவன் செல்ல வேண்டிய இடத்திற்குப் போய்ப்பார்த்த போது மிளகு முழுவதும் உழுந்தாக மாறியிருப்பதைக் கண்டான்.

தன் தவறுக்கு வருந்தி வணிகன் அவ்விநாயகரிடம் வந்து மன்னிப்புக் கேட்டான். தான் கொண்டு வந்த உழுந்து முழுவதும் மிளகாக மாறினால் பாதியை விநாயகருக்கு காணிக்கையாகத் தருவதாகக் கூறினான். உழுந்து முழுவதும் மிளகாக மாறியது வணிகனும் தன் வாக்கை நிறைவேற்றினான்.

*கடுக்காய்ப் பிள்ளையார்*

திருவாரூருக்குத் தெற்கே திருக்காறாயில் என்பது சப்த விடங்கத்தலம். அஃதாவது தியாகராசர் ஏழுவிதமான நாட்டியமாடும் தலங்களுள் ஒன்று. அவ்வூருக்கு வாணிகன் ஒருவன் சாதிக்காய் மூட்டைகளை விற்பனை செய்வதற்காக வாங்கிக்கொண்டு வந்தான். வழியிலுள்ள சுங்கச் சாவடிகளில் சாதிக்காய் மூட்டை எனில் சுங்கம் வாங்குவர். எனவே சுங்கச் சாவடியினரை ஏமாற்ற எண்ணி வண்டியில் முன்னும் பின்னும் சுங்கமில்லாத கடுக்காய் மூட்டைகளை ஏற்றிக்கொண்டு வந்தான். வரி கட்டாமலே ஏமாற்றி வந்து விட்டான். விநாயகர் விகடமாக விளையாடி அனைத்து மூட்டைகளையும் கடுக்காய் மூட்டைகளாக மாற்றி விட்டார்.

மறுநாள் மூட்டைகளைப் பிரித்துப் பார்த்த வணிகன் 'ஐயோ' என உட்கார்ந்து விட்டான். அப்புறம் புத்தி வந்து கணபதியை வேண்டி மூட்டைகள் மீண்டும் சாதிக்காயானால் அதற்குண்டான வரியும் வரிக்கு மேல் அபராதமும் கட்டுவதாக ஒப்புக் கொண்டான். விநாயகரும் கடுக்காயைச் சாதிக்காயாக மாற்றினார். இதனால் இவ்வூர் விநாயகருக்குக் கடுக்காய்ப் பிள்ளையார் எனப்பெயர் வந்தது.[56]

*கரும்பாயிரப் பிள்ளையார்*

கும்பகோணத்தில் (தஞ்சை) கும்பேசுவரசுவாமி கோயிலுக்கு வடமேற்கே திருமஞ்சனத்தெருவில் கரும்பாயிரப் பிள்ளையார் கோயில் உள்ளது. ஆதியில் இவருக்கு வராகப்பிள்ளையார் என்று பெயராம். திருமால் வராக அவதாரத்தின் போது இவரை வேண்டிச் சென்றே பூமாதேவியை இரண்யாட்சனிடமிருந்து மீட்டுக் கொண்டு வந்தார் என்பர்.

ஒரு நாள் அப்பிள்ளையார் கோயில் வாயிலில் ஆலைக்குக் கரும்பு கொண்டு செல்லும் வண்டி ஒன்று நின்றது. வணிகன் வண்டியில் ஆயிரம் கரும்புகளைக் கட்டுக்கட்டாக வைத்திருந்தான். பிள்ளையார் ஒரு சிறுவன் வடிவில் வந்து ஒரு கரும்பு கேட்டாராம். அவன் தர முடியாது' என மறுத்தான். வழியில் போகிறவர்கள் "இக்குழந்தைக்கு ஒன்று கொடுத்தால் குறைந்தா

போகும்" என்றார். அதற்கு வணிகன். இது ஒரு தினுசுக் கரும்பு. கரும்பினால் கரிக்கும். ஆலையிலே காய்ச்சினால் தான் இனிக்கும் என்றான். பிள்ளையாரும் சிரித்துக் கொண்டார்.

ஆலையில் உள்ளார் ஒரு கரும்பைக் கடித்துப் பார்த்தனர். ஒரே கரிப்பு! வணிகன் தான் செய்த தவறுக்கு வருந்தினான். உள்ள முருகிப் பிள்ளையாரிடம் மன்னிப்புக் கேட்டான். கணபதியும் அவனை மன்னித்து இனிக்கும் கரும்புகளாக அவற்றை மாற்றிக் கொடுத்தார். அவன் அவற்றைக் காணிக்கையாக்கினான். பிள்ளையார் கோயில் சுவரில் இந்நிகழ்ச்சி குறித்த பாடல் உள்ளது.

**ஒரு கரும்புக் காயிரம் கொண்டு உறுகரும்பா**
**யிரக்களிற்றை உளங்கொள் வாமே"**

என்னும் ஈற்றடியையுடைய பாடல் காணப்படுகிறது.[57]

## *ஆனை திறை கொண்ட ஆனைமுகன்*

திருவண்ணாமலையில் (தி.ச.மா) அண்ணாமலையார் திருக்கோயிலில் கிளிக்கோபுரப்படித்துறைக்குத் தெற்கிலுள்ள அழகிய வேலைப் பாடமைந்த கோயிலில் வீற்றிருக்கும் விநாயகர் யானை திறை கொண்ட விநாயகர் எனப் பெயர் பெறுகிறார். சுவரில் அமைந்த சிறிய திருவுருவம் இது.

வடநாட்டிலிருந்து திருவண்ணாமலைக்கு வந்த அகிலன் என்னும் சிற்றரசன் அடியார்கட்கும் அந்நகரத்தவர்களுக்கும் மிக்க இடையூறு விளைவித்து வந்தான். குகை நமசிவாயர் என்னும் சான்றோர் சிவனிடம் முறையிட சிவன் விநாயகரை வேண்ட, விநாயகர் அன்றிரவு அவன் கனவில் தோன்றி அச்சுறுத்தினாராம். அகிலன் தன் தவறுணர்ந்து நல்லவனாக மாறி அவருக்குச் சில யானைகளைத் திறையாக அளித்தானாம். இதனால் இவ்விநாயகர் இப்பெயர் பெற்றார்.

இன்றும் இவருக்கு முன்புள்ள மண்டபத்தில் யானை கட்டப்பட்டிருப்பது இவ்வரலாற்றிற்கு மிகவும் பொருத்தமாக உள்ளது.[58]

## *பூசாரியைத் திருத்திய பிள்ளையார்*

கன்னியாகுமரி மாவட்டத்தில் தக்கலை என்னும்ஊரிலிருந்து 2 கி.மீ தொலைவில் கேரளபுரம் உள்ளது. அங்குள்ள மகாதேவர் கோயில் திருச்சுற்றில் அமர்ந்துள்ள விநாயகருக்கு அதிசயவிநாயகர் எனப்பெயர். ஆண்டில் ஆறு திங்கள் வெண்மை நிறத்திலும், ஆறு திங்கள் கருமையாகவும் காணப்படுவார். இவ்விநாயகரது ஒரு கால் ஒடிந்த நிலையில் காணப்படுகிறது. இதுபற்றிச் கூறப்படும் கதை வருமாறு: இக்கோயில் பூசாரி இரவுப் பூசை முடிந்ததும்

வேசி வீட்டிற்குப் போகும் வழக்கமுடையவராயிருந்தார். அவரை ஒரு கிழவர் நாடோறும் சந்தித்து அக் கெட்ட பழக்கத்தை விட்டு விடுமாறு வேண்டினார். பூசாரி அதைப் பொருட்படுத்தவில்லை. ஒரு நாள் பூசாரி வேசி வீட்டில் நுழைந்தவுடன் யாரோ கதவைத் தட்டும் ஓசை கேட்டது. கதவைத்திறந்தார் பூசாரி. கிழவர் நிற்பதைக் கண்டு கோபம் கொண்டு அவரைக் கீழே தள்ளினார். கிழவரின் கால் முறிந்துவிட்டது.

அடுத்த நாள் பூசாரி விநாயகர் சிலைக்குப் பூசை நடத்தும் போது அச்சிலையில் ஒரு கால் முறிந்திருப்பதைக் கண்டார். தன்னைத் தடுத்தாட் கொண்டவர் தந்திமுகனே என அறிந்து தன் செயலுக்கு மன்னிப்புக் கேட்டு அக் கெட்ட வழக்கத்தை விட்டொழிந்தார்.[59]

*ஆபத்துக் காத்த ஆனை முகன்*

திருச்சி மாவட்டம் உடையார்பாளையம் செயங்கொண்ட சோழபுரத்திலுள்ள விநாயகர் ஆபத்துக் காத்த விநாயகர் எனப் பெயர் பெறுகிறார். இதற்கான பரம்பரைக் கதை வருமாறு: இவ்வூரை ஆண்ட அரசிளங்குமரன் ஒரு கன்றுக்குட்டியை அன்பாக வளர்த்து வந்தான். கன்று உண்டபின்தான் அவன் உண்ணுவது வழக்கம். ஒருநாள் கன்று ஊருக்கு வெளியேயுள்ள சேரிக்குச் சென்று அங்கு ஒரு வீட்டில் காயப்போட்டிருந்த நெல்லைத் தின்றது. சிறுமி ஒருத்தி அதை அடிக்கவே கன்று இறந்துவிட்டது. அவள் அதை வெட்டிப் பானையில் மறைத்து வைத்தாள். கன்றைக் காணாத காவலன் மகன் தன் ஏவலரை அனுப்பித் தேடி வருமாறு பணித்தான். சேரிப்பக்கம் காவல் வீரரைக் கண்ட சிறுமி மனமுருகி விநாயகரை வேண்டினாள். பானையில் அவள் மறைத்திருந்த துண்டுகள் தாமரை மலர்களாக மாறின. மீண்டும் வேண்டிக் கன்றை உயிர்பெறச் செய்தாள். அவளுக்கு வர இருந்த ஆபத்தினின்றும் அவளைக் காப்பாற்றியதால் அவருக்கு ஆபத்துக்காத்த விநாயகர் எனப் பெயர்.[60]

## தடைகளைத் தந்த கணபதி

தன்னை வணங்குபவர்க்கு இடையூறுகள் வரின் அவற்றைக் களைபவர் கணபதி எனக் கண்டோம். வணங்காதவர்க்கு இடையூறுகளை விளைவித்து வணங்கியபின் அவற்றை நீக்குவார் என்பதையும் காண்போம்.

*அச்சிறுத்த ஆனை முகவர்*

திரிபுரம் என்பது வான்வெளியில் கட்டப்பட்ட மூன்று கோட்டைகள். அவற்றை ஆண்டு வந்த அரக்கர்கள் தேவர்களுக்குப் பல தீமைகள் புரிந்தார்கள். தேவர்கள் சிவனிடம் முறையிட்டு ஒரு தேரை அமைத்தார்கள்.

நிலவுலகம் தேர்த்தட்டு. ஞாயிறும் திங்களும் தேர்ச்சக்கரங்கள். ஏழுலகங்கள் மேல்தட்டுக்கள் முப்பத்து முக்கோடி தேவர்கள் - தேர்ப்பதுமைகள் மேருமலை-வில், ஆதிசேடன் - நாண்; பிரமன் - பாகன்; நால் வேதங்கள் குதிரைகள்; திருமால் அம்பு. இத்தகைய தேரை அமைக்கு முன் விநாயகனை வணங்க மறந்து விட்டார்கள். சிவபிரான் அத்தேரில் ஏறியவுடன் கணபதி அத்தேரின் அச்சினைப் பொடி செய்து விட்டார். பிறகு தேவர்கள் விநாயகனை வழிபட்டு அருள் பெற்றனர்.[61]

### *சாரம் நிலைபெற அருளியவர்*

திருச்செந்தூரில் (வ.உ.சி.) மேலைக் கோபுரத்தைக் கட்டுவதற்காக சுமார் முந்நூறு ஆண்டுகளுக்கு முன் திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த துறவி தேசிகமூர்த்தித் தம்பிரான் ஈடுபட்டார். வேலை செய்வதற்காகக் கம்புகளை நட்டுச் சாரம் கட்டி அதன் மீது ஏறினர் பணியாளர். சாரம் சரிந்து விழுந்தது மீண்டும் மீண்டும் கட்டிவிட்டு சாரத்தில் ஏறும்போது அது சரிந்து விட்டது கணபதியை வழிபடாமல் தொடங்கியதாலே இவ்வாறு ஏற்பட்டது எனத் தம்பிரான் கூறினார். பெரிய விநாயகர் - வல்லப விநாயகர் - சிலையைச் செய்து நுழைவாயிலில் வைக்க ஏற்பாடு செய்துவிட்டு அவ்விடத்தில் வெல்லப்பிள்ளையாரை வைத்து வழிபட்டு வேலையைத் தொடங்கினர். சாரம் சரிந்து விழவில்லை. அவர்கள் நிறுவிய மேலவாசல் விநாயகர் சிலை தமிழ்நாட்டிலுள்ள உயரமான கணபதி சிலைகளுள் ஒன்று.[62]

## இடையூறு களைபவர்

முதலில் வழிபட்டுச் செயலைத் தொடங்குவோர் எவ்வித இடையூற மின்றித் தம் செயலில் வெற்றி பெறுவர்.

### *வேலனுக்கு உதவிய கணபதி*

திருமாலின் மகளாகிய சுந்தரவல்லி முருகனைத் தொழுது தன்னை மணஞ்செய்து கொள்ளுமாறு வரம் வேண்டினாள். "வள்ளி மலையில் மான் வயிற்றில் பிறந்து நம்பி மன்னனிடம் வளர்க. வள்ளி என்ற பெயரில் மலை நாட்டில் வளர்ந்து தினைப்புனம் காவல் கொண்டிரு. உன்னை மணக்க வருவேன்" என்றருளினார் முருகன்.

அவ்வாறே அவள் வள்ளி என்ற பெயரில் வளர்ந்து வந்தாள். முருகன் வேடனாகவும் கிழவேதியனாகவும் சென்று பலப்ல திருவிளையாடல்கள் புரிந்தார். தன் அண்ணனின் ஆசியை நாடினார் முருகன். கணபதி யானை வடிவில் சென்று வள்ளியை அச்சுறுத்தினார். அஞ்சிய வள்ளி அழகன் முருகனை அணைத்து மணம்புரிய இசைந்தாள். இவ்வாறு தம்பிக்கு மணம் தடையின்றி முடிய அருள் புரிந்தார்.[63]

*வெள்ளைப்பிள்ளையாரும் வேலையாட்களும்*

தஞ்சாவூரில் கோட்டைக்கு அருகில் வெள்ளைப் பிள்ளையார் கோயில் அமைந்துள்ளது. பணியாளர் கோட்டையைக் கட்டும் வேலையைத் தொடங்குமுன் விநாயகரை வணங்க எண்ணினர். ஆனால் அவர்களைப் பணிகொண்ட மன்னனோ தீவிர வைணவன். அதனால் பணியாட்கள் வெல்லத்தை வைத்து அதைப் பிள்ளையாராகக் கருதி வழிபட்டனர். வெல்லப்பிள்ளையார் என்ற பெயர் மருவி வெள்ளைப்பிள்ளையார் ஆயிற்று. இன்று அக்கோயிலில் விளங்கும் விநாயகர் கருமை நிறத்திலேயே உள்ளார்.[64]

*கணபதியின் பிறப்புக்கதைகள்*

கணபதியின் பிறப்புப் பற்றி பதினெண் புராணங்களில் பதினான்கில் பல்வேறு விதமான கதைகள் வழங்குகின்றன. கதை வழங்கும் புராணங்கள்:

1. பிரம வைவர்த்த புராணம் (கணபதி காண்டம்)
2. சிவபுராணம் (ருத்ரசம்உறிதா)
3. பதுமபுராணம் (சிருஷ்டிகாண்டம் - இயல் 61-63)
4. பவிஸ்யபுராணம் (சதுர்த்த உத்தரபருவம் இயல் 31-33)
5. கந்தபுராணம் (காசி காண்டம் இயல் 55-57)
6. விட்டுணு தர்மோத்ரபுராணம் (3, 104)
7. வராக புராணம் (விநாயகோட்பட்டி இயல்-2.3)
8. லிங்கபுராணம் (பருவம் இயல் 104-105)
9. அக்கினி புராணம் (இயல்கள் 71.199.313.318 ~ 346)
10. பிர்மாண்ட புராணம் (இயல்'1-5)
11. நாரத புராணம் (இயல் 51. 64. 66 ~ 143) 12. கருடபுராணம் (இயல் 15)
13. பிர்மபுராணம் (இயல் 39)
14. சௌரபுராணம் (இயல் 43)

இவை நீங்கலாக கணேசபுராணம் மற்றும் முத்கல புராணம் ஆகியவற்றில் கணபதி பற்றி விரிவாகக் கூறப்பட்டுள்ளன.[65]

*கந்தபுராணம்*

கணபதி பிறப்பைப் பற்றிக் கந்தபுராணம் மூன்று விதங்களாகக் கூறுகிறது. ஒரு காலத்தில் மனிதர் ஏராளமானோர் மோட்சலோகத்தில் நுழைந்தனராம். இந்திரன் இதைச் சிவனிடம் முறையிட சிவன்பார்வதியை நோக்கப் பார்வதி தன் உடம்பைத் தேய்த்து அழுக்கை உருட்டி யானைத் தலை, நாற்கரம், பெருவயிறு கொண்ட உருவினைப்படைத்தாராம். மோட்சமடைய விரும்புவோருக்குத் தடைகளை உருவாக்குமாறு கணபதியிடம் பணித்தாராம். கணபதிக்குச் சிவன் கோடரியையும், தேவி கொழுக்கட்டைகளையும், முருகன்

எலியையும், பிரமன் எங்கும் நிறைதலையும், திருமால் ஞானத்தையும், குபேரன் செல்வத்தையும், சூரியன் வலிமையையும் வழங்கினர். கணபதி சிவ கணங்களின் தலைவனாக்கப் பட்டார்.

இரண்டாவது கதை கூறும் செய்தி: முன் கதை போன்ற பார்வதிதான் திரட்டிய அழுக்கைப் பொம்மையாக்கிச் சிவனிடம் அதற்கு உயிரூட்டச் சொன்னார். வளர்பிறைச் சதுர்த்தியன்று உயிரூட்டப்பட்டது. அதனால் கணபதிக்குச் சதுர்த்தி சிறப்பான நாளாயிற்று.

மூன்றாம் கதை தாரகாசுரனை ஒழிக்கச் சிவனும் பார்வதியும் கணபதியைப் படைத்தனர். அவர் சிவகணங்களின் தலைவராக விளங்கினார். கார்த்திகேயன் பிறந்து தாரகனை ஒழித்தார்.

*வராகபுராணம்*

தெய்வங்களும் முனிவர்களும் மிகுந்த தீமைகட்கு ஆட்பட்டனர். சிவனிடம் முறையிட அவர் சிரிப்பால் கணபதியை உருவாக்கினார். பார்வதி அவ்வழகிய மகனைப் பார்த்தார். சிவன் வெறுப்புற்று தனது மகனையே சபித்தார். பானைத் தொந்தியும் யானைத்தலையும் அம்மகன் பெற்றான். சிவன் தன் உடலை அசைக்கப் பல விநாயகர்கள் உருவாயினர். தன் சிரிப்பால் உருவான மகனை அவர்கட்குத் தலைவனாக்கினான் சிவன்.

*சிவபுராணம்*

பார்வதி தேவி குளிக்கச் செல்லுமுன் தன் உடலிலுள்ள அழுக்கைத் திரட்டி உருவாக்கி அதற்கு உயிரூட்டினாள். வீட்டினுள் யாரும் நுழையாமல் காவலிருக்குமாறு கூறினாள். சிவன் வந்தபோது இக்காவலன் தடுக்க சிவன் அவன் தலையை வெட்டிவிட்டார். பார்வதிவந்து பார்த்தார்.

திருமாலிடம் வேறொரு தலையைப் பொருத்தச் சொன்னார். அவர் யானையின் தலையைக் கொண்டு வந்து பொருத்தினார். அக்காவலனைச் சிவன் தம் கணங்களின் தலைவனாக்கி முதலில் வணங்கப் பெறும் வரத்தையும் அளித்தார்.

*பத்மபுராணம்*

சிவனும் பார்வதியும் கங்கைக் கரையில் உல்லாசமாக இருந்தனர். பார்வதி உடலிலிருந்து அழுக்கைத் திரட்டி ஒரு பொம்மையை உருவாக்கினார். அது மனித உடலும் யானைத்தலையும் உடையதாக இருந்தது. அதைக் கங்கையில் எறிய அது பேருருக் கொண்டது. பார்வதியும் கங்கையும் தம் மகனாக ஏற்றுக்கொண்டனர். இதனால் கணபதிக்கு இரு தாயர்.

*வாமனபுராணம்*

பார்வதி குழந்தை பெற விரும்பினாள். மற்றத் தெய்வங்கள் அதைத்தடுக்கச் சதிசெய்தன. ஏனெனில் அவ்வாறு பிறக்கும் குழந்தை மிகுந்த வலிமைவாய்ந்த கடவுளாக விளங்கும் எனக் கருதினர். சிவன் நந்தியிடம் பார்வதி குழந்தை பெறுவாள் என்றார். ஒரு நாள் பார்வதி குளிக்கும்போது உடலிலுள்ள சந்தனக் கலவையைத் தேய்த்து யானைத்தலையும் மனித உருவுமுடையவனைப் படைத்தாள். சிவன் அக்குழந்தைக்கு, அனைத்துத் தேவர்களும் வணங்குவர் என வரம் கொடுத்தார்.

*பிரம வைவர்த்த புராணம்*

பார்வதிக்குக் குழந்தையில்லை. சிவன் விட்டுணுவுக்குரிய புண்ணிய விரதமிருக்கச் சொன்னார். திருமாலே அவளுக்குக் குழந்தையாகப் பிறப்பார் எனச் சோதிடம் கூறியது. விரதம் முடிந்ததும் கிருஷ்ணரே கணேசராகிப் பார்வதியின் மகனானார். சிவன் கணேசனை கணங்களின் தலைவனாக்கினார். இவ்வுலகின் தீமைகள் ஒழிய இவரை வணங்கினால் போதும் என்ற வரமும் அளித்தார்.

அக்குழந்தையைப் பார்க்க அனைத்துக் கடவுளரும் வந்தனர். அவருள் சனியும் ஒருவன். அனைவரும் அக்குழந்தையின் அழகைக் கண்டு புகழச்னி மட்டும் தரையை நோக்கிக் கொண்டிருந்தார். பார்வதி சனியனிடம் அக்குழந்தையைப் பார்க்கச் சொன்னார். சனிய்ன் மறுத்தும் பார்வதி வற்புறுத்தி இக்குழந்தை கிருஷ்ணர் ஆனதால் எந்தத் தீமையும் வராது என்றார். சனி பார்த்தார். அக்குழந்தையின் தலை வைகுந்தம் சென்றடைந்தது. குழந்தை இறந்தது.

பார்வதி அழுதார். திருமால் யானையின் தலையைக் கொண்டு வந்து பொருத்தினார். திருமால், அனைத்துக் கடவுளுக்கும் வழிபாடு செய்யுமுன் முதல் வணக்கம் பெறக் கணபதிக்கு வரம் அருளினார். கணபதியை முதலில் அனைத்துத் தேவரும் வணங்கினர்.

## தமிழ்க்கந்த புராணக் கதை

சிவனும் உமாதேவியும் ஓவிய மண்டபத்துள் சென்றனர். அங்கு ஒரு பிரணவ எழுத்து இரு யானைகளின் வடிவெடுத்துக் கலவி புரிய முயன்றது. உமாதேவி இஃது என்ன? என்றார். உன் பார்வைபட்டதால் உண்டாய விளைவு என்றார் சிவன். கலவி முடிந்ததும் அவை மீண்டும் பிரணவ வடிவமாயின

அப்போது ஐந்து கைகளும் , முக்கண்களும், தொங்கும் வாயையும், திங்கட் சடையையும், யானை முகத்தையும் கொண்ட கணபதி தோன்றினார்.[65]

**இயல் – 3**

*அடிக்குறிப்புகள்*

1. G.S. Ghurye, Gods and Men,. p.81
2. ஞானபூமி - ஜனவரி 1989 - ஏழரைநாட்டுச்சனி என்றாலும்... சித்திரக்கதையின் சுருக்கம்.
3. G.S. Ghurye- Op. Cit p. 81. உச்சி என்பது மலையுச்சியைக் குறிக்கும். இக்கணபதி ஆசிரியர் கூறுவது போல வல்லபையை அணைத்துக் கொண்டிருக்கவில்லை.
4. 11.2.93 அன்று ஆய்வாளர் அருச்சகரிடம் கேட்டறிந்தது.
5. ஆய்வாளர் 11.2.93 அன்று நேரில் கண்டறிந்தது.
6. கிருபானந்தவாரியார் - விநாயகர் பக் 10-13.
7. அருணகிரிநாதர் - திருப்புகழ் - சீர்சிறக்கு....

   **பாரதத்தை மேருவெளி வெளிதிகழ்**
   **கோடொடித்த நாளில் வரை வரைபவர்**
   **பானறிக் கணேசர் குவா குவாகனர்."**

8. The Hindu - 20-11-92 p.19, H allowed by Legend.
9. Asiatic Mythology - p. 128.
10. அ.மி. ஈச்சனாரி வினாயகர் திருக்கோயில் குடமுழுக்கு மலர்-ப. X
11. மேலது ப. X
12. மேலது ப. X

    **பாரறிய அனுதினமும் விழி மிழலைதனில் முன்**
    **படிக்காசு வைத்த கணபதி இருதாள் பணிவாம்"**

    (தலபுராணத்துதிப்பாடல்)

13. மேலது ப. x
14. திருநாவுக்கரசர் தேவாரம் - 4:2:5.
15. செவி வழிச்செய்தி
16. மேலது
17. மேலது

18. மேலது

19. மேலது

20. ஆய்வாளர் கிருபானந்தவாரியார் சொற்பொழிவில் கேட்டது.

21. ந.ரா.முருகவேள் - விநாயகர் பெருமை ப. 29

22. ஆய்வாளர் நேரில் கண்டது

23. வசந்தா சரவணபவன் - தெரிந்த கோயில்கள் தெரியாத விஷயங்கள் ப.129.

24. திருத்தொண்டர்புராணம் - திருநாளைப்போவார் புராணம் பாடல்.

25. கிருபானந்தவாரியார்-விநாயகர் பெருமை ஒலி நாடாவில் கேட்டறிந்தது.

26. கதைகூறியவர். திரு. விநாயக மூர்த்தி, அம்பாசமுத்திரம்.

27. திருத்துருத்தித் தலபுராணம்.

28. கதை கூறியவர் பேரா. கு. அருணாசலக்கவுண்டர். ம.தி.தா. இந்துக் கல்லூரி, திருநெல்வேலி - தமிழ்த்துறைத் தலைவர் (ஒய்வு)

29. கல்கி தீபாவளி மலர் 1992 - ப. 55

30. ஆய்வாளர் சேண்பாக்கம் செல்வ விநாயகர் கோயில் சிவாச்சாரியார் திரு. S.M. சுவாமி நாத பட்டரிடம் கேட்டறிந்தது. நாள் 16.12.92

31. Census of India - Vol IX-Salem Dist.

32. சேலம் மாவட்டம் - மணிமேகலைப் பிரசுரம் ப.67

33. தமிழக இந்துக்கோயில்கள் - பாகம் I மணிமேகலைப் பிரசுரம் ப.59

34. ஞானபூமி - செப். 91 - ப.5.

35. 16.4.92 அன்று ஆய்வாளர் ஆறுமுக மங்கலத்தில் திரு. ஆர். சுப்பிரமணியபட்டரைப் பேட்டி கண்டறிந்தது. இவ்வரலாறு திரு. இ.மு.சுப்பிரமணியபிள்ளை எழுதிய திருநெல்வேலிசில்லா கோயில் வரலாற்றிலும் இடம் பெற்றுள்ளது.

36. ச. தண்டபாணிதேசிகர் - கணபதி - பக் 78-79.

37. 10-1-93 அன்று மொட்டை விநாயகர் கோயில் பூசாரியிடம் ஆய்வாளர் கேட்டறிந்தது.

38. தினமணிச் சுடர் 14-9-69 பாரதி போற்றிய பார்வதிமைந்தன் எஸ். ரங்கராமானுஜம் ப.1.

39. கங்கைகொண்ட சோழபுரம் ஆலயக் கீழைக் கோபுரவாயிலுக்குத் தென்புறம் கல்தூண் ஒன்றில் இச்சாசனம் உள்ளது.

40. கிருபானந்த வாரியார், அ.நூ.-பக். 6-7
41. பேரா ஆர். வீரபத்திரன் - வாதாபி கணபதி - புதிய சிந்தனை - பக் 173, 174
42. வசந்தா சரவணபவன் - அ.நூ-பக். 154-155. ஔவைதிருமண ஓலை
43. திருவிளையாடல்
44. நடராசசிவம் - சகலசித்தி விநாயகர் - பக். 105, 106
45. ஆய்வாளர் பட்டினத்தார் என்னும் திரைப்படத்தில் கண்டது.
46. கிருபானந்தவாரியார் - அ.நூ. ப.19.
47. கல்கி தீபாவளி மலர் - 1992 - பக். 55,56
48. இதயம் பேசுகிறது செப். 13-19 1992 பனிகொண்டுவந்த தெய்வம் எம்.வி. இராமகிருஷ்ணன் (AGS) Dy Controller and Auditor General.
49. ஓம்சக்தி - ஏப்ரல் 1992 - இரட்டைப் பிள்ளையார்- பக். 102-106
50. குமுதம் 23-7-92 ஆயிரம் பேருக்கு முன்னால் ஒரு சங்கடம் தொகுப்பு: கொழுமம் சேகர்.
51. அரு. ராமநாதன் - விநாயகர் புராணம் - கிளைக் கதைகள் ப. 509.
52. நடராசசிவம் - சகலசித்திவிநாயகர். ப.47.
53. ஆய்வாளர் சிவத்திரு. முத்தையா பட்டரிடம் கேட்டறிந்த செய்தி.
54. நாக சண்முகம் - ஸ்ரீசந்தோஷிமாதா - அணிந்துரை.
55. Census of India 1961 - Temples in Madras State. p.103
56. கல்கி - தீபாவளி மலர் 1992-பக். 51
57. மேலது ஆய்வாளர் 22-2-93 அன்று நேரில் கண்ட பாடல்.
58. கோயிற்களஞ்சியம் வட ஆர்க்காடு மாவட்டம் தொகுதி பக். 1 4-15.
59. பத்மநாபன். எஸ். குமரி மாவட்டக் கோயில்கள், பக் 129-131.
60. Census of India 1961. Temples in Madras State. Trichy- Vol XI. p. 103.
61. கிருபானந்தவாரியார் - அ.நூ-பக்.13-14
62. ஆய்வாளர் திருச்செந்தூர்க் கோயில் சொற்பொழிவில் கேட்ட செய்தி. தகவலாளி - திரு. தி.வ. கல்யாணசுந்தரம், திருநெல்வேலி.
63. கிருபானந்த வாரியார் - அ.நூ.ப.16.
64. ஆய்வாளர் 20.2.93 அன்று இக்கோயிலுக்குச் சென்று கேட்டறிந்த செய்தி.
65. கந்தபுராணம், தி.பட்டுச்சாமி ஓதுவார் உரை, பண். 563 & 564.

## கணபதி வழிபாடு

தமிழர்கள் எச்செயலைத் தொடங்கினாலும் முதலில் கணபதியை வழிபட்டே தொடங்குவது வழக்கம். கணபதி வழிபாடு, தாம் தொடங்கும் செயலில் இடையூறுகள் வராமல் தடுத்தல் வேண்டுமென்றே பெரிதும் நடை பெறுகிறது. பிறப்பறுத்தல் வேண்டி வழிபடுவோரும் உளர். தமிழ் நாட்டிலுள்ள பெரிய சிவாலயங்களிலும் வைணவத்திருக்கோயில்களிலும் கணபதி வழிபாடு இடம் பெறுகிறது. கணபதிக்குத் தனிக்கோயில்களும் உள.

## சிவாலயங்கள்

சிவாலயங்களில் கோயில் நுழை வாயிலின் வலப்புறம் அம்பல விநாயகரும், இடப்புறம் அம்பல சண்முகரும், கோயிலின் திருச்சுற்றினுள் கன்னிமூலையில் கணபதி உருவம் இடம் பெறுதல் மரபு. கோயில் முன் யானையை நிறுத்துதல் போல, நுழைவாயிலில் காவல் தெய்வமாக கணபதி இடம் பெறுகிறார் என்கிறார், பால் கோர்ட்ரைட்.[1] அம்பல விநாயகர், கன்னிமூலை விநாயகர் நீங்கலாக கோயிலின் திருச்சுற்றுகளிலும் கற்றூண்களிலும் சுவர்களிலும் கணபதியின் பல்வேறு வடிவங்கள் காணப்படுகின்றன.[2] தமிழ்நாட்டிலுள்ள சில பெரிய சிவாலயங்களில் காணப்படும் கணபதி உருவங்களைக் காண்போம்.

### *சுசீந்திரம்*

சுசீந்திரம் (குமரி) தாணுமாலயன் கோயிலில் வசந்த மண்டபத்தின் அருகே நீலகண்ட விநாயகர் வல்லபையோடு காணப்படுகிறார். இவர் நீல கண்டர் என்பவரால் நிறுவப்பட்டவர்.[3] இவர் முன் நவக்கிரகங்கள் நிற்கும் மேடை உள்ளது. இவரை முக்குறுணி விநாயகர் எனவும் அழைப்பர். சித்திரசபையின் கிழக்குப் பகுதியில் தேவேந்திர விநாயகரும், செண்பகராமன் மண்டபத்தின் தென்பாகத்தில் சாட்சி கணபதியும் உள்ளனர். சிவனுக்கு முன்புள்ள மண்டபத்தூணில் இரண்டடி உயரமுள்ள கணேசானி சிற்பம் அமைந்துள்ளது (நி.ப.எண். 10) கி.பி.1568 இல் திருவிதாங்கூரையாண்ட உதயமார்த்தாண்டவர்ம மகாராசாவால் அமைக்கப்பட்ட உதயமார்த்தாண்ட விநாயகரும் உள்ளார்.[4]

### *திருநெல்வேலி*

திருநெல்வேலி (நெல்லை) நெல்லையப்பர் கோயிலில் உள்ள பொற்றாமரைக்குளக்கரையில் பொற்றாமரை விநாயகர் உள்ளார். சுவாமி

கோயிலுக்கும் அம்மன் கோயிலுக்குமிடையே அம்மையப்ப விநாயகரும், அலுவலகம் அருகே கச்சேரி விநாயகரும், சுவாமிக்கு வலப்புறம் திருச்சுற்றில் பிள்ளைப் பேறு நல்கும் பொள்ளாப் பிள்ளையாரும் உள்ளனர். பொள்ளாப் பிள்ளையார் முன் பன்னிரண்டு ஒட்டைகளோடு கூடிய கல் சன்னல் உள்ளது. ஓர் ஒட்டை ஏறத்தாழ ஒரு சதுர அடிப்பரப்புடையது. இத்தொண்டினைப் பிள்ளைத் தொண்டு என்பர். இதன் வழியே நுழைந்து செல்லும் பிள்ளைப் பேறற்ற பெண்கள் பிள்ளைப்பேறு பெறுவர். [5]நுழைவாயிலில் மகா கணபதியும் மேலவாயிலுக்கு எதிர்ப்புறம் பேருருவில் அமைந்த கணபதியும் உள்ளனர். ஆங்காங்கே தூண்களிலும் சுவர்களிலும் கணபதி உருவங்கள் உள. கி.பி.13 ஆம் நூற்றாண்டில் பாண்டியர்கள் பொள்ளாப் பிள்ளையாரின் அட்டமி நாள் பூசைக்கு நிபந்தங்கள் விட்டதைக் கல்வெட்டு கூறுகிறது.[6]

*மதுரை*

மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் கோயிலில் 108 விநாயகர் திருவுருவங்கள் உள்ளதாக அக்கோயிலின் அருச்சகர் குறிப்பிட்டார்.[7] அம்மன் சந்நிதிக்கு முன்புள்ள கீழவாயில் வழியே நுழைந்தால் வாயிலின் வலப்புறம் பெருச்சாளிமேல் ஆறடி உயரமுள்ள இலக்குமி கணபதி உள்ளார். உள்ளே முதலிப்பிள்ளை மண்டபத்தில் நான்கு கைகளோடு இடக்கால் தூக்கி நடன மாடும் விநாயகர் உள்ளார். தெற்கு வாசல் வழியே நுழைந்தால் பொற்றாமரைக் குளக்கரையில் விபூதி விநாயகரைக் காணலாம். அவ்வழியே செல்லும்போது சித்தி விநாயகர் மற்றும் நுழைவாயில் விநாயகரைக்காணலாம். மீனாட்சி அம்மன் கோயில் மகா மண்டபத்தில் இரட்டை விநாயகர் ஒரே தோற்றத்தில் உள்ளனர்.

அவருக்குப் பின்புறம் மூலையில் இரட்டைவிநாயகர் வெவ்வேறு தோற்றத்தில் உள்ளனர். அவர்கள் உச்சிட்ட கணபதியும் நடன கணபதியும் ஆவர். ஆடி வீதியிலே ஆங்காங்கே நாற்புறமும் கணபதி சந்நிதிகள் உள. தெற்காடி வீதியில் வில்வமரத்தடி விநாயகருக்கு இடப்புறம், சிறப்புப் பெற்ற வன்னிமரத்தடி விநாயகர் உள்ளார். ஆயிரக்கால் மண்டபத்தூணில் நடனவிநாயகர் உள்ளார். (நி.ப.எண். 12) மண்டபத்தின் உள்ளே கணபதியின் செப்புத் திருமேனிகளும் கற் சிற்பங்களும், ஓவியங்களும் உள்ளன. தெற்கு நோக்கிய முக்குறுணி விநாயகர் ஏழடி உயரத்தில் (நி.ப.13) உள்ளார்.[8] சுவாமி சந்நிதியில் நுழைவாயிலின் வலப்புறம் அனுக்ஞை விநாயகர் உள்ளார்.[9] நுழைவாயிலின் இடப்புறமுள்ள துவாரபாலகர் முன்புள்ள தூணில் புலிக்கால் கொண்ட கணேசானி உருவம் உள்ளது. (நி.ப.எண். 11) கோபுரங்களிலும் கணபதி இடம் பெற்றுள்ளார்.

*திருவானைக்கா*

திருவானைக்கா (திருச்சி) அகிலாண்டேசுவரி சமேத சம்பு கேசுவரர் திருக்கோயிலில் ஆனைக்காவிலண்ணலார் திருமுன் தென்மேற்குப் பகுதியில் கிழக்கு நோக்கியிருக்கும் ஓங்கார கணபதியே இத்தல விநாயகர். இவர், வணங்குவோர்க்கு அறம் பொருள் இன்பம் வீடு அருளுபவர்[10] அம்மனின் உக்கிரகம் தணிக்க ஆதி சங்கரரால் நிறுவப்பட்ட விநாயகர் அம்மனுக்கு முன்புள்ள மண்டபத்தில் உள்ளார். நாற்புறம் நான்கு தலைகளும் மேலே ஒரு தலையுமுடைய ஐம்முக (ஏரம்ப) விநாயகர் அகிலாண்டேசுவரியின் பின்புறம் உட்பிரகாரக் கன்னி மூலையில் உள்ளார். சுவாமிக்கு இடப்புறம் வெளிப்பிரகாரத்தில் அழகிய வல்லபை கணபதி பத்துக் கைகளோடு விளங்குகிறார். ஆங்காங்கே தூண் சிற்பங்களாகப் பல்வகை வடிவில் கணபதி உருவங்கள் உள்ளன.

*சிதம்பரம்*

சிதம்பரம் (தெ. ஆ.) சபாநாயகர் திருக்கோயிலில் சிறப்புடன் விளங்கும் கணபதி திருவுருவங்கள் உள. தேவாரத்திருமுறைகள் இருக்குமிடம் காட்டிய திருமுறை காட்டிய விநாயகர் பாலதண்டாயுதபாணி சந்நிதியிலிருந்து மேலைப் பிரகார வழியே செல்லும்போது குலோத்துங்க சோழன் மேலை வாயிலுக்கு எதிரே கீழ்புற மதிலை ஒட்டி அமைந்துள்ளார். மேற்கு நோக்கிய நிலையில் உள்ளார்[11] நடராசப்பெருமானுக்கு வலப்புறமுள்ள திண்ணையில் வலக்கால் தூக்கி ஆடும் நடன கணபதி உள்ளார். கற்பக விநாயகரே இத்தல விநாயகர். இவர் மேலைக் கோபுர வழியாக வெளியே சென்றால் கோபுரத்தின் தென் பகுதியில் மேற்கு நோக்கிய புடைப்புச் சிற்பமாக உள்ளார். இவரைக் குலோத்துங்க சோழவிநாயகர் எனக் கல்வெட்டு கூறும்.[12] தெற்குக் கோபுரவாயில் வழியே நுழைந்தால எதிரில் தட்சிணாமூர்த்தி நடன விநாயகரோடு காட்சி தருகிறார். இது தமிழ்நாட்டில் வேறு கோயில்களில் இல்லாத அமைப்பு.[13] தெற்குப் பிரகாரத்தின் மேற்குப் பகுதியில் கிழக்கு நோக்கி முக்குறுணி விநாயகர் உள்ளார். முகக் கட்டண விநாயகர் என்ற பெயர் மருவி முக்குறுணி விநாயகர் ஆகத்திரிந்தது என்பர் க.வெள்ளைவாரணனார்.[14]

*தஞ்சை*

தஞ்சாவூர்ப் பெருவுடையார் கோயிலில் முதலாம் இராசராசனால் (கி.பி.985-1012) நிறுவப்பட்ட பிள்ளையார் உள்ளார். இவரது பூசைக்குப் படைக்க வாழைப் பழங்களுக்குரிய நிவந்தம் விட்டதாகக் கல்வெட்டு கூறுகிறது. பெரிய கோயிலின்படியேறியவுடன் சுவாமி திருமுன் மகாகணபதி ஐந்தடி உயரத்தில் உள்ளார். சோழர் பாணிச் சிலையாதலின் நீண்ட துதிக்கையோடு

விளங்குகிறார். உள்ளே சந்நிதி வாயிலருகே நாலடி உயரத்தில் ஒன்றும், இரண்டடி உயரத்தில் ஒன்றுமாக இரட்டை விநாயகர் பொதுவான தோற்றத்தில் உள்ளனர். பிரகாரக் கன்னி மூலையில் கணபதிக்கு விமானத்தோடு கூடிய தனிக்கோயில் உள்ளது. ஒன்பது படிகள் ஏறிச்சென்று இவரைத் தரிசிக்கலாம். இவர் உருத்திராக்க மாலையோடு கூடிய பொதுவான தோற்றமுடையவர். இச்சந்நிதி கி.பி.1803 இல் மன்னன் இரண்டாம் சரபோஜியால் புதுப்பிக்கப்பட்டது.[15] இக்கணபதிக்குப் பின்புறம் லிங்கபூசைக்குத் தொடக்கமாகிய காட்டுப் பிள்ளையார் உள்ளார். இவரது காதுகள் சேதமுற்றுள்ளன.[16] இவரே ஆதியில் தலவிநாயகராக இருக்கலாம். முருகன் சந்நிதி படியேறுமிடத்தில் இடப்புறம் நோக்கினால் ஐந்தடி உயரத்தில் நின்ற கோலத்திலுள்ள கணபதியைத் தரிசிக்கலாம்.

### *கும்பகோணம்*

கும்பகோணம் (தஞ்சை) நாகேசுவர சுவாமி கோயிலில் மிகு சிறப்புப் பெற்ற கணபதி திருவுருவங்கள் இரண்டு உள்ளன. சுவாமியின் திரு முன்புள்ள மண்டபத்தில் வலப்புறம் கங்கை கண்ட விநாயகர் சிலை உள்ளது. இது தனித்தன்மை வாய்ந்தது. (அமைப்பு இயல் 2இல் காண்க) அங்குள்ள நடராசர் கோயில் முன் நுழைவாயிலின் வலப்புறம் உச்சிட்ட கணபதி உள்ளார். இதில் சக்தி, கணபதியின் குறியைப் பிடித்தவாறு உள்ளது. அபூர்வமான தோற்றமாகும். இதைத் தாந்தரிகக் கலை வடிவமென்பர்.[17]

### *திருவண்ணாமலை*

அண்ணாமலையார் திருக்கோயிலில் இருபத்திரண்டு கணபதி உருவங்கள் வழிபடப் பெறுவதாகக்கோயிலின் கும்பாபிஷேக மலர் குறிப்பிடுகிறது.[18] கிழக்குக் கோபுரத்தின் நுழைவாயிலில் உள்ளவிநாயகர் பற்றிய பாடல் தமிழரது பாராயணப் பாடலாகும்.[19] சிவகங்கைத் தீர்த்தத்தின் வடகரையில் சர்வசித்தி விநாயகர் அமர்ந்த கோலத்தில் உள்ளார். கிளிக்கோபுரத்தின் வலப்புறம் ஆனைதிறைகொண்ட விநாயகர் உள்ளார் (கதையை இயல் 3இல் காண்க) சுவாமி சந்நிதியில் கொடிமரம், பலிபீடத்திற்கு வடபுறம் சம்பந்தவிநாயகர். தமிழ்நாட்டிலுள்ள கணபதியின் பெரிய திருவுருவங்களில் இஃதும் ஒன்று. அசுரனைக் கொன்று அதன் செந்நீரை உடலில் பூசிக் கொண்டதால் செந்நிற விநாயகரானார் என்பர்.[20] சம்பந்தாண்டார் என்பவரால் நிறுவப்பெற்றவர். இதனால் இவருக்குச் சம்பந்தவிநாயகர் என்று பெயர் வந்தது என்பர்.[21] சிந்தூரகணபதிக்கு வலப்புறம் தலவிருட்சமாகிய மகிழ மரத்தடியில் ஒரு கணபதி உள்ளார். தென்மேற்கு மூலையில் கண்ட ராதித்த சோழன் மனைவி செம்பியன் தேவியால் அமைக்கப்பட்ட தல

விநாயகர் உள்ளார். [22] மூன்றாம் திருச்சுற்றில் பணிப்பெண் பொட்டுக் கட்டும் விநாயகர் உள்ளார். அம்மன் கோயில் நுழைவாயிலின் வலப்புறம் சிந்தூர கணபதி போன்று பெரிய வுருவினராக விசயராகவ விநாயகர் உள்ளார். இவர் விசயநகர மன்னர் காலத்தில் நிறுவப் பட்டிருக்கலாம் என்கின்றனர். [23] அம்மன் கோயில் முன்புள்ள அஷ்டலட்சுமி மண்டபத்தின் தொடக்கத்தில் முதல் தூணில் ஒரு கணபதியின் சிறிய உருவம் உள்ளது. பெரிய தூணை இணைக்குமிடத்தில் உள்ள கல்லில் உள்ளங்கையளவில் ஒரு கணபதி உருவம் உள்ளது. அம்மனை வழிபட்டு மீள்வோர் இவரையும் தூணைத் தொட்டு வழிபட்டுச் செல்கின்றனர். மூர்த்தி சிறிதாயினும் கீர்த்தி பெரிது போலும்! பொதுவாகக் கோயில்களில் தரிசனம் முடித்துச் செல்வோர் இறுதியில் கணபதியை வழிபட்டுச் செல்வதில்லை. [24] இக்கோயிலில் கணபதிக்குத் தனியாகத்தேர் உள்ளது.

### திருவாரூர்

இவ்வூர்க் கமலாலயம் என்னும் குளக்கரையில் மாற்றுரைத்த விநா யகர் உள்ளார். கோயிலில் வன்மீக நாதருக்கும் தியாகேசருக்கும் இடையில் ஐங்கலக்காசு விநாயகர் உள்ளார். [25] இக்கோயிலில் வாதாபி கணபதியும் மூலாதார கணபதியும் உள்ளனர்.

### காஞ்சி

காஞ்சி ஏகாம்பரநாதர் கோயிலில் விகடசக்கர விநாயகர் உள்ளார். [26] அண்மையில் நிறுவப்பெற்ற ஐம்முக விநாயகரும் உள்ளார். [27]

### இராமேசுவரம்

இராமேசுவரம் (இராமநாதபுரம்) இராமநாதசுவாமி ஆலயத்தில் தென் மேற்கு மூலையில் சந்தான கணபதியும் தெற்கு மூலையில் சௌபாக்கிய கணபதியும், இரண்டாம் திருச்சுற்றில் கோபுர வாயிலுக்கு உள்ளே தென்புறம் மேற்கு நோக்கியவல்லபை கணபதியும் உள்ளனர். [28]

## சக்திகோயிலில் விநாயகர்

### காஞ்சி

காஞ்சீபுரம் (செங்கை) காமாட்சி அம்மன்கோயில் சுவரில் செந்தூர விநாயகர் (சிவப்பு வண்ணம் பூசப்பட்டு) உள்ளார். அம்மனுக்குப் பின்புறமுள்ள சுவரிலும் வெளியே நுழைவாயிலின் இடப்புறத்திலும் விநாயகர் திருவுருவங்கள் உள்ளன. [29]

## முருகன்கோயில்களில் கணபதி

*திருச்செந்தூர்*

திருச்செந்தூர் (வ.உ.சி. ) கடற்கரைக்கோயிலுக்குச் செல்லும் வழியில் மணல் மேட்டுக்கு முன் துண்டி விநாயகர் உள்ளார்.[30] கோயிலினுள் கன்னி விநாயகர், மேலவாசல் முக்குறுணி விநாயகர், கொடிமரத்தடிவிநாயகர், மணியடியில் கரிய மாணிக்கப் பிள்ளையார் உள்ளனர். பிரமசாரியான கொடி மரத்தடிப்பிள்ளையார் சந்நிதியில் இலவசத்திருமணங்கள் நடைபெறுகின்றன[31]

*திருப்பரங்குன்றம்*

திருப்பரங்குன்றம் கோயில் நுழைவாயில்களுக்கருகே இரட்டைப் பிள்ளையார் திருவுருவங்கள் உள்ளன. மூலவருக்கருகேயுள்ள பெரிய பிள்ளையார் சிலை தமிழ்நாட்டின் தனித்தன்மை வாய்ந்த சிலைகளுள் ஒன்று[32]. ( நி.ப.எண் 17 )

*பழநி*

பழநி (திண்டுக்கல்) மலை அடிவாரத்தில் அடிவார கணப்தி உள்ளார். மலைக்குமேல் வெளிச் சுற்றில் அரசமரத்தடி விநாயகர் உள்ளார்.[33]

*திருத்தணி*

திருத்தணி (செங்கை) மலையில் ஆபத்சகாய விநாயகர் உள்ளார். இவர் தன் தம்பிதனக்காக ஆனைவடிவம் கொண்டு வள்ளியம்மையை அச்சுறுத்தி முருகன் திருமணத்திற்கு இணங்கச் செய்தவர் என்பர் ந.ரா.முருகவேள்.[34]

இதுகாறும் கூறியவற்றால் சிவாலயங்களில் ஆகமவிதிப்படி குறிப்பிட்ட இரண்டு விநாயகர்களையும் பல்வேறு வடிவங்களோடும் பல்வேறு பெயர்களோடும் விளங்கும் விநாயகர்களையும் வழிபடுகின்றனர் என அறிகிறோம்.

## வைணவக் கோயில்களில் கணபதி

வைணவக் கோயிலில் காணப்படும் விநாயகர் நெற்றியில் நாமத்தோடு காணப்படுகிறார். பாமரர் இவரைத் தும்பிக்கை ஆழ்வார் என்கின்றனர். இவரைச் சேனை முதலிகள் என வைணவர் கூறுவதாக முனைவர் தெ.பொ.மீனாட்சிசுந்தரனார் குறிப்பிடுகிறார்.[35] ஆனால் விநாயகர் விசுவக்சேனரின் பரிவாரதேவதைகளுள் ஒருவராகிய கரியமுகவர் என்றார் அழகர் கோயில் (மதுரை) அருச்சகர்.[36]

*திருவரங்கம்*

திருவரங்கம் ( திருச்சி ) அரங்கநாதர் கோயிலில் தெற்கு வாயில் வழியே சென்றால் வேணுகோபாலன் சந்நிதிக்கு முன்புள்ள மண்டபத் தூண் ஒன்றில் நடனமாடும் கணபதி காணப்படுகிறார்.

அன்பர்கள் இத்தூணைச் சுற்றி வழிபடுவதை ஆய்வாளர் கண்டார்.[37] திருக்கோயில் அலுவலகம் அருகிலுள்ள கோபுரத்தில் அமர்ந்த கோல விநாயகர் சுதையுரு உள்ளது. அக்கணபதியின் நெற்றியில் திருநீறும் திருமண்ணும் ஒருசேரக் காணப்படுவது வியப்பளிக்கிறது! திருவரங்க நாதர் பள்ளிகொண்டுள்ள கருவறையைச் சுற்றி வட்டமான திருச்சுற்று உள்ளது. ஓம்கார ( பிரணவாகார ) விமானத்தைச் சுற்றி இருப்பதால் இதற்கு ஓங்காரத்திருச்சுற்று அல்லது திருவுண்ணாழி (திருவிண் ஆழி என்பாருமுளர்) எனப்பெயர். இத்திருச்சுற்றில் ஒருபுறம் மட்டுமே வழியுள்ளது. இதன் வழியே சென்றால் ( திருவரங்கர் தலைமாட்டில் ) வெளிப்புறச்சுவரில் இடக்கைபுறமுள்ள மாடத்தில் அமர்ந்த கோலத்தில் பொதுவான தோற்றத்தில் ஒரு கணபதி உள்ளார். இவரை விக்கினபதி எனத் திருவரங்கர்கோயில் வரலாற்று நூல் குறிப்பிடுகிறது. நாடோறும் வடிசில் எனப்படும் சுத்தான்னம் இவருக்குப்படைக்கப்படுகிறது. விநாயக சதுர்த்தியன்று மோதகமும் படைக்கப்படுகிறது. [38]

*காஞ்சிபுரம்*

காஞ்சிபுரம் (செங்கை) வரதராசப்பெருமாள்கோயில் கீழ்ப் பிரகாரத்தில் மேடை மீதிலுள்ள அறையில் அமர்ந்த கோலத்தில் வலஞ்சுழி விநாயகர் திருவுருவுள்ளது. இவருக்கு விபூதி விநாயகர் என்று பெயர். [39]

*திருவல்லிக்கேணி*

திருவல்லிக்கேணிப் ( சென்னை ) பார்த்தசாரதி கோயில் சந்நிதி கோபுரவாசலுக்கு வலப்புறம் வலம்புரி விநாயகர் நின்ற கோலத்தில் உள்ளார். தமிழ் நாட்டிலுள்ள கணபதி சிலைகளில் தனித் தன்மை வாய்ந்த சிலை இது! கீழ்வலக்கையிலுள்ள வெண்ணெயைத் துதிக்கையால் தொட்டுக் கொண்டு நிற்கிறார். கீழ் இடக்கையில் தண்டு உள்ளது. முன்பு இவருக்கு வெண்ணெய் சாத்துவது வழக்கம். [40] இன்று திருக்கோயில் நிர்வாகம் வெண்ணெய் சாத்துவதைத் தடை செய்துள்ளது.

*திருமாலிருஞ்சோலை*

அழகர்கோயில் எனப்படும் திருமாலிருஞ்சோலை (மதுரை) யிலுள்ள அழகர் திருக்கோயிலில் அழகருக்கு முன்புள்ள மண்டபத்தில் அழகருக்கு

வலப்புறம் வலம்புரி விநாயகரின் பழமையான சிலை ஒன்று உள்ளது. இவரும் திருமண்தரித்தவராகவே காணப்படுகிறார். [41] அமர்ந்த கோலம். பொதுவான தோற்றம். நெற்றியில் நாமம். பாசம், அங்குசம் தெளிவாகத் தெரியவில்லை.

## கணபதி ஆலயங்கள்

தமிழ் நாட்டில் கணபதியை மூலவராகக் கொண்டு ஏனைய தெய்வங்களைப் பரிவார தேவதைகளாகக் கொண்ட ஆலயங்கள் பல உள்ளன. அவற்றுள் சிலவற்றை நோக்குவோம்.

### கோட்டாறு

நாகர்கோயிலின் ( குமரி ) ஒரு பகுதியான கோட்டாறு என்னுமிடத்தில் விநாயகர் ஆலயம் ஒன்று பெருமதிற்சுவர்களோடு உள்ளது. மூலவரான இவ்விநாயகருக்குத் தேசிக விநாயகர் எனப்பெயர். இக்கோயில் அவ்வூர்ச் செட்டி சமுதாயத்தாருக்குச் சொந்தமானது. பிள்ளையார்பட்டி தேசிக விநாயகர் பெயரை இவ்விநாயகரும் கொண்டுள்ளார். ஏனெனில் அவ்வூரை அடுத்துள்ள செட்டிமார் இங்குக்குடியேறியுள்ளனர். நடராசரும் சிவகாமி அம்மனும் இக்கோயிலில் உள்ளனர். திருச்செந்தூர் முருகன் கோயிலில் வழங்கப்படுவது போல் ஊழியருக்குச் சோற்றுக்கட்டிகள் வழங்கப்படுகின்றன.[42]

### திருநெல்வேலி

நெல்லை மாவட்டத்தில் திருநெல்வேலி நகரம், பேட்டை மற்றும் மணி மூர்த்தீசுவரம் ஆகிய இடங்களில் கணபதியை மூலவராகக் கொண்ட கோயில்கள் உள்ளன.

### நகர்

திருநெல்வேலி நகரில் மேலத்தேர்த்தெருவும் தெற்குத்தேர்த் தெருவும் சந்திக்குமிடத்தில் சந்திப்பிள்ளையார் கோயில் உள்ளது. மூலவரான பிள்ளையார் அமர்ந்த கோலத்தில் பொதுவான தோற்றத்தில் உள்ளார். பரிவார தேவதைகளாக சிவன், பார்வதி மற்றும் ஒன்பான் கோள்களும் உள்ளன. [43]

### பேட்டை

திருநெல்வேலியை அடுத்துள்ள பேட்டை என்னுமூரில் மூப்பனார் இனத்துக்குச் சொந்தமான விநாயகர் கோயில் பெருமதிற்சுவர்களோடும் கொடிமரத்தோடும் விளங்குகிறது. பரிவார தேவதைகளாக மீனாட்சியம்மையும் சுந்தரேசுவரரும் நடராசரும் மற்றும் சுப்பிரமணியர், வள்ளி தெய்வ யானையும் உள்ளனர். மூலவரான விநாயகருக்குச் சர்க்கரை

விநாயகர் எனப்பெயர்.[44] ஒன்பான் கோள்கள் சந்நிதியும் உள்ளது. தமிழ் நாட்டில் இவ்விநாயகர் கோயிலில் மட்டுமே அறுபத்து மூன்று நாயன்மார் சிலைகள் உள்ளன! ஒவ்வொரு நாயனாரின் குருபூசை சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. விநாயக சதுர்த்தி தவிர திருவாதிரைத் திருவிழாவும் கொண்டாடப்படுகிறது.

*மணிமூர்த்தீசுவரம்*

திருநெல்வேலியிலிருந்து சீவலப்பேரி செல்லும் சாலையில் உடையார் பட்டியில் உள்ளது. இவ்விநாயகர் கோயில். கருங்கல் மதிற் சுவர்களோடும் ஐந்து நிலைகளை உடைய உயர்ந்த இராசகோபுரத்தோடும் விளங்குகிறது. இரண்டு ஏக்கர் பரப்பளவு கொண்டது. தண்பொருநை ஆற்றின் கரையில் உள்ளது. ஐந்து பரம்பரைக்கு முன்மணப்படை மகாராஜா எனப்பட்ட மூர்த்தி செட்டி என்பவர் தனி நபராக இவ்வளவு பெரிய பரப்புள்ள கோயிலைக் கட்டினாராம்.[45] ஆனால் முற்றத்தில் சிதறிக் கிடக்கும் சிலைகளை நோக்கினால் இது நாயக்கமன்னர்களால் கட்டப்பட்டது புலனாகும்.

தமிழ்நாட்டிலேயே உச்சிட்ட கணபதியை (வல்லபையோடு கூடிய கணபதி) மூலவராகக் கொண்ட கோயில் இது மட்டும்தான் எனத் தெரிகிறது[46]. ஈராண்டுக்கு முன்புதான் (04-07-92) பழுது பார்க்கப்பட்டு நாள் வழி பாட்டிற்கும் ஏற்பாடு செய்து வைக்கப்பட்டது. பழதுபட்ட பிள்ளையாருக்குரியதேரும் உள்ளது. கணபதிக்கு இடப்புறம் நெல்லையப்பர் அறையில் நெல்லையப்பர் சிலை (லிங்கம்) உள்ளது. கணபதிக்கு முன்புள்ள அருத்த மண்டபத்தில் காந்திமதி அம்மன் இருந்த அறை உள்ளது. சிலையைக் காணவில்லை. முருகன் சிலையிருந்ததாக 1961-ஆம் ஆண்டு கெசட்டு அறிவிக்கிறது. இன்று அச்சிலை இல்லை.

*பிள்ளையார்பட்டி*

பிள்ளையார்பட்டி (பசும்பொன்) என்றும் பெயரே இது விநாயகர் குடிகொண்டுள்ள சிற்றூர் என்பதைக் காட்டும். இங்கு இராச கோபுரங்களுடன் கூடிய பெரிய திருக்கோயில் உள்ளது. குடைவரைக்கோயில் இது. உள்ளே நுழைந்ததும் கிழமேல் ஓடிய பத்தியை அடுத்து நான்கு தூண்கள் இடைநிற்க தென்வடல் ஓடிய இரட்டைப்பத்தி மண்டபம் காணப்படும். அதன் கீழ்ப்புறப்பத்தியின் தென்பால் மலை நெற்றியில் ஆறடி உயரத்தில் விநாயகர் அமர்ந்த கோலத்தில் காட்சி தருகிறார். (முன்அட்டை) இப்புடைப்புச் சிற்பம் வடக்கு நோக்கிக் காணப்படுகிறது இவரே கற்பகப்பிள்ளையார் எனப்படும் தேசி விநாயகர். வலக்கையில் சிவலிங்கத்தைக் கொண்ட பிள்ளையார் தமிழ்நாட்டில் வேறெங்குமில்லை. மேலும் இவரது இடத் தந்தம் குறுகியுள்ளது.

சிவனும் பார்வதியும் பரிவார தேவதைகளாக விளங்குகின்றனர். இவரே தமிழ் நாட்டின் ஆதிப்பிள்ளையாராக இருக்கலாம். [47]

### இராசபாளையம்

இராசபாளையம் (காமராசர்) உமா மகேசுவர விநாயகர் கோயிலில் அண்ணாமலையாரும் உண்ணாமுலையம்மையும் நிறுவப் பெற்றுள்ளனர். கணபதிக்கு முன் நந்திவாகனம் உள்ளது. இது இவ்வூர் வெள்ளாஞ் செட்டியார்கட்குச் சொந்தமான கோயில். [48]

### சேண்பாக்கம்

சேண்பாக்கம் என்னும் சிற்றூரில் (வ.ஆ.) செல்வ விநாயகர் கோயில் உள்ளது. (தோற்றம் பற்றியகதையை இயல் 3-இல் காண்க) பதினோரு பொள்ளாப்பிள்ளையார்கள் ஓங்கார வடிவில் இருக்கின்றனர். இப்பதினோரு பிள்ளையார்களின் பெயர்கள் வலப்புறச் சுவர் ஓவியங்களில் காணப்படுகின்றன. [49] கணபதிக்குப் பின்புறம் மீனாட்சி மற்றும் சுந்தரரேசுவரர் சிலைகள் நிறுவப் பெற்றுள்ளன. தக்கிணாமூர்த்தி, சண்டிகேசுவரர் முருகன் சிலைகள் உள. வேங்கடவரும் உள்ளார். கொடிமரம் உண்டு. விநாயகர் சதுர்த்தி 10 நாள் விழா நடைபெறும். பிரதானமான கணபதிகள் மூவருள் நடுவிலுள்ளவர்க்குப் பின்புறம் வண்டிச் சக்கரம் ஏறியவடு தெரிகிறது.

### ஆறுமுக மங்கலம்

ஆத்தூர் (வ.உ.சி.) அருகிலுள்ள ஆறுமுகங்கலம் என்றும் சிற்றூரில் ஆயிரத்தெண்விநாயகரை (பெயர்க் காரணத்தை இயல் 3-இல் காண்க) மூலவராகக் கொண்ட பெரிய மதிற்சுவர்களோடு கூடிய கோயில் உள்ளது. இவர் அமர்ந்த கோலம்; பொதுவான தோற்றத்தில் உள்ளார். இவருக்குப் பரிவார தேவதைகளாக காளத்தி ஈசுவரரும் கலியாண சுந்தரி அம்மனும் உள்ளனர். சித்திரைத்திங்கள் உரோகிணி நாளில் கொடியேற்றப் பெற்று பத்து நாட்கள் இவருக்குத் திருவிழா நடைபெறும். தேரோட்டமும் உண்டு. உலாவரும் மூர்த்தியாக ஐம்முகப் பிள்ளையார் உள்ளார். பத்து விழா நாட்களுக்குரிய வாகனங்கள் இக்கோயிலில் உள்ளன. [50]

### கணபதி அக்கிரகாரம்

தஞ்சை மாவட்டம் பாபநாசம் வட்டத்தில் திருவையாற்றிலிருந்து கும்பகோணம் செல்லும் பேருந்து வழித்தடத்தில் கணபதி அக்கிரகாரம் உள்ளது. இங்குள்ள மகா கணபதி சிலை சோழர்பாணி வடிவில் உள்ளது. இவர் கோயிலில் அம்மையப்பரோடு சண்டிகேசுவரரும் உள்ளார். [51] இக்கணபதியை அகத்திய முனிவர் நிறுவியதாகவும், கௌதமர் பூசித்தாகவும் கூறுகின்றனர். [52]

இவர் அமர்ந்த கோலத்தில் பொதுவான தோற்றத்தில் இடம்புரியாக வளைந்த துதிக்கையில் மோதகம் கொண்டு விளங்குகிறார். (நி.ப.எண். 26) ஆயிரத்தெண் விநாயகர் கோயிலில் உள்ளவாறு வாகனங்கள் இங்கும் உள்ளன. விநாயகர் சதுர்த்தியன்று தம் வீட்டில் செய்த மோதகத்தினை இவ்வூரார் இவ்விநாயகருக்கே கொண்டு வந்து படைக்கின்றனர். இக்கோயிலில் வழங்கப்படும் மோதகம் முந்திரிக் கொத்துப்போலுள்ளது. பல நாட்கள் இருப்பினும் கெட்டுப்போகாது.

*திருச்சி*

திருச்சி மலைக்கோட்டையின் உச்சியில் அமர்ந்துள்ள பிள்ளையார் உச்சிப்பிள்ளையார். இவருக்குக் கீழேயுள்ள பகுதியிலேயே தாயுமானவர் கோயில் அமைந்துள்ளது. (இயல் 3-இல் இவர் வரலாறு உள்ளது) கணபதி முருகனுக்குரிய மலையுச்சியில் இருப்பது சிறப்பு.

*திருவலஞ்சுழி*

திருவலஞ்சுழி (தஞ்சை) சுவாமி மலைக்கு அருகிலுள்ளது. இங்குள்ள வெள்ளை விநாயகர் பெயரால் இக்கோயில் விளங்குகிறது. அசுரரும் தேவர்களும் பாற்கடலைக் கடைந்தபோது விநாயகரை வழிபட்டுத் தொடங்காமையால் ஆலகாலவிடம் தோன்றியது. தம் தவறுணர்ந்த தேவர்கள் கடல் நுரைகொண்டு அமைத்து வழிபட்ட திருவுருவே வலஞ்சுழி விநாயகர் என்பர்.[53] இந்திரன் பூவுலகு வந்த போது இவரையும் உடன் கொண்டு வந்தான் என்கிறது புராணம். சிறிய ஓரடிக்குட்பட்ட - திருவுரு இது. கடல் நுரையில் செய்யப்பட்டதால் திருமுழுக்கு இல்லை. பச்சைக்கற்பூரம் மட்டுமே சாத்தப் படும். பொதுவான தோற்றம். அமர்ந்த கோலம். இவர் முன்புள்ள கருங்கல் பலகணி சிற்பக்கலையின் அற்புதப்படைப்பு. இவருக்குப்பின்புறம் கபர்தீசர் சந்நிதியும் பெரியநாயகி அம்மை சந்நிதியும் உள்ளன. கோயிலுள்ளே இரட்டை வலம்புரி விநாயகர் சிலைகள் உள்ளன.

## சிறப்பு மூலவர்

*ஈச்சனாரி விநாயகர்*

தமிழ்நாட்டிலேயே பெரும் பணம் படைத்த கணபதியாக ஈச்சனாரி (கோவை) விநாயகர் காணப்படுகிறார். மேலைச் சிதம்பரம் எனப்போற்றப்படும் பேரூர் பட்டீசுவரர் திருக்கோயிலில் பிரதிட்டை செய்வதற்காக ஐந்தடி உயரமும் மூன்றடி பருமனும் கொண்ட விநாயகர் சிலை மதுரையிலிருந்து வண்டியில் கொண்டு வரப்பட்டது. பொள்ளாச்சி தாண்டி (கோவையிலிருந்து பத்து கி. மீட்டர்) யதும் வண்டியின் அச்சு ஒடிந்து விட்டது. கணபதி அங்கேயே

ஈச்சம் புதர் நிறைந்த இடத்தில் அமர்ந்துவிட்டார். அதனால் இவரை ஈச்சநாரி விநாயகர் என்பர். இங்கு அமர்ந்த கணபதி சிலையை நகர்த்த முயன்றனர். முடியவில்லை. ஈசனும் நாரி (உமை)யும் சேர்ந்த இடத்தில் மகன் அமர்ந்து விட்டார் என்பர் தவத்திரு சுந்தர சுவாமிகள்.

இவ்விநாயகர் சிலையில் உருத்திராக்க மாலைகள் காணப்படுகின் றன. இக்கோயிலை ஒட்டி அழகிய திருமண மண்டபம் உள்ளது. அசுவதி முதல் ரேவதி வரை ஒவ்வொரு நட்சத்திரத்திற்குமான செலவை ஒவ்வோர் அன்பர் ஏற்றுக் கொண்டிருப்பதால் கோயில் செலவு குறைவு. ஆண்டிற்கு ரூபா பதின்மூன்று இலட்சம் வருமானம் வருவதாகக்கோயில் செயல் அலுவலர் கூறினார். புதிய வாகனங்கள் வாங்குவோர் இங்கு வந்து காணிக்கை செலுத்திய பின்னரே வழிப்படுதலை ஆய்வாளர் கண்டார். இக்கோயிலில் .அருச்சகர் காட்டும் தட்டில் அன்பர் இடும் காசினைக் கோயில் பணியாளர் அனைவரும் பகிர்ந்து கொள்வதை இங்குத்தான் காணலாம். இவர் பொதுவுடமைக்கணபதி! 03-06-1997 அன்று திருக்குடமுழுக்கு விழா நடைபெற்றது. 108 யானைகள் வழிபாடு இவ்விநாயகர் பூசையோடு முடிக்கப்பெற்றது.

*அடையாறு*

தமிழ் நாட்டிலேயே காணாபத்திய பஞ்சாயதன முறையில் அமைந்துள்ள கோயில் சென்னை அடையாற்றிலுள்ள மத்திய கைலாசு என்னுமிடத்திலுள்ள வேங்கட ஆனந்த விநாயகர் கோயில். [54] மட்டுமேயாகும்.

இக்கோயில் மூலவராகக் கணபதி விளங்க நாற்புறங்களிலும் சிவன், சூரியன், தேவி, திருமால் ஆகிய நால்வரும் நிறுவப்பட்டுள்ளனர். (வ.ப.எண். 1,2) மேலும் அன்பர்கள் வேண்டுகோளுக்கிணங்கக் காணாபத்திய மரபுக்கு அப்பாற்பட்டு அனுமார் சந்நிதி, சுவர்ண பைரவர் சந்நிதி, ஒன்பான் கோளுக்குரிய சந்நிதி ஆகியவற்றையும் உருவாக்கியிருக்கிறார்கள். பிள்ளையார் சதுர்த்தியன்று சூரிய ஒளி மூலவர் (கணபதி) மீது படுவது இச்சந்நிதியின் சிறப்பு. இங்கு அனைத்துத் திருவிழாக்களும் கொண்டாடப்படுகின்றன.

இப்பிள்ளையார் திதி கொடுக்க வாய்ப்பற்றவர்கட்கும் பிள்ளையில்லா தவர்களுக்கும் பிள்ளையாக இருந்து திதி கொடுக்கிறார். இதற்கான கட்டளைப் பணத்தை இக்கோயிலில் செலுத்தினால் குறிப்பிட்ட திதியில் ஈன்றோர் கடன் (பிதுரு கர்மா) நிறைவேற்றப்படும். வெளி நாடுகளில் உள்ளவர்களும் சிறையில் உள்ளவரும் தம் பெற்றோர்க்குத் திதி கொடுக்க இங்குக் கட்டளைப் பணம் செலுத்துகின்றனர். பகல் 12 மணிக்கு மேல் அருச்சகர் குளித்துவிட்டு ஈர ஆடையுடன் திதியைத் தொடங்குகிறார். ஆனந்தவிநாயகர் திருப்பாதங்களில்

வைக்கப்பட்ட தருப்பைப்புல்லை எடுத்துக் கொண்டு திருமால் சந்நிதிக்குச் செல்கிறார். திருமாலுக்குப் படைக்கப் பெற்ற வெண்சோற்றினை (சுத்தான்னம்) பெற்றுக் கொண்டு சிவபிரான் சந்நிதிக்கு வருகிறார். அங்கு வெண்சோறு பிண்டமாக உருப்பெறுகிறது. அங்கிருந்து சூரியன் கோயிலுக்குச் செல்கிறார். ஆனந்த விநாயகரே கருத்தாவாக விளங்குவதால் மந்திரங்கள் செபிப்பதில்லை. சூரியன் கோயிலிலிருந்து பிண்டத்தைக் காக்கைகட்கு இடுவதற்கென்று கட்டப்பட்டுள்ள மேடையில் படைக்கிறார். காகங்கள் வடிவில் பிதுருக்களே வந்து உண்பதாகத் தமிழர் கருதுவர். காகங்கள் பிண்டத்தை உண்ணுகின்றன.

இவ்வாறு திதி கொடுப்பதற்குரிய வாய்ப்பு சாதி இனம் பாராது அனைவருக்கும் வழங்கப்படுகிறது. [55]

இக்கோயில் ஆனந்த விநாயகர் முன்புள்ள மண்டபத்தில் ஆறுபடை வீட்டு முருகனை ஒரே பீடத்தில் கண்டு வழிபடலாம்.

*மணிகள்*

ஆனந்த விநாயகர் ஒலி வடிவினர் என்பதற்கேற்ப சந்நிதியில் மேலே ஏழிசைகளை ஒலிக்கும் எட்டு மணிகளை (எட்டாவது மணி சட்ஷமம் பின்வருவதைக் குறிப்பதாகும்) தொங்கவிட்டுள்ளனர்.

*புதிய வடிவம்*

இக்கோயிலில் ஒரு புதிய கணபதி வடிவினை நிழற்படமாக வழங்கு கின்றனர். (நி.ப.எண். 24) இக்கணபதிக்கு ஆதியந்தப் பிரபு எனப்பெயர். அர்த்த நாரீசுவரர் போல, வலப்புறம் கணபதி திருவுருவில் பாதியும், இடப்புறம் அனுமார்திருவுருவில் பாதியுமாக விளங்குகின்றது. இக்கோயிலின் செயலர் திரு. சுவாமி என்பாருக்கு ஒரு நாள் பூசை வேளையின் போது இக்காட்சி கிடைத்ததாகக்கூறினர். [56] இத்திருவுருவினை வழிபட ஒன்பது அறுகம்புற்களும் ஒன்பது துளசி இலைகளும் போதும் என்றும் அக்கோயிலின் குறிப்புத் தாள் கூறுகிறது. இவ்வடிவில் செப்புத் திருமேனி அமைத்து இக்கோயிலின் நுழைவாயிலில் வைத்துப் பூசிப்பதை ஆய்வாளர் 08-08-94 அன்று கண்டார்.

## இணைக்கப்பட்ட வழிபாடுகள்

கணபதி வழிபாட்டோடு மரவழிபாடு, பாம்பு வழிபாடு, ஒன்பான்கோள் வழிபாடு, சிறுதெய்வ வழிபாடு ஆகியன இணைக்கப்பட்டுள்ளன.

## மரவழிபாடு

மரங்களை வழிபடும் வழக்கம் ஒரு காலத்தில் கிரேக்க நாட்டிலும் பிரான்சு நாட்டிலும் நிலவியிருந்ததென அறிஞர் கூறுவர். ஆசியாக் கண்டத்திலுள்ள மக்கள் சில மரங்களுக்கு இயற்கையிலேயே இறை ஆற்றல் உண்டென் நம்புகின்றனர். மனிதன் முதலில் மரங்களை இறை யாகவே வழிபட்டான். பின் மரத்தில் இறைவன் குடிகொண்டுள்ளான் என்று வணங்கினான். நாளடைவில் இறைவனையே மரத்தினடியில் அமர்த்திவழிபடும் நிலை ஏற்பட்டிருக்கலாம். [57] மருத்துவப் பயன் தரும் மரங்களை "பயன் மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் ...படின்" என்று வள்ளுவர் கூறுகிறார். [58] பெரிய கோயில்களில் தல விருட்சங்கள் என மரங்கள் வளர்க்கப்படுகின்றன. இனி கணபதி வழிபாட்டோடு இணைக்கப்பெற்ற மரங்களைக் காண்போம்.

### *அரசமரம்*

போதி மரத்தடியில் புத்தர் இருப்பது போன்று அரசமரத்தடியிலே விநாயகர் அமர்ந்துள்ளார் என்பர். புத்த விநாயகர் என்ற பெயரும் அவருக்கு உண்டு. பிள்ளைப் பேறில்லாத பெண்கள் காலையில் நீராடி கணபதி வீற்றிருக்கும் அரச மரத்தைச் சுற்றி வருவது தமிழ்நாட்டு வழக்கம். 'அரச மரத்தைச் சுற்றி வந்து அடிவயிற்றைத் தடவினாளாம்' என்பது ஒரு தமிழ்ப் பழமொழி. அரசின் இளங்கொழுந்து சூலகத்துக் கோளாறுகளைப் போக்கும். சூல் அமையச் செய்யும். அதன்பட்டை புண்களை ஆற்றும். விதை மலச்சிக்கல் போக்கும் எனப்பொருட் பண்பு நூல் புகல்கிறது. [59]

### வேம்பு

அரசமரமும் வேப்ப மரமும் பின்னிப் பிணைந்த இடமே பிள்ளையாருக்கு உகந்த இடம். வேம்பின் கொழுந்தும் புழுக்களை அழிக்கும் சக்தி வாய்ந்தது. அம்மை நோயைத் தீர்ப்பது. வேப்பம் பூப்பச்சடி குன்ம நோயைப் போக்கும். வேப்பெண்ணெய் பல் சொத்தையில் உள்ள புழுவைப் கொல்லும். பட்டை, மலேரியா சுரம் தீர்க்கும். [60]

அரசமரம் சிவனாகவும், வேப்பமரம் அம்மையாகவும் விளங்க விநாயகர் பிள்ளையாக அமர்ந்து பிள்ளைப் பேறு நல்குகிறார் 'வேம்பரசு சுற்றி விநாயகனைத் தெண்டனிட்டுத் தேடியதோர் புண்ணியத்தால் செல்வமாய் வந்த கண்ணோ?' என்பது தமிழ் நாட்டுத் தாலாட்டுப்பாடல். [61]

### *ஆலமரம்*

மதுரை மேலமாசி வீதியும் வடக்குமாசி வீதியும் சேருமிடத்து நேரு ஆலால சுந்தர விநாயகர் ஆலமரத்தடியில் அமர்ந்துள்ளார். 'ஆலும் வேலும்

பல்லுக்குறுதி' என்பது பழமொழி. ஆலின்பால் அசைகின்ற பல்லினை இறுக்கும். இதன் விழுது பல் துலக்க உதவும் - பட்டை நீரிழிவு போக்கும். விதை, மலச்சிக்கல் நீக்கும். பழுப்பு இலையைச் சுட்டுச் சாம்பலாக்கி நல்லெண்ணெயில் கலந்து கரப்பானுக்குப் பூசக் குணம் காணலாம். [62]

*வன்னிமரம்*

மதுரை மீனாட்சி அம்மன் கோயிலில் வன்னியடி விநாயகர் உள்ளார். வன்னிமர இலை புளியின் இலை போலத் தோற்றமுடையது. இலைச் சாற்றுடன் பசு நெய் வெண் குங்கிலியம் சேர்த்துண்ண மேகவெட்டை, சொறி, சிரங்கு நீங்கும். பட்டையை உலர்த்திச் சூரணமாக்கித்தினம் 2 கிராம் உண்ணக் கபவிருத்தி நீங்கும். [63]

*களாமரம்*

இதைக் கிளா என்றும் கூறுவர். நெல்லை மாவட்டம் சங்கரன் கோயிலில் கிளாவடி விநாயகர் தெரு உள்ளது. 'நாளைக்குக் கிடைக்கும் பலாக்காயினும் இன்றைக்குக் கிடைக்கும் காளாக்காய் மேல்' என்பது பழமொழி. களாப்பூவின் சாறு மூன்று துளிவிடக் கண்ணிலுண்டாகும் சதைப்படலம் நீங்கும். காயை ஊறுகாய் செய்து உண்ணலாம். பசியுண்டாக்கும் தன்மையுடையது. கனியை உண்டால் உடல் வலி போகும். வேர், நஞ்சின் தன்மையைப் போக்கும். [64]

*வில்வமரம்*

மதுரை மீனாட்சியம்மன் கோயில் தெற்கு ஆடிவீதியில் வில்வமரத்தடி விநாயகரைக் காணலாம். வில்வம் சிவனுக்கு உகந்தது போலவே பிள்ளையாருக்கும் உகந்தது. இதன் தளிர், மேகம் போக்கும் பூ, மந்தம் நீக்கும்.

பிஞ்சு குன்மம் தீர்க்கும். பழத்தைலம் மூளைக்குக் குளிர்ச்சி தந்து பைத்தியம் போக்கும். இலை அருச்சனைக்கு உதவும். இலையை ஊற வைத்தசாறு குளிர்ச்சியைத் தரும். வில்வாதி லேகியம் வாயுக்கோளாறு போக்கும். [65]

*மாமரம்*

மாவடி விநாயகர் நாகப்பட்டினத்தில் காணப்படுகிறார். மாவிலை மங்கலப் பொருள். தண்ணீரில் அதன் இலைகளைப் போடுவதால் நீர் தூய்மை அடையும். பிஞ்சு வாந்தி, மந்தம் போக்கும். காயை அளவோடு உண்ணலாம். 'மாதா ஊட்டாத சோற்றை மாங்காய் ஊட்டும்' என்பது மாவடு ஊறுகாயைப் பற்றிய பழமொழி. கனி முக்கனிகளில் ஒன்று. உயிர்ச் (வைட்டமின்) சத்துக்கள் நிறைந்தது. மாங்கொட்டையிலுள்ள பருப்பு சீதபேதியைப் போக்கும். [66]

*அத்திமரம்*

தஞ்சாவூர்க் கலைக்கூட உள் முற்றத்தில் அத்திமரத்தடியில் பிள்ளையார் உள்ளார். அத்தி இலை இரத்தத்தைத் சுத்தம் செய்யும். அத்திப்பட்டையைப் பொடி செய்து நல்லெண்ணெய் விட்டு அரைத்துப் பிளவை முதலியவற்றிற்குப் பற்றிடக் குணமாகும். அத்திமரத்தின் பாலை அதிகாலையிலும் மாலையிலும் மூன்று நாட்கள் அருந்தினால் வாய்ப்புண் குணமாகும். அத்திவிதையைப் பாலில் காய்ச்சிச் சாப்பிட்டு வந்தால் மூத்திர எரிவு, எலும்புருக்கி நீங்கும், பெண்கள் சாப்பிட்டு வந்தால் கருவுண்டாகும். [67]

*மகிழமரம்*

திருவண்ணாமலையில் (தி.ச.) சிந்தூர விநாயகருக்கு வலப்புறம் மகிழ மரத்தடியில் விநாயகர் உள்ளார். மகிழம் வித்தை அரைத்துப் பாலில் கலக்கியுண்டு வந்தால் தாது விருத்தியுண்டாகும். [68]

*ஆத்தி*

சங்கரன்கோயில் (நெல்லை) புகைவண்டி நிலையத்தருகே ஆத்தி மரத்தடியில் விநாயகர் உள்ளார். ஆத்திப்பூ சோழர்களுக்கு மாலையாகப் பயன்பட்டது. இதுவும் குளிர்ச்சிதரும் மரமாதல் வேண்டும்.

*பனை*

இதனைப் புல்லினமாகத் தொல்காப்பியம் கூறும். தால மூலவிநாயகர் அல்லது கருக்கடி விநாயகர் திருக்கச்சூரில் (செங்கை) உள்ளார். [69] பனையின் பயன் பற்றிப் பல நூல்கள் உள. பதநீர் உடல் சூட்டைத் தணிக்கும். பனங்கற்கண்டு இருமல் போக்கும். நுங்கு, அம்மை நோயின் கடுமையைக் குறைக்கும். கிழங்கு, தாது விருத்தியை உண்டாக்கும். சிற்றூர்களில் வெயிலில் நடந்து வந்தோர்க்குப் பனாட்டும் (கருப்புக்கட்டி) தண்ணீரும் கொடுத்துச் சூட்டைத் தணிக்க உதவுவர்.

## இருமர இணைப்பு

பொதுவாகத்தமிழ் நாட்டில் அரசமரமும் வேப்ப மரமும் இணைந்து விளங்குமிடங்களிலேயே கணபதியை நிறுவி வழிபடுகின்றனர். அனைத்து ஊர்களிலும் இதனைக் காணலாம்.

## ஐந்து மர இணைப்பு

இம்மரம் மருதமலையில் (கோவை) முருகன் ஆலயத்தின் தென் கிழக்கு மூலையில் மதிலுக்கு வெளியே உள்ளது. இம் மரத்திற்கு முன்னும் பின்னும்

விநாயகர் திருவுருவங்கள் உள. இந்த மரத்தில் கொரக்கட்டை, இச்சி, ஆல், வக்கனை மற்றும் ஒட்டுமரம் ஆகிய ஐந்து மரங்கள் இணைந்துள்ளன என்றும், முன்பு அரச மரமும் இணைந்திருந்தது. அது பட்டுப் போய் விட்டது என்றும் 75 வயதான இருளர் கூறியதாகக் கோயில் தலவரலாறு குறிப்பிடுகிறது. [70] இம்மரத்தின் காற்று அனைத்துப் பிணிகளையும் தீர்க்கவல்லது. இம்மரத்தில் பல முனிவர்கள் இன்றும் கண்கட்குப் புலனாகாமல் தவம் செய்து வருகின்றனர் என்றும் அத்தல வரலாறு கூறுகிறது.

## ஒன்பது மரங்கள்

மதுரை மீனாட்சியம்மன் கோயிலில் வன்னியடி விநாயகரைச் சுற்றி ஒன்பது மரங்கள் உள்ளன. அவை வருமாறு 1. வன்னி 2. அரசு 3. வேம்பு 4. வில்வம் 5. மந்தாரை 6. அத்தி 7. நெல்லி 8. பவளமல்லி 9. கொன்றை இவை அனைத்தும் மருத்துவப்பயன் வாய்ந்தனவே.

## பாம்பு வழிபாடு

சைவரும் வைணவரும் பாம்பினைத் தங்கள் தெய்வங்களோடு தொடர்புபடுத்தி வழிபடுகின்றனர். சிவன், கழுத்தில் பாம்பைத் தரித்துள்ளார். திருமால் பாம்பணையில் துயில்கிறார். கணபதியின் அரைக் கச்சை பாம்பாகும். பாம்பு. ஒலி ஒளித்தத்துவத்தைக் குறிக்கும் குறியீடே. பாம்புக்குக் கட்செவி எனப்பெயர். கண் ஒளியையும் செவி ஒலியையும் வாங்கும். இறைவனும் ஒளி ஒலியாக விளங்குகிறான். ஒலியும் ஒளியும் அலை வடிவில் செல்லுதலையே பாம்பு புலப்படுத்தும் என்பர். [71] உழவர்கள் எலித்தொல்லையை ஒழிப்பதால் பாம்பைப் போற்றுவர். கணபதியைச் சுற்றிலும் பாம்புச்சிலைகளை நிறுவி வழிபடுவதன் காரணங்களைக் காண்போம்.

### *கணபதியும் பாம்பும்*

பாம்பு வழிபாட்டுடன் பிள்ளையார் வழிபாட்டைச் சேர்த்து வைத்தால் பிள்ளையார் வழிபாடு எளிதாக எங்கும் பரவும் எனக் கருதியிருத்தல் வேண்டும். [72]

### *பாம்பு தோடம்*

ஒருவன் முற்பிறவியில் பாம்புக்கு இடையூறு செய்தால் அவனுக்கு இப்பிறவியில் பாம்பு தோடம் பிடிக்கும். இதன் காரணமாகப் பிள்ளைப்பேறு இல்லாமல் போகும். [73] இப்பிறவியில் அவன் சாதகத்தில் இலக்கினத்திற்கு ஐந்தில் கேது அல்லது இராகு நிற்கும். இத்தோடம் நீங்க, கல்லினால் நாகர் உருச்செய்து வீட்டில் வைத்து நாற்பது நாட்கள் வழிபட்டுப் பின்னர் கணபதி

சிலை அருகில் கொண்டு வைப்பர். இதனால் பிள்ளைப்பேறு கிடைக்கும் என நம்புகின்றனர். கணபதி கேதுவுக்கு அதிபதி எனச் சோதிட நூல்கள் கூறும்.[74]

### நோய் நீக்கம்

பாம்பு வழிபாடும் முடக்கு நோய் தீர்க்கும் என நம்புகின்றனர்.

**"காக்கைக்குப் பூசைசெய்து கைநல்லாப் போகவில்லை**
**நாகர்க்குப் பூசை செய்து கை நல்லாப் போச்சு"**

என்னும் பாடலை ஈரோடு திரு. செ. இராசுதந்ததாக திரு.க.ப. அறவாணன் கூறுகிறார்.[75]

### நாகர் - அமைப்பு

நாகர்களை இருவேறு உருவங்களில் அமைப்பதுண்டு. ஒரே நாகம் அல்லது ஐந்து தலைநாகம் குடை பிடிப்பது போன்று அமைப்பர். அதனுள் லிங்கம் அல்லது கண்ணன் உரு அமைக்கப்படும். இரண்டு நாகங்கள் பின்னிப்பிணைந்து ஒன்றையொன்று முத்தமிடுவது போல அமைக்கப்படுவதும் உண்டு. நடுவில் லிங்கம் அல்லது கண்ணன் இடம் பெறுவதுண்டு. கனவில் பாம்புகள் இரட்டையாகத் தோன்றினால் நன்மை என்பது தமிழர் நம்பிக்கை.[76]

### பிள்ளைப்பேறு

பாம்பின் கொழுப்பால் மாத்திரை செய்து சாப்பிட்டுப்பின் இல்லறத்தில் அரவணைப்பு நிகழின் கருத்தரிக்கும் என்பது தமிழர் நம்பிக்கை.[77]

### கணபதியும் குண்டலினியும்

யோக சாத்திரம் கூறும் ஆறு ஆதாரங்களில் மூலாதாரம் கணபதிக்கு உரியது. அங்கு குண்டலி சக்தி பாம்பு போல் சுருண்டு கிடக்கிறது. அதைத் தட்டி உயரே எழுப்பினால் இறைக்காட்சி பெறலாம்.[78] மூலாதார கணபதி பாம்பின் மேல் நிற்பதைத் திருவாரூரில் காணலாம். (நி.ப.எண். 4)

கணபதியோடு கூடிய பாம்பு வழியாடு இல்லறத்தினர் பிள்ளைப் பேறு பெறவும், யோகிகள் இறையருள் பெறவும் வழிவகுக்கிறது என்பதைக் கண்டோம்.

## நவக்கிரக வழிபாடு

முற்பிறவிகளில் ஒருவன் செய்த வினைகட்கு ஈடாக அவனுக்கு இப்பிறவியில் நன்மை தீமைகள் விளைகின்றன என்பது தமிழர் நம்பிக்கை. ஒருவனது சாதகத்தில் ஒன்பது கோள்களும் எவ்விடங்களில் அமைந்துள்ளன.

என்பதைக் கொண்டு பலன் கூறுவர். தமிழ் நாட்டுச் சிற்றூர்களில் யாருக்காவது கோளின் குறையால் தீங்கு நேருமெனத் தெரிந்தால் கணபதியை வழிபடச் சொல்வர் அங்குள்ள பெரியோர். [79]

### கணபதிக்குள் அடக்கம்

ஒன்பான் கோள்களும் கணபதியில் திருவுருவுக்குள் அடக்கம் என்பதை செந்தூரில் வாழும் துறவி ஒருவர் கூறினார்.

| | | |
|---|---|---|
| கணபதியின் நெற்றி | - | சூரியன் |
| கொப்பூழ் | - | திங்கள் |
| வலத்தொடை | - | செவ்வாய் |
| இடத்தொடை | - | கேது |
| வலக்கைமேல் | - | சனி |
| வலக்கை கீழ் | - | புதன் |
| இடக்கை மேல் | - | இராகு |
| இடக்கை கீழ் | - | வெள்ளி |
| தலை | - | வியாழன் |

ஒன்பான் கோள்களும் திரியும் மேடம், இடபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம் மீனம் ஆகிய பன்னிரண்டு இராசிகளும் தமிழ்நாட்டிலுள்ள கணபதி கோயில்கள் சிலவற்றில் காணப்படுகின்றன.

### கல்லால் அமைந்த மண்டலம்

சுசீந்திரம் (குமரி) தாணுமாலயன் கோயில் முக்குறுணி விநாயகர் முன்புள்ள கல் மண்டபத்தில் மேலே இராசி மண்டலம் உள்ளது. கீழே ஒன்பது கோள்களும் தத்தம் ஊர்திகளின் மேல் உள்ளனர். [80] கோள்களுக்கு விளக்கேற்றி வழிபடுகின்றனர்.

### சுதையால் அமைந்த மண்டலம்

ஈச்சனாரி (கோவை) விநாயகர் கோயில் மகாமண்டபத்தில் அன்பர்கள் நின்று வழிபடும் இடத்திற்கு மேலே மேல் விதானத்தில் சுதையால் இராசி மண்டலம் அமைக்கப்பட்டுள்ளது. இங்கு ஒன்பான் கோள்களுக்கென்று தனிச் சந்நிதியில்லை. [81]

### ஓவியத்தில் அமைந்த மண்டலம்

மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் கோயில் ஆயிரக்கால் மண்டபத்தில் பன்னிரண்டு இராசி மண்டலம் ஓவியமாகத் தீட்டப்பட்டுள்ளது.

அம்மண்டலத்தின் நடுவே கணபதியின் துதிக்கை, முகம் காணப்படுகிறது. இதை ஞானியர் அகக் கண்ணில் கண்டதாக அறிவிப்புப் பலகை தெரிவிக்கிறது.[82] (நி.ப.எண். 21)

### ஒன்பான் கோள் மண்டபம்

இந்த நூற்றாண்டில்தான் பெரும்பாலான கணபதி கோயில்களில் நவக்கிரக மண்டபம் அமைக்கப்பட்டுள்ளது. கணபதி, கோள்களை அடக்கி ஆள்வார் என்பது தமிழரது நம்பிக்கை.

### கணபதியும் திங்களும்

ஒருநாள் கயிலை மலைக்குச் சென்ற நாரதர் சிவனிடம் மாம் பழம் ஒன்றைக் கொடுத்தார். இதை எந்தப் பிள்ளைக்குக்கொடுப்பது? என்றார் சிவன். பிரமன் இளையபிள்ளைக்கு ஈயலாம் என்றார். மூத்தபிள்ளை கோபித்தார். பிரமன் அவரிடம் மன்னிப்புக் கேட்டான். சினம் நீங்கி அருளினார் கணபதி. இதனைக் கண்ட சந்திரன் எள்ளி நகைத்தான். நகையொலி கேட்டவிநாயகர் சந்திரனை ஒளியிழந்து போகுமாறு சபித்தார். சந்திரன் கலையிழக்க அமிர்தம் பெருக்குநின்றது. தேவர்கள் கணபதியை வேண்ட அவரும் சாபத்தை நீக்கினார். ஆவணி மாத வளர்பிறைச் சதுர்த்தியில் அவனை யாரும் பார்க்கக் கூடாது எனவும் ஆணையிட்டார். சந்திரனும் அவரை வழிபட்டு அவர் நெற்றியில் அமரும் பேறுபெற்றான்.[83]

### கணபதியும் செவ்வாயும்

பரத்வாச முனிவர் நர்மதையாற்றில் குளித்த அழகியைக் கண்டு மயங்கினார். அவர் ஒழுக்கிய விந்து பூமியில் விழ, செவ்வாய் பிறந்தான் மண்மகள் அவனை வளர்த்து முனிவரிடமே ஒப்படைத்தாள். முனிவர் அவனுக்கு விநாயக மந்திரத்தை உபதேசித்தார். ஆயிரம் ஆண்டு தவம் செய்தசெவ்வாய் (அங்காரகன்) கணபதியைக் காணும் பேறு பெற்றான் என்பெயரும் நின் சதுர்த்தியும் ஒன்றிய நாளில் உன்னை வழிபடுவோர் சங்கடம் தீர்க்க வேண்டும் என வரம் வாங்கினான்.[84]

### கணபதியும் புதனும்

தவசீலருக்கும் சானகிக்கும் பிறந்த புதன் சாவித்திரியை மணந்து வாழும்போது பரத்தை வசப்பட்டான். கண்டித்த தந்தையைக் கொன்றான் அறிவுரை கூறிய தாயையும் தாரத்தையும் கொன்றான். பரத்தையோடு வெளியூர் செல்கையில் தாலவன் முனிவர் பத்தினியின் அழகில் மயங்கி அவள் கையைப் பற்றினான். முனிவர் சபித்தார். குட்டம் பற்றி அலைந்தான் விநாயக மந்திரத்தால் நோய்தீரப் பெற்று அருள் பெற்றான்.[85] இப்புதன் கோள்களில் ஒன்றா என்பது ஆராயத்தக்கது.

*கணபதியும் வெள்ளியும்*

வெள்ளி (சுக்கிரன்) யின் ஆலோசனைப்படி மாகத முனிவரும் விபுதையும் கூடிக் கயமுகாசுரனைப்பெற்றனர். அவ்வசுரன் கணபதியை வெள்ளியின் ஆலோசனை பெற்று எதிர்த்தான். இறுதியில் எதிர்க்க முடியாமல் போரில் தோற்று எலியாக மாறிச் சரணடைந்தான். இதனால் வெள்ளி கணபதியிடம் தோற்றான். [86]

*கணபதியும் சனியும்*

இயல் 3-இல் கணபதியும் அனுமனும் என்னும் தலைப்பில் கதை உள்ளது. கணபதியை வழிபடுவோரை சனி நெருங்கமாட்டான்.

பெரியகுளம் (மதுரை) தலைமை அஞ்சல் வளாகத்திலுள்ள கணபதி கோயிலில் நவகோள்களும் தம்பதி சமேதராகக் காட்சியளிக்கின்றன.

## கணபதியும் சிறுதெய்வங்களும்

தமிழ்நாட்டுக் கோயில்களைப் பற்றி கி.பி. 1961-இல் குறிக்கப்பட்ட அரசு புள்ளி விவரக் கணக்கினை ஆராய்ந்தால் கணபதி கோயில்களில் சிறு தெய்வங்கள் இணைக்கப்பட்டுள்ளதைக் காணலாம். சான்றாகச் சில கோயில்களைக் காண்போம்.

*கணபதியும் சுடலை மாடனும்*

உடன்குடி (வ.உ.சி.) அருகிலுள்ள வாத்தியார் குடியிருப்பில் கணபதியும் சுடலைமாடனும் ஒரே கோயிலில் நிறுவப்பட்டுள்ளனர். [87]

*கணபதியும் இசக்கி அம்மனும்*

குலசேகரன்பட்டினம் (வ.உ.சி.) பப்பரப்புளி இசக்கியம்மன் கோயிலில் ஔவையார் சிலையும் விநாயகர் சிலையும் நிறுவப்பட்டுள்ளன. [88]

*கணபதியும் பத்திரகாளியும்*

பள்ளப்பட்டி (திண்டுக்கல்) அகஸ்திய விநாயகர் கோயில் வீரபத்திரகாளி. சோணைசாமி மற்றும் கருப்பணசாமியும் உள்ளனர். [89]

கானாடு காத்தான் (பசும்பொன்) சிதம்பர விநாயகர் கோயிலில் காளிசிலை நிறுவப் பட்டுள்ளது. [90]

*கணபதியும் முத்தாரம்மனும்*

அம்பாசமுத்திரம் சோலைபுரத்தில் (நெல்லை) செல்ல விநாயகருக்கு வலப்புறம் முத்தாரம்மன் கோயில் உள்ளது. முத்தாரம்மனுக்கு எதிரே பைரவர் நாய் வாகனத்துடன் காணப்படுகிறார். [91]

*கணபதியும் மதுரை வீரனும்*

வளவனூர் (திருச்சி) சித்திவிநாயகர் ஆலயத்தில் மதுரை வீரனும் பட்டவராயனும் இடம் பெற்றுள்ளனர். [92]

*கணபதியும் சப்தமாதர்களும்*

மருதமலை (கோவை) முருகன் சந்நிதி முன்புள்ள கல்தூணின் கீழ் கணபதியும் ஏழு பெண்களான பிராமி, மகேசுவரி, கௌமாரி, வைஷ்ணவி, வராகி, இந்திராணி, சாமுண்டியும் சிலைவடிவில் உள்ளனர். நின்ற கோலத்தில் வலம்புரிவிநாயகர் நடுவே விளங்குகிறார். சென்னையையடுத்த குன்றத்தூரிலும் இத்தகைய அமைப்பு உள்ளது. அம்பாசமுத்திரம் (நெல்லை) மரகதவல்லி உடனாய எரிசடையார் கோயிலருகே தண்பொருநையாற்றின் கரையில் அரசமரத்தடியில் சப்தகன்னி விநாயகர் கோயில் உள்ளது. விநாயகருக்கு இடப்புறம் சப்த கன்னியர் சிற்பங்கள் உள. [93]

## ஆறுபடை வீடுகள்

தமிழ் நாட்டில் முருகனுக்கு ஆறுபடைவீடுகள் இருப்பது போலக் கணபதிக்கும் ஆறுபடைவீடுகளை அன்பர்கள் அமைத்துள்ளனர். [94] அவையாவன 1. திருவண்ணாமலை 2. திரு முதுகுன்றம் (விருத்தாசலம்) 3.திருக்கடவூர் 4. மதுரை 5. பிள்ளையார்பட்டி 6. திருநாரையூர்.

*திருவண்ணாமலை*

திருவண்ணாமலை அண்ணாமலையார் திருக்கோயிலில் அநேக விநாயகர்கள் இருப்பினும் கோயில் நுழைவாயிலில் உள்ள கணபதியே அல்லல் தீர்க்கும் பிள்ளையார் ஆவார். இவர் சிறிய திருவுருவினர். ஆயினும் தமிழரது பாராயணப் பாடலில் இடம் பெறு கிறார். பாடல் இதோ!

**“அல்லல்போம் வல்வினை போம் அன்னை வயிற்றில் பிறந்த**
**தொல்லைபோம் போகாத் துயரம்போம் – நல்ல**
**குணமதிக மாம்அருணைக் கோபுரத்தில் வீற்றிருக்கும்**
**கணபதியைக் கைதொழுதக் கால்”**

வினை தீர்த்துப்பிறவிப்பிணி தீர்ப்பதில் வல்லவரிவர்.

*திருமுதுகுன்றம் (விருத்தாசலம்)*

விருத்தாசலம் பழமலை நாதர் கோயிலில் கீழைக்கோபுரம் வழியாக உள்ளே நுழைந்து கைலாச புரத்தைக் கடந்து சென்றால் விபசித்து முனிவரின் மண்டபத்தின் அருகே ஆழத்துப்பிள்ளையாரைக் காணலாம். தரையிலிருந்து

பதினெட்டு அடி ஆழத்துக்குக் கீழே காணப்படுகிறார்.[95] இவரை வணங்கினால் திருவும் கல்வியும் சீரும் தழைக்கும்.

*திருக்கடவூர்*

திருக்கடவூர் அபிராமி அம்மைகோயில் விளங்கும் விநாயகர் பெயர் கள்ள வாரணப்பிள்ளையார். இவர் மூன்றாம் திருச்சுற்றைக் கடந்தால் தென்படும் மகாமண்டபத்திலுள்ளார். தேவர்கள் வைத்த அமுத கலசத்தைக் கவர்ந்து ஒளித்து வைத்துவிட்டுப்பின் அவர்கள் வேண்ட குடத்தைத் தந்தவர். இவரை வணங்கினால் மரணபயம் நீங்கும்.

*மதுரை*

தெற்குவாயில் வழியே நுழைந்து அம்மன் சந்நிதியை நோக்கி நடந்தால் சித்தி விநாயகரைக் காணலாம். மணிவாசகப் பெருமான் குதிரை வாங்கப் புறப்படுமுன் இவரை வணங்கிச் சென்றதாகத் திருவிளையாடல் புராணம் கூறுகிறது.[96] இவரை வழிபட்டால் நினைத்த காரியம் உடனே சித்தியாகும்.

*பிள்ளையார்பட்டி*

பிள்ளையார்பட்டிப் பெருமானை வணங்கினால் அனைத்துப் படை வீடுகளிலும் உள்ள கணபதியை வணங்கி ய பலன் கிடைக்கும் என்கின்றனர்.[97]

*திருநாரையூர்*

சிதம்பரத்திற்கு அருகிலுள்ளது (வரலாறு இயல் 3-இல் உள்ளது) இவர் கோயில் விமானம் அரைத் திங்கள் வடிவில் அமைந்துள்ளது. சோறுண்டலை வெறுக்கும் பிள்ளைகட்கு இப்பிள்ளையாரை நினைந்து வேண்டுதல் செய்தால் அவை சோறுண்ணத்தொடங்கும் என்பர்.[98] இவரை வணங்கினால் ஞானம் பெறலாம்.

இவ்வாறு ஆறுபடைவீடுகள் குறிக்கப்பட்டாலும் தமிழ்நாட்டிலுள்ள அனைத்து ஊர்களிலும் கணபதி அருள் எளிதில் கிடைப்பதால் இம்மரபு நிலை நாட்டப்படவில்லை.

## பெயர்கள்

தமிழர்கள் கணபதிக்குத் தாங்கள் விரும்பும் பெயர்களை எல்லாம் இட்டு வழங்குகின்றனர். அத்தனை பெயர்களையும் தாங்கி அருளுகிறார். நானூற்று இருபத்தைந்து பெயர்களைத் தொகுத்து அகர வரிசையில் 'வினாயகர் வழிபாடு' நூலாசிரியர் பி. செயா வெளியிட்டுள்ளார்.[99] அவற்றுள் சிலவற்றை வகைப்படுத்துவோம்.

*இடத்தால் பெற்றபெயர்கள்*

| | | |
|---|---|---|
| உச்சிப்பிள்ளையார் | - | திருச்சி மலைக்கோட்டை |
| ஆழத்துப்பிள்ளையார் | - | விருத்தாசலம் |
| அக்கசாலை விநாயகர் | - | அம்பாசமுத்திரம் (நெல்லை) |
| மேலது | - | குலசேகரன் பட்டினம் (வ.உ.சி.) |
| அந்தபுரப்பிள்ளையார் | - | சீராக்குடி (திருச்சி) |
| ஆற்றுப்பிள்ளையார் | - | ஐயலூர் (திண்டுக்கல்) |
| உண்டன் காட்டு விநாயகர் | - | இலத்தூர் (நெல்லை) |
| ஊரடி விநாயகர் | - | பாளையம் (கோவை) |
| ஊருணிப்பிள்ளையார் | - | கந்தனூர் (பசும்பொன்) |
| கோட்டைப்பிள்ளையார் | - | கம்பனூர் (பசும்பொன்) |
| கோட்டை வாசல் விநாயகர் | - | பாளையங்கோட்டை (நெல்லை) |
| சாத்துப்பால விநாயகர் | - | சேரன்மாதேவி (நெல்லை) |
| செக்கடி விநாயகர் | - | ஈசந்தி மங்கலம் (குமரி) |

*மரங்களால் பெற்ற பெயர்கள்*

| | | |
|---|---|---|
| அரசாள்வார் விநாயகர் | - | திருச்செந்தூர் (வ.உ.சி) |
| மேலது | - | சாம்பவர் வடகரை (நெல்லை) |
| அத்திமரவிநாயகர் | - | தஞ்சைக்கலைக்கூடம் |
| ஆலடி விநாயகர் | - | பிச்சானூர் (வ.ஆ.) |
| கருக்கடி விநாயகர் | - | திருக்கச்சூர் (செங்கை) |
| செண்பக விநாயகர் | - | தேரூர் (குமரி) |
| புளியடி விநாயகர் | - | சென்னி (பெரியார்) |
| மாவடிப்பிள்ளையார் | - | நாகப்பட்டினம் (நாகை) |
| வன்னியடி விநாயகர் | - | திருப்பத்தூர் (பசும்பொன்) மற்றும் மதுரை. |
| வில்வ விநாயகர் | - | கடலூர் (தெ.ஆ.) |
| கிளாவடி விநாயகர் | - | சங்கரன்கோயில் (நெல்லை) |
| ஆத்தியடி விநாயகர் | - | சங்கரன் கோயில் (நெல்லை) |

*நிறுவியவர் பெயரால்*

கல்யாண சுந்தரவிநாயகர் - திருச்செந்தூர் (வ.உ.சி.) நிறுவியவர் எஸ் **கல்யாண சுந்தரம் பிள்ளை**

சுந்தர பரிபூரண வரசித்தி விநாயகர்-மதுரை- அருப்புக்கோட்டை சாலையில் சுந்தரம் தொழிற்சாலை அருகிலுள்ளார்.[100]
**நிறுவியவர்கள் டி.வி.சுந்தரம் ஐயங்கார் நிறுவனத்தினர்.**

முத்து விநாயகர் - தூத்துக்குடி (வ.உ.சி.) A.V.M. வாணிக வளாகத்தில் உள்ளார். நிறுவியவர்: A.V.M. மாரிமுத்து நாடார்

*ஆண்டின் பெயரால்*

ஸ்ரீமுக சந்தி விநாயகர் - பாளையங்கோட்டை, பெருமாள் மேலரதவீதியில் (நெல்லை) முந்நூறு ஆண்டுகட்கு முன் ஸ்ரீமுக ஆண்டில் நிறுவப்பெற்றார்.

*தொழிலின் பெயரால்*

பேருந்து விநாயகர் - வண்ணார்பேட்டை (நெல்லை) கட்டபொம்மன் பேருந்து மனை முன் உள்ளார்.

தொழில் விநாயகர் - பத்தமடை (நெல்லை) டான்சி தொழிற்சாலை வளாகத்தில் உள்ளார்.

சுகம்தரு விநாயகர் - தூத்துக்குடி (வ.உ.சி.) ஏ.வி.எம். மருத்துவமனை வளாகத்தில் உள்ளார்.

*நாட்டுப்பற்றால்*

தூத்துக்குடியில் (வ.உ.சி.) காந்தி விநாயகரும், வ.உ.சி. கல்லூரி அருகே சிதம்பர விநாயகரும் உள்ளனர். மதுரையில் மேல மாசியின் வடகோடியில் நேரு ஆலால சுந்தர விநாயகர் ஆலமரத்தினடியில் உள்ளார்.[101]

*வடமொழிப்பெயர்கள்*

திருநெல்வேலி பாளையங்கோட்டை கோட்டைவாசல் விநாயகருக்குப் பிரசன்ன விநாயகர் என பெயரிட்டனர். மக்கள் அதை விடுத்து கோட்டைப்பிள்ளையார் என்றே வழங்குகின்றனர்.

திருநெல்வேலி - திருச்செந்தூர் பெருவழியில் பாளையங்கோட்டை தாண்டியதும் ஒரு விநாயகர் கோயில் உள்ளது. அவ்விநாயகருக்கு 'சிரேஷ்ட விநாயகர்' எனப் பெயரிட்டனர். இக்காலத்தில் அது சிரட்டைப்பிள்ளையார் கோயில் என வழங்குகிறது. சக்கரவர்த்தி விநாயகர் - சிவகிரி.

*ஆங்கிலப் பெயர்*

கோவை ஈரோடு புகைவண்டி வழியில் வஞ்சிப்பாளையம் நிலையத்திலிருந்து திருப்பூர் செல்லும் வழியில் சிறியமேடை மேல் விநாயகர் சிலை உள்ளது. கோவை ஈரோடு செல்லும் அரசு ஊழியர்கள் தம் பணியிடம் மாறுதல் வேண்டினால் உடனே மாறுதல் கிடைத்து விடுகிறதாம். இதனால் இவருக்கு டிரான்ஸ்பர் விநாயகர் (மாற்றுதல் விநாயகர்) எனப்பெயர்.[102]

## வழிபாட்டு முறை

கணபதி வழிபாட்டில் தமிழர் பின்பற்றும் முறை மிக எளிமையானது. தலையில் குட்டிக்கொள்ளுதல், தோப்புக்கரணம் போடுதல், சிதறுகாய் உடைத்தல், வலம் வருதல் ஆகியவை கணபதி அருள்பெறப்போதுமானது எனக் கருதுகின்றனர். சிலரே ஆகம முறைப்படி பதினாறு உபசாரங்களோடு வழிபடுகின்றனர். செல்வமுடையோர் தம் வீடுகளில் கணபதி வேள்வி நடத்துகின்றனர்.

### குட்டிக்கொள்ளுதல்

கைவிரல்களை மூடி கைகளைக் குறுக்காக வைத்து நெற்றிப் பொட்டில் குட்டிக் கொள்ளுதல் வழிபாட்டின் தொடக்கமாகும். கணபதி கயமுகாசுரனை வென்றதும் இந்திரன் முதலிய தேவர்கள், "ஐயனே, இதுவரை அசுரனுக்குப் பயந்து தலையில் குட்டிக்கொண்டும் தோப்புக்கரணம் போட்டும் கும்பிட்டோம். இனிமேல் அதுபோல உம்மையும் கும்பிடுவோம். இவ்வாறு வணங்குவோர்க்கு அருள்புரிய வேண்டும்" என்றனர். இவ்வாறு விநாயகர் புராணம் கூறுகிறது[103] தவறுகளைத் திருத்திக்கொள்ள இஃது ஒரு வழியாகும். கிறித்தவர் அறிக்கையிட்டுத் தம் பாவம் போக்குதல் போல தாமே தமக்குத் தண்டனை விதித்து மேலும் தவறிழைக்காமல் வாழ வகுப்பது இம்முறை. நெற்றிப் பொட்டில் குட்டிக்கொள்வதால் சுறுசுறுப்புடன் பணியாற்றலாம் என்பர்.

### தொப்பணம்

தொப்பணம் என்பது விநாயகர் வணக்கத்தில் வலக்கையால் இடக்காதையும் இடக்கையால் வலக்காதையும் பிடித்து உட்கார்ந்து எழுந்திருக்கை.இச்சொல் அருணகிரிநாதர் காலத்தில் வழக்கிலிருந்தது. அவர் பாடிய திருப்புகழில் விநாயகர் துதியாக,

> **"வளர்கை குழைபிடி தொப்பண குட்டொடுவகை**
> **புரி பொற்பத வர்ச்சனை"**

எனப்பாடியுள்ளார்.[105]

இக்காலத்தில் வழங்கும் தோப்பிக்கரணம் என்ற சொல்லுக்கு 'தண்டனை வகை' என்று பொருள் கூறுகிறது, சென்னைப் பல்கலைக்கழகத்தமிழ்ப் பேரகராதி.[106]

விநாயகரை வழிபட நெற்றிப்பொட்டில் முறைப்படி ஐந்து குட்டுகள் குட்டியபின் ஐந்து தொப்பணமிட வேண்டும் என்பர்.[107]

### தோர்ப்பிக்கரணம்

தோர்பி: கர்ணம் என்பதே தோப்பிக்கரணம் என்று வந்து விட்டது. தோர்பி: என்றால் கைகளால் 'கர்ணம்' காது. கைகளால் காதைப் பிடிப்பது தோர்பி: கர்ணம் திருமால் தோப்பிக்கரணம் போடுவதைப் பார்த்துப் பிள்ளையார் குபீரென்று சிரித்தாராம். அப்போது கணபதி திருமாலிடமிருந்து பிடுங்கி வாயில் அடக்கிக் கொண்டிருந்த (திருமாலின்) சக்கரம் வெளியில் விழுந்து விட்டதாம். திருமால் அதை எடுத்துக்கொண்டாராம். இப்படி விகடம் செய்தவர் விகட சக்கர விநாயகர்.[108] காஞ்சிபுரம் ஏகாம்பரர் திருக்கோயில் மண்டபத்திலுள்ளார், இவ்விநாயகர்.

மேற்கண்ட நிகழ்ச்சிக்குப் புராண ஆதாரமில்லை என மறுப்பார் திருச்சி திரு. கிருட்டினசாமி ஐயங்கார். தோற்றவர் செய்யும் தொழில் தோற்புக்கரணம் - இச்சொல் மருவித் தோப்புக் கரணமாயிற்று என்பர்.[109]

### சிதறு தேங்காய்

கணபதி வழிபாட்டில் சிறப்பிடம் பெறுவது சிதறுகாய் உடைத்தல். இது பற்றிய கதை வருமாறு: ஒரு சமயம் கணபதி தனது தந்தையான பரமசிவனிடம் உம் தலையை எனக்குப் பலியாகக் கொடும் என்றாராம். முக்கண்களையுடைய தலைதானே வேண்டும் என்றார் சிவன். ஆம் என்று கணபதி கூற மூன்று கண்களையுடைய தேங்காயைப் படைத்து மகன் முன்போட்டு உடைத்தாராம், சிவன்.[110] சிதறுகாய் உடைக்கும்போது தேங்காய் உருண்டு ஓடக்கூடாது. குறைந்த பட்சம் மூன்று துண்டுகளாகச் சிதற வேண்டும் என்பர்.[111] சிதறுகாய்த் துண்டுகளைச் சிறுவர்களே பொறுக்க வேண்டும். 1008 சிதறுகாய்கள் போட்டால் பலன் தரும் 1008 விநாயகர் ஆறுமுகமங்கலத்தில் (வ.உ.சி.) உள்ளார்.

### வலம் வருதல்

கணபதி கோயிலை ஒரு முறை வலம் வந்தாலே போதும்.[112] என்பர். விரைந்து செல்லும் உலகிற்கேற்ற எளிய வழிபாடு!

## பிள்ளையார் சுழி

தமிழர்கள் எதை எழுதுவதென்றாலும் எழுதத் தொடங்குமுன் 'உ' எனப் பிள்ளையார் சுழி போட்ட பின்னரே தொடங்குவர். ஒரு செயல் தொடங்கியதைக் குறிப்பிடப் பிள்ளையார் சுழி போட்டாயிற்று என்பர். எழுது கோலின் செம்மையைச் சரிபார்க்க ஒரு வட்டமும் கோடும் இழுத்துப் பார்த்த வழக்கம் நாளடைவில் பிள்ளையார் சுழியாயிற்று என்பர்.[113]

## கணபதி வழிபாட்டிற்குரிய பச்சிலைகள்

'யாவர்க்குமாம் இறைவற்கொரு பச்சிலை' என்பது திருமூலர் வாக்கு.[114] விநாயகருக்குரிய ஒரு பச்சிலையாகக் கொள்ளப்படுவது அறுகு. சிவனுக்கு வில்வம்: திருமாலுக்குத் துளசி. ஆயினும் கணபதி வழிபாட்டில் அருச்சனைக் குரிய பச்சிலைகளாக இருபத்தொன்று இடம் பெறுகின்றன[115] அவையாவும் மருத்துவப்பயன் உடையவை. புட்பவிதி கூறும் பச்சிலை இருபத்தொன்றில் ஆறு பச்சிலைகள் பெயர் வேறுபாட்டுடன் காணப்படுகின்றன.[116]

| | விநாயகபுராணம் இணைப்பு | | புட்பவிதி |
|---|---|---|---|
| 1. | அறுகு | | 1. அறுகு |
| 2. | இலந்தை | | 2. நொச்சி -1 |
| 3. | மாசிப்பச்சை | | 3. மாசிப்பச்சை |
| 4. | கரிசலாங்கண்ணி | | 4. கையாந்தகரை - கரிசலாங்கண்ணி |
| 5. | வில்வம் | | 5. வில்வம் |
| 6. | ஊமத்தை | | 6. ஊமத்தை |
| 7. | துளசி (சதுர்த்தியன்று மட்டும்) | - | 7. கத்தரி - 2 |
| 8. | நாயுருவி | - | 8. நாயுருவி |
| 9. | சிறுவழுதலை | - | 9. தேவதாரு - 3 |
| 10. | வன்னி | - | 10. வன்னி |
| 11. | மந்தாரை | - | 11. நெல்லி -4 |
| 12. | மருவு | - | 12. மருவு |
| 13. | அலரி | - | 13. அலரி |
| 14. | கோங்கு | - | 14. சிறுசெண்பகம் -5 |
| 15. | வெள்ளெருக்கு | - | 15. எருக்கு |
| 16. | மருதம் | - | 16. மருதம் |
| 17. | விஷ்ணுகிராந்தி | - | 17.விஷ்ணுகரந்தை |
| 18. | மாதுளை | - | 18. மாதுளை |
| 19. | சாதி மல்லி | - | 19. பாதிரி - 6 |
| 20. | தாழை | - | 20. செந்தாழை |
| 21. | அகத்திக்கீரை | - | 21. காட்டகத்தி |

கணபதிக்கு இருபத்தொன்று என்ற எண் சிறப்பாகக் கொள்ளப்படுதல் பற்றி கணேச கோசா கூறுவதாவது.[117] பஞ்ச பூதங்கள் 5, பஞ்சதன் மாத்திரை 5, பொறி 5, புலன் 5, பிராணன் 1 ஆக இருபத்தொன்று.

இவ்விருபத்தோரு பச்சிலைகளின் மருத்துவப்பயன்களையும் மூலிகை மர்மம், அனுபவம் மற்றும் பொருட்பண்பு நூல்களின் ·அடிப்படையில் காண்போம்.

| | பச்சிலை | | மருத்துவப்பயன் |
|---|---|---|---|
| 1. | அறுகு | - | உடல் வெப்பம் நீக்கி, வெள்ளை, வெட்டை போக்கும், விடமும் நீங்கும் (மூ.ம.பக்.2,3) |
| 2. | இலந்தை | - | இலையை அரைத்துக் காடியில் கரைத்துக் கடைந்து பூச உடம்பில் எரிச்சல் மாறும் (மூ.ம.ப.22) |
| 3. | மாசிப்பச்சை (மாசிப்பத்திரி) | - | வெப்பமும் சூதகவலியும் போக்கும் (பொ.ப.ப.586) |
| 4. | கரிசலாங்கண்ணி (கையாந்தகரை) | - | இதனுடன் தும்பை, அம்மான் பச்சரிசி சேர்த்து இடித்து, சாறுபிழிந்து 12 மிளகு அரைத்துக் கலக்கி ஆவின்பால் கால்படி கலக்கிச் சீனி சேர்த்து ஆறுநாள் குடிக்க காமாலை குணமாகும் (மூ.ம.ப.57) |
| 5. | வில்வம் | - | இலையை ஊறவைத்த நீர் சூட்டைத் தணிக்கும் (பொ.ப.- ப.640) |
| 6. | ஊமத்தை | - | இலையை அரைத்து எருமை வெண்ணெயில் குழைத்து அக்கி ரணத்தின் மேல் பூச அவை ஆறும் (மூ.ம.ப.28)<br>ஆஸ்துமா உடையவர் இலையைப்புகைப்பர் (அனுபவம்) |
| 7. | துளசி (விநாயக சதுர்த்தி மட்டும்) | - | இலைச்சாறு சளி, இருமல் போக்கும் (அனுபவம்) |
| 8. | நாயுருவி | - | பல்லைத் தூய்மையாக்கும் (அனுபவம்)<br>தேள்கடிவிடம் நீக்கும், இலை சுரம் போக்கும் (பொ.ப.ப.454) |
| 9. | சிறுவழுதலை | - | இத்துடன் சீந்தில், தாமரைவளையம் கோரைக் கிழங்கு, சுக்கு வகைக்கு ஒரு பலம் எடுத்து இடித்து 2படி நீர்விட்டு கால் படியாக வற்றவைத்து மூன்றுவேளை அருந்த விஷசுரம் நீங்கும். (மூ.ம.ப.68) |
| 10. | வன்னி | - | இலை சொறி, சிரங்குக்கு மருந்தாகும். (பொ.ப.ப.) |
| 11. | காட்டு மந்தாரை (காட்டாத்தி) | - | பூ-மலமிளக்கி (பொ.ப்.ப.570) |

| | | |
|---|---|---|
| 12. | மருவு - (மருக்கொழுந்து) | இலையைத் தலையில் வைப்பதால் பேன் சாகும். (பொ.ப.ப.574) உடலை உரமாக்கும். சொறி சிரங்கு குணமாகும். |
| 13. | அலரி - | அலரிச்செடியின் சமூலமும் (முழுதும்) கடுக்காயும் சுட்டுக்கரியாக்கி நல்லெண்ணெய் வேப்பெண்ணெயில் குழைத்து சிரங்குகட்குத் தடவக் குணமாகும் (மூ.ம.ப.8) |
| 14. | கோங்கு - | கோங்கிலவனிலையால் ஆக்கப்பட்ட பவழ பற்பம் இருமல் போக்கும் (மூ.ம.ப.59) |
| 15. | வெள்ளெருக்கு - | வெள்ளெருக்கம் பழுப்புச்சாறு 1. 1 / 8 படி நல்லெண்ணெய் 1படிக்கு. இந்துப்புஅதிமதுரம். வசம்பு. திப்பிலி மூலம், வெள்ளுள்ளி வகைக்கு 1 பலம் இடித்துப் போட்டு காய்ச்சிய தைலம் தேய்த்து முழுக ஒற்றைத் தலைவலி நீங்கும் (மூ.ம.ப.30) |
| 16. | மருதம் - | உடற்கழிவினைப் போக்கும். நஞ்சினைப் போக்கும். |
| 17. | விட்டுணுகரந்தை- | விட்டுணு கிராந்திப் பொடி பிள்ளைப் பேறுண்டாக்கும் (பொ.ப.ப.648) |
| 18. | மாதுளை - | மாதுளை விதை மேகக்கடுப்பு நீக்கும். (மூ.ம.ப.98) |
| 19. | சாதிமல்லி - | தலையில் சூட. முகர தலைவலிபோகும் (அனுபவம்) |
| 20. | தாழை - | தாழைவேர் சர்பத் சொறி. சிரங்கு நீக்கும்(மூ.ம.ப.76) |
| 21. | அகத்தி - | அகத்திக் கொழுந்து பிடியளவு தின்ன வாய்ப்புண் குணமாகும். இலைச்சாறும் நல்லெண்ணெயும் சமமாய்க் கூட்டி வெந்தயத்தைப் பாலிலரைத்துப் போட்டுத் தைலபதமாய்க் காய்சசித் தலை முழுகி வர சகல சூடும் தணியும். (மூ.ம.ப.5,6 ) வாரமிருமுறை சமைத்துண்ண பித்தம் அணுகாது. |
| | (அல்லது) காட்டாத்தி - | மூலத்தைப் பாலில் கொள்ள மந்தம். காசம் சாந்தியாகும் (மூ.ம.ப.47) இலை கழிச்சல், மந்தம் இருமல் போக்கும் (பொ.ப.ப.226) |

## வேறுபட்ட பச்சிலைகளின் பயன்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | நொச்சி | - | இலையை வீட்டு மூலைகளில் போட்டால் பூச்சிகள் சேரா. சாற்றைக் கட்டிகளின் மேல் பற்றுப் போட அவை கரைந்து போகும். வீக்கங் குறையும். தலையிலிட தலைவலி குணமாகும் (மூ.ம.ப.78) |
| 2. | கத்தரி (கண்டங்கத்தரி) | - | கண்டங்கத்தரி சமூலத்தைச் சுட்டுக்கரியாக்கிப் பொடித்துப் பல்துலக்கப் பல் வலி , பல் சொத்தை குணமாகும். (மூ.ம.ப.39) |
| 3. | தேவதாரு | - | தேவதாரு மூலத்தைப் பாலில் அரைத்துக் கலக்கி உண்ணப் பழைய சுரம் தீரும். (மூ.ம.ப.78) |
| 4. | நெல்லி | - | நெல்லி வற்றல் கியாழம் செய்து சீனி பால் கூட்டி அருந்த பித்தச் சூடு தணியும் (மூ.ம.ப.87) |
| 5. | சிறுவெண்பகம் | - | செண்பக மொட்டைக் கியாழம் செய்து பால் சர்க்கரை சேர்த்து அருந்த பித்தசுரம் மேகம் நீங்கும். (மூ.ம.ப.63) |
| 6. | பாதிரி | - | பூ. தீச்சுரமும் மேகமும் நீக்கும் (பொ.ப.ப.524) |

## அறுகின் தனிச்சிறப்பு

அறுகு. ஓரிடத்தில் முளைத்து ஆறிடங்களில் வேரூன்றும். அதே போல குண்டலினியில் வசிக்கும் கணபதி ஆறாதாரங்களிலும் தங்கித் தழைக்கச் செய்கிறார். யோகிகள் மூலாதார வெப்பம் போக்க அறுகுக் கியாழம் (குடிநீர்) அருந்துவர். சென்னை போன்ற இடங்களில் அறுகம்புல் சாறு கடைகளில் விலைக்குக் கிடைக்கிறது.

## கணபதிக்குப் படையல்

தொடக்க காலத்தின் மீன் இறைச்சி முதலியன கணபதிக்குப் படைக்கப்பட்டன என்பர்.[117] கணபதிக்குப் படைக்கப்படும் பொருட்களின் எண்ணிக்கையும் இருபத்தொன்று ஆகும். அப்பொருட்கள் அனைத்துமே மருத்துவப்பயன் வாய்ந்தவை. அவையாவன.

1. இக்கு - கரும்பு
2. அவரை
3. நற்கனிகள்
4. சர்க்கரை
5. பருப்பு
6. நெய்
7. எள்
8. பொரி
9. அவல்
10. துவரை

11. இளநீர் 12. தேன்
13. பயறு 14. அப்பம்
15. பச்சரிசி 16. பிட்டு
17. வெள்ளரிப்பழம் 18. இடிப்பல்வகை
19. அடிசில் - சோறு 20. கடலை
21. தனிமூலம் - கிழங்கு, நான் என்னும் ஆன்ம போதம்?

அருணகிரி நாதர் காலத்தில் தமிழ்நாட்டினர் கணபதிக்கு மேற்கண்ட பொருட்களைப் படைத்து வழிபட்டனர் என்பதை அவரது திருப்புகழ்ப் பாடலால் அறியலாம்.[118] அருணகிரி நாதர் பாடலில் மோதகம் குறிப்பிடப்படவில்லை. கணபதிக்குப் படைக்கப்படும் பொருட்களின் மருத்துவப் பயனைப் பதார்த்த குணவிளக்கம், பொருட்பண்பு நூல், மூலிகை மர்மம், அனுபவம் ஆகியவற்றின் அடிப்படையில் காண்போம்.

## பொருட்களும் பயனும்

### 1. *கரும்பு*

இதில் பலவகைகளுண்டு. செங்கரும்புச்சாறு, பித்தம் போக்கும் காமாலைக்கும் மருந்தாகும். இரசதாளிக் கரும்புச் சாறு, தாகவெப்பம் போக்கும். புல்லகண்டம் என்னும் கரும்புச்சாறு, வாதரோகம் நீக்கும். (பகு.வி.ப.191)

### 2. *அவரை*

அவரைப்பிஞ்சு பத்திய மருந்துண்பார்க்கும் மற்றவர்கட்கும் உடல் நலம் தரும். விதை முதிர்ந்தகாய் தோடமுண்டாக்கும்.

### 3. *நற்கனிகள்*

'முப்பழம் நுகரும் மூசிக வாகன' என்றார் ஔவையார் விநாயகர் அகவலில். தமிழர் உடலுக்கு நன்மை தருவனவாகக் கொள்வன முக்கனிகள் எனப்படும் மா, பலா, வாழைக்கனிகளே. வாழையில் இரசதாளி, நவரை தவிர ஏனையவை உடல்வலிமை தருவன. மாம்பழம் நார்ச்சத்துடையது. சிறந்த மலமிளக்கி. பலாப்பழம் ஏப்பு (எயிட்ஸ்) நோய்க்கு மருந்தென அண்மையில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. நாவற்பழம், மாதுளம்பழம் ஆயவற்றையும் படைப்பர்.

### 4. *சர்க்கரை (அச்சு வெல்லம்)*

பித்தம் தணிவிக்கும். கரும்பிலிருந்து தயாரிக்கப்படுவதால் கரும்பின் குணங்கள் இதிலும் உண்டு.

5. *பருப்பு(முந்திரிப்பருப்பு)*

உடல் வலிமை தரும்.

6. *நெய்*

உடல் வலிமை தரும்.

7. *எள்*

கண்ணொளி பெருக்கும். உடல் வலிமைதரும் (பொ.ப.நூல். ப. 126) எள்ளுருண்டை இரும்புச் சத்தளிக்கும் (அனுபவம்)

8. *பொரி*

நெற்பொரி தாகம் தீர்க்கும், வாந்தி போம், மூர்ச்சை நிவர்த்தியாகும் (ப.கு.வி.ப.477)

9. *அவல்*

உடலுக்கு வலிமை தரும். இதனால் தான் குசேலர் கண்ணனைச் சந்திக்கச் சென்றபோது அவல் கொண்டு சென்றார் போலும்.

10. *துவரை*

துவரம் பருப்புச் சோறு உடலுக்குப் பலம்தரும் (பொ.ப.ப.424)

11. *இளநீர்*

பொதுவாக உடலுக்குக் குளிர்ச்சி தரும். வழுக்கையுடைய புதிய இளநீர் பித்தம் போக்கும். பழைய இளநீர் சளியை உண்டாக்கும். இளநீர் வகைகளையும் அவை போக்கும் நோய்களையும் காண்போம். (ப.கு.வி.பக்.91-95) பொதுவாக, உடலுக்கு குளிர்ச்சியும் உரமும் தரும்.

| **இளநீர் வகை** | | **போக்கும் நோய்** |
|---|---|---|
| அடுக்கிளநீர் | - | கபரோகம் போகும் |
| ஆயிரங்கச்சி இளநீர் | - | வெப்பம் தணிக்கும். பசியுண்டாக்கும் |
| கருவிளநீர் | - | கரப்பான் நீங்கும். |
| குண்டற்கச்சி இளநீர் | - | சாடராக்கினியுண்டாக்கும். |
| கவுளிபாத்திர இளநீர் | - | தாகம், பித்தம் தீர்க்கும் |
| கேளி இளநீர் | - | கரப்பான் நீங்கும் |
| செவ்விளநீர் | - | களைப்பு நீங்கும் |
| சேரியிள நீர் (இரத்த நிறம்) | - | வயிற்றுப்பூச்சி அழியும் |
| பச்சை இளநீர் | - | கண்ணோய் நீங்கும் |
| மஞ்சள் கச்சி இளநீர் | - | பித்ததோடம், சுரம் நீங்கும். |

12. *தேன்*

சோர்வினைப் போக்கும். மருந்துகளைக் குழைத்துண்ணப் பயன்படும்

13. *பயறு*

பச்சைப் பயிறு பித்தம் நீக்கும். சீதளம் செய்யும். (பகு.வி.ப.483)

14. *அப்பம்*

பச்சரிசி, வெல்லம், நெய் சேருவதால் அவற்றின் பலனுண்டு. உடல் வலிமையுண்டாக்கும் (அனுபவம்). வெல்லம் பித்தம் தணிவிக்கும்.

15. *பச்சரிசி*

மிகுந்த வலிமையுண்டாக்கும். பித்தளிச்சல்போம். (பொ.ப.ப.47 9)

16. *பிட்டு*

இதிலும் பச்சரிசி, வெல்லம், நெய், பருப்பு சேருவதால் உடல் வலிமை உண்டாகும்.

17. *வெள்ளரிப்பழம்*

வெள்ளரி சிறுநீரகக் கோளாறுகளை நீக்கும். வெள்ளரிவித்தைப் பாலில் அரைத்து வஸ்திரகாயம் செய்து உட்கொண்டால் நீரடைப்பு, கல்லடைப்பு, சதையடைப்பு, நீர்த்தாரை எரிவு நீங்கும் (மூ.ம.ப.103)

18. *இடிப்பல்வகை*

தினைமாவு அல்லது பணியாரத்தைக் குறிப்பிடலாம். இவையும் வலிமை கூட்டுவனவே.

19. *அடிசில்*

சோறுவகைகள், பயற்றம்பொங்கல், தயிர்ச்சோறு முதலியவற்றைக் கணபதிக்குப் படைப்பர். இவை உடலுக்கு வலிமை கூட்டுவன.

20. *கடலை*

கொண்டைக்கடலையை ஊற வைத்துத் தின்பது ஆண்மையைப் பெருக்கும். உடலுக்கு வலிமைசேர்க்கும். நுரையீரலுக்கும் வலிமைதரும். (பொ.ப.ப.148)

21. *கிழங்கு*

தனி மூலம் எனக்கூறுவதால் அகந்தைக்கிழங்கைக் குறிப்பிடுவதாகக் கருதலாம். “அகந்தைக் கிழங்கை அகழ்ந்தெடுக்கும் தொழும்பர்

உளக்கோயிற்கேற்றும் ஒளிவிளக்கே" என மீனாட்சியம்மையைக் குமரகுருபரர் பாடியுள்ளார்.[119] சிலர் வள்ளிக்கிழங்கைக் குறிப்பிடுவதாகக் கூறுவர்.

## நோக்கும் திசைகள்

பெருந்தெய்வங்கள் குடிகொண்ட கோயில்களில் அத்தெய்வங்கள் கிழக்கு நோக்கியிருக்குமாறு அமைக்கப்படுவது வழக்கம். ஆனால் கணபதியோ அனைத்துத் திசைகளையும் நோக்குமாறு அமைக்கப்படுகிறார்.

### கிழக்கு

கணபதிபொதுவாக அனைத்துக் கோயில்களின் வாயிலிலும் ஆற்றின் கரை. குளக்கரைகளிலும் கிழக்கு நோக்கியே அமர்ந்திருப்பார்.

### மேற்கு

சில கோயில்களில் கணபதி மேற்கு நோக்கி அமர்ந்திருப்பார். காட்டாக. திருச்செந்தூர் சபாபதிபுரம் தெருவிலுள்ள சபாபதி விநாயகர் மேற்கு நோக்கி உள்ளார்.[120]

### வடக்கு

பிள்ளையார்பட்டி (பசும்பொன்) கற்பக விநாயகர் வடக்கு நோக்கியுள்ளார்.[121]

### தெற்கு

மதுரை தெற்குக்கோபுர வழியே மீனாட்சியம்மன் கோயிலுக்குச் சென்றால் அங்குள்ள முக்குறுணி விநாயகர் தெற்கு நோக்கியிருப்பதைக் காணலாம். சிதம்பரத்தில் தட்சிணா மூர்த்தியோடு தெற்கு நோக்கியுள்ளார்.[122]

### சந்தி

தெருக்கள் சந்திக்குமிடங்களில் கணபதியை அமைப்பதால் அவரது பார்வை தெருக்களில் பட்டு அனைவருக்கும் அருள் தரும் என்பது தமிழர் நம்பிக்கை. சென்னை. தி.நகர்ப்பகுதியில் தெருப்பார்வை விழும் வீடுகளில் எல்லாம் வளைவுச் (காம்பவுண்டுச்) சுவரில் கணபதி உருவினைக் காணலாம்.[123]

## பலகணபதி வழிபாடு

தமிழ்நாட்டின் பல ஊர்களில் இரட்டை விநாயகர். மூன்று விநாயகர்களை ஒருசேர வைத்து வழிபடும் வழக்கம் காணப்படுகிறது.

## இரட்டை விநாயகர்

*ஒரே உயரத்தில்*

இரு கணபதிகளும் ஒரே அளவான உயரத்தில் பொதுவான தோற்றத்தில் காணப்படுகின்றனர். காட்டாக சீவலப்பேரி (நெல்லை)யிலுள்ள இரட்டை விநாயகரைக் கூறலாம். வலப்பக்கம் உள்ள கணபதி சற்று அகலமான தோற்றத்தில் உள்ளார்.[124] சப்பான் நாட்டில் இரு கணபதியர் ஒருவரையொருவர் கட்டித்தழுவிய நிலையில் சிலைகள் உள. இங்கில்லை

*மாறுபட்ட உயரத்தில்*

மதுரை மீனாட்சி அம்மன் கோயில் மேல ஆடி வீதியிலுள்ள இரண்டு கணபதிகளுள் ஒருவர், குறைந்த உயரத்திலும், ஏனையவர் சற்று கூடுதலான உயரத்திலுமுள்ளார்.[125]

*சிறிது மாறுபட்ட வகையில்*

ஒரே உயரத்தில் இருந்தாலும் தோற்றத்தில் மாறுபட்டு விளங்குபவருமுளர். காட்டாக, திருப்பரங்குன்றம் வாயிலில் காணப்படும் இரட்டை விநாயகரின் துதிக்கைகள் மாறுபட்டுள்ளன. ஒருவர், தொங்கும் துதிக்கையில் மோதகம் ஏந்தியுள்ளார்.[126]

*முற்றிலும் வேறுபட்ட வகையில்*

மதுரை மீனாட்சியம்மன் மகாமண்டபம் முதற்சுற்றில் கன்னி மூலையில் உள்ள இரட்டை விநாயகருள் ஒருவர், உச்சிட்ட கணபதி. ஏனையவர் நடன கணபதி.[127] குண்டலினி தூண்டப்பட்டதும் அருள் கூத்தாடும் என்பதைக் காட்டுகின்ற வகையில் அமைக்கப்பட்டுள்ளது என்பர்.

*இருவகை இணைந்த உருவம்*

பேரூர்த் (கோவை) தேரின் முன்புறமுள்ள கணபதி நடன கணபதியாகவும் உச்சிட்ட கணபதியாகவும் ஒரே திருவுருவில் விளங்குவது குறிப்பிடத் தக்கது.[127] தூக்கிய இடத்தொடையில் சக்தியைத் தாங்கியுள்ளார்.

## மும்மூர்த்தி விநாயகர்

*கும்பகோணம்*

கும்பகோணம் (தஞ்சை) பிர்மன் கோயில் கடைத்தெருவில் மூன்று கணபதி திருவுருவங்கள் ஒன்றாக வைத்து வழிபடப் பெறுகின்றன. பொதுத் தோற்றம் கொண்டவர் நடுவில் இருப்பவர். வலப்புறம் மகா கணபதியும், இடப்புறம் வல்லப கணபதியும் விளங்குகின்றனர்.[128]

*திருப்பரங்குன்றம்*

திருப்பரங்குன்றம் கோயில் முதல் நுழைவாயிலின் இடப்புறம் மூன்று கணபதிகள் உள்ளனர். நடுவே பெரிய விநாயகரும், இருபுறங்களிலும் சிறிய விநாயகர்களும் உள்ளனர். இவர்கள் ஒரே திருவாசிக்குள் உள்ளனர். பெயர் குறிப்பிடப்படவில்லை.[129]

## 108 கணபதி வழிபாடு

*காரைக்குடி*

காரைக்குடியில் ஆச்சிமார் (நாட்டுக்கோட்டைச் செட்டி மாரின் மனைவியர்) சேர்ந்து ஒரே இடத்தில் 108 கணபதிகளை நிறுவியுள்ளனர். எம்.ஏ.எல்.ஆர்.எம். வள்ளியம்மை ஆச்சி காரைக்குடியில் (பசும்பொன்) ஒரு கோயிலைக்கட்டி 108 கணபதிகளைப் பிரதிட்டை செய்துள்ளார்.

*அமைப்புமுறை*

நகர சிவன் கோயில் குளக்கரையின் கீழ்புறம் கணபதி கோயில் கட்டப்பெற்றது. 108 கணபதிகளும் இரண்டு வரிசைகளில் வைக்கப்பட்டுள்ளனர். ஒவ்வொரு வரிசையிலும் நடுவே முறையே மூன்று கணபதிகளும் ஐந்து கணபதிகளும் வைக்கப்பட்டுள்ளனர். அவர்களுக்கு இருபுறங்களிலும் இருபத்தைந்து இருபத்தைந்தாக கணபதிகள் அமைக்கப்பட்டனர். 25+3+25=53 முதல் வரிசையிலும், 25+5+25 = 55 இரண்டாம் வரிசையிலுமாக இடம் பெற்றுள்ளனர். முதல்வரிசை நடுவே உள்ள மூவர் 1. சக்தி கணபதி 2. மகா கணபதி 3. சாம்ராஜ்ஜிய கணபதி. பின் வரிசையின் நடுவே உள்ள ஐவர்: 1. நடன கணபதி, 2. ஐம்முகப் பிள்ளையார், 3. விசய கணபதி, 4. சித்தி புத்தி கணபதி, 5. இலக்குமி கணபதி. இக்கோயில் 16.3.90 அன்று பிரதிட்டை செய்யப்பட்டுள்ளது.[130]

*புதுமுறைவழிபாடு*

108 யானைகளை 108 கணபதிகளாகக் கருதி வழிபட்ட நிகழ்ச்சி கோவையில் 26.3.1987 அன்று நடைபெற்றது. இப்புதுமுறை வழிபாடு கோவையை அடுத்த சிரவணம்பட்டி என்னும் ஊரில் நடைபெற்றது. அங்குள்ள கௌமார மடாதிபதி தவத்திரு சுந்தரசுவாமிகள் தமிழ்நாடு மற்றும் கேரளத்திலிருந்து 108 யானைகளை வரவழைத்து அவற்றைக் கணபதிகளாகவே சங்கற்பித்து, புட்பாஞ்சலி முதலிய பூசை முறைகளை ஆகம விதிப்படி செய்து வழிபட்டனர். மேலும் 16 பூரண கும்பங்களில் சோடச (16) கணபதியரை ஆவாகனம் செய்தும் வழிபட்டனர். இவ்வழிபாட்டில்

எழுபதிற்கும் மேற்பட்ட மடாதிபதிகளும் முந்நூறுக்கும் மேற்பட்ட அருச்சகர்களும் வேத விற்பன்னர்களும் கலந்து கொண்டனர். வடமொழியிலும் தமிழிலும் மந்திரங்கள் ஓதப்பட்டன. இருபத்தைந்து இலட்சரூபா செலவில் பத்து இலட்சம் மக்கள் கலந்து கொண்ட இக் காணாபத்திய வழிபாடு உலக அமைதியைக் குறிக்கோளாகக் கொண்டது என்பர்.[131]

இவ்வழிபாடு ஈச்சநாரி (கோவை) விநாயகர் கோயிலில் முடிவுற்றது. 108 யானைகளையும் கோவை மாநகர் வீதிவழியாக ஊர்வலமாக அழைத்துச் செல்வதென முதலில் ஏற்பாடு செய்தனர். நாத்திகர் சிலரின் எதிர்ப்பினால் பதினோரு யானைகளில் மட்டுமே குடத்து நீர் கொண்டு செல்லப்பட்டு ஈச்சநாரி விநாயகருக்கு திருமுழுக்காட்டப் பெற்றது.[132]

## ஆத்மார்த்த வழிபாடு

தம் இல்லங்களில் விநாயகர் சிலையை வைத்து வழிபடுவது ஆத்மார்த்த வழிபாடு எனப்படும். இதைத் தமிழில் நிகழ்த்துவது பற்றி காஞ்சி சி. அருணை வடிவேலு முதலியார் என்பவர் விரிவாக எழுதியுள்ளார். மறைமொழி (மந்திரம்) செய்கை (கிரியை) கருத்து (பாவனை) எனப்பகுத்து வழங்குகிறார். இவ்வகை வழிபாட்டைக் கடைப்பிடிப்போர் சிலரே. கணபதி ஐம்பூதமாய் விளங்குவதைப் போற்றுகிறார். பஞ்சபூத கணபதி படத்தை இணைப்பில் காண்க. (வ.ப. எண்3) பின்னர் சோடச (பதினாறு) உபசாரங்கள் பற்றிய தமிழ்மறைப் பாடல்களும் வடமொழி மந்திரங்களும் அந்நூலில் குறிக்கப்படுகின்றன.[133]

## விரதங்கள்

*வெள்ளிக்கிழமை விரதம்*

வைகாசி மாதம் வளர்பிறை முதல் வெள்ளிக்கிழமை தொடங்கி ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் உண்ணா நோன்பு இருத்தல், மாலையில் நீராடி கணபதியை வழிபட்டுப் பழங்கள் உண்ணலாம்.- [134]

*விநாயக சதுர்த்தி*

ஆவணித் திங்கள் வளர்பிறை நான்காம் நாள் கொண்டாடப் பெறும். பகலில் ஒரு வேளை உண்டு இரவில் பால் அல்லது பழம் சாப்பிடுவது முறையாகும். இரவில் திங்களைப் பார்க்கக் கூடாது என்பர். அன்று 21 பச்சிலைகளால் கணபதியை அருச்சிக்க வேண்டும். அண்மைக் காலத்தில் தமிழ் நாட்டில் விநாயக சதுர்த்தி அன்று களிமண்ணால் கணபதி உருவம்

செய்து வழிபட்டபின் நீர் நிலைகட்கு அச்சிலைகளை எடுத்துச் சென்று கரைத்து வருகின்றனர். இது மராட்டியர் வழக்கத்தைப் பின் பற்றியதாகும்.[135] பிள்ளைப்பேறு வேண்டுவோர் விநாயக சதுர்த்தியின்று விநாயகர் சிலையை வைத்துப் பூசை செய்த பின் தண்ணீரில் போடாமல் ஒரு பெட்டியில் வைத்து மூடிவிட வேண்டும். என்வயிறு திறந்தால்தான் உன்னனத் திறந்து விடுவேன் என வேண்டிக்கொள்ள வேண்டும். குழந்தை பிறந்த பின் பெட்டியைத் திறந்து சிலையைத் தண்ணீரில் போட வேண்டும். பத்தாண்டுகளாகப் பிள்ளைப் பேறற்ற தம்பதியர் இவ்வாறு செய்து குழந்தை பெற்றனர்.[136] எனக் குமுதம் இதழ் குறிப்பிடுகிறது.

*குமார சட்டி விரதம் அல்லது பிள்ளையார் நோன்பு*

கார்த்திகைத்திங்கள் தேய்பிறை பிரதமை முதல் மார்கழி வளர்பிறைச்சட்டி திதி வரை 21 நாட்கள் அனுட்டிக்கப்படுவது. ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு விதமாக 21 வகைப் பணியாரங்களை நிவேதனம் செய்ய வேண்டும்.

*சங்கடகர சதுர்த்தி*

இது தேய்பிறையில் வரும் சதுர்த்தியைக் குறிக்கும். மாசி மாதம் தேய்பிறையில் செவ்வாய்க்கிழமை யோடு வரும் சதுர்த்தி திதியில் தொடங்கி ஓராண்டு விதிப்படி விரதம் அனுட்டித்தால் செல்வம்.[137] பெருகும் என்பர்.

## பெண்கள் பூசை முறை

*வெள்ளிப்பிள்ளையார்*

பெண்கள் வெள்ளிக்கிழமை விடியற்காலை நான்கு மணிக்கே எழுந்து, எண்ணெய் தேய்த்து முழுகி ஈனாக்கன்றின் சாணத்தால் பிள்ளையார் பிடித்து வழிபடுவர். இதன் வரலாற்றை விரிவாக ச. தண்டபாணிதேசிகர் குறிப்பிடுகிறார்.[138]

*செவ்வாய்ப்பிள்ளையார்*

தைச் செவ்வாய், ஆடிச் செவ்வாய்களில் இந்நோன்பைத் தொடங்குவர். ஆண்களுக்குத் தெரியாமல் நடத்தும் விரதமிது. ஆண்கட்குக் கணபதிக்குப்படைக்கும் கொழுக்கட்டை, தேங்காய் முதலியவற்றைக் கொடுக்கக்கூடாது. இதன் வரலாறும் கதையும் கணபதி என்னும் நூலில் விரிவாக உள்ளன.[139]

## விளையாட்டில் கணபதி

### *பிள்ளையார் குத்து*

இருவர் எதிர் எதிராக அமர்ந்து கொள்வர். ஒருவர் இருகைகளையும் இணைத்து விரித்து தாமரை விரிவது போல் வைத்துக் கொள்வார். எதிரிலிருப்பவர் அவரது இருகைகளுக்கும் மத்தியில் பாடிக் கொண்டே தம்வலக்கையை மூடிக் குத்துவார். அப்பாட்டில் மாக்குத்து, மஞ்சள் குத்து, பூக்குத்து பிள்ளையார் குத்து பிடிக் குத்து எனக் கூறுவார். பிடிக்குத்து என்று கூறி விரைவாகக் குத்திவிட்டுக் கையை எடுத்துக் கொள்வார். அவரை எடுக்காவிடாமல் கையைப் பிடித்தால் பிடித்தவர் வென்றவராவார். இப்பாடலின் கருத்து மாவிலும் மஞ்சளிலும் பூவைக் குத்திவைத்தால் அது பிள்ளையாராகும். அப்பிள்ளையாரைப் பிடித்தால் வாழ்வில் வெற்றி பெறலாம் என்பதாகும்.[140]

### *பிள்ளையார் பந்து*

பந்து, சொக்கட்டான், தாயம் ஆடும்போது கைபழகுவதற்காக ஆடும் முதல் ஆட்டத்தைப் பிள்ளையார் ஆட்டம் என்று கூறுவது வழக்கம். சிற்றூர்களில் இன்றும் பிள்ளையார் பந்து என்றே ஒரு விளையாட்டு உண்டு. சிறுவர்கள் முழுச் செங்கல் அல்லது கல்லை மணல்கூட்டி குத்திட நிறுத்தி வைப்பர். அந்தக் கல்லை நோக்கி பந்தால் தலைக்கு ஒரு தடவை அடிப்பார்கள்.யார் அடித்தபோது அக்கல் விழுகிறதோ அவர்கள் மற்றக் கட்சிக்காரர்களைப் பந்தால் அடிப்பார்கள். அவ்வாறு அடிக்கும்போது தங்கள் கட்சிக்காரர் பலரிடமும் பந்து இருக்கிற மாதிரிக் கையைத் துணியால் மூடிக்கொண்டு ஓடிஓடி அடிப்பது வழக்கம். அடிபட்டவர் தோற்றவராவார்.

## விநாயகர் ஆலய அமைப்பு

தமிழ்நாட்டில் அரச மரத்தடியில் விநாயகரை நிறுவி வெயில், காற்று, மழை அனைத்தும் அவர் மீது படுமாறு எளிய முறையில் கோயில் அமைப்பதே எங்கும் காணப்படுகிறது. திரு.ச. தண்டபாணி தேசிகர் கணபதி என்றும் நூலில் விநாயகர் ஆலய அமைப்பு என ஒரு வரைபடம் காட்டியுள்ளார்.[141] விநாயகர் கோயில் நுழைவாயிலில் வலப்புறம் பீமரும் இடப்புறம் விகடரும் அமர சுற்றிலும் விசாலாட்சர், அட்சயர், மத்தவிப்ரமர், உன்மத்தர், லளிதர், பீமர், தீட்சணதம்சடரார், விஸ்வரூபர் அமர்வர் என்று பெயர்களைக் குறிப்பிடுகிறார்.

இத்தகைய அமைப்புடைய கணபதி ஆலயத்தை ஆய்வாளர் தமிழ்நாட்டில் எங்கும் காணவில்லை.

## கணபதி யந்திரம்

செம்பு, வெள்ளி, பொன் முதலியவற்றின் தகடுகளில் தெய்வங்களுக்குரிய வரைபடம் எழுதுவர். மந்திரங்களில் மனம் ஊன்றி நிற்க யந்திரங்கள் பெரிதும் உதவும். மந்திரம் உயிர்: யந்திரம் உடல். இவ்வியந்திரங்களை வைத்துப் பூசிக்க மண்டலம்- தரையில் கோலமிட்டு - அமைக்க வேண்டும். பின்னர் தம் உடலில் இறைவனை எழுந்தருளச் செய்ய நியாசம் செய்து மந்திரம் செபித்துத் தியாகம் செய்து பூசை செய்வர் இதற்குரிய மந்திரங்கள் வடமொழியில் இருப்பதால் வடமொழி கற்றோர் மட்டுமே இவ்வழிபாட்டை நிகழ்த்துதல் இயலும். உச்சிட்ட கணபதியந்திரம் சக்தி கணபதி யந்திரம் ஆகியன இணைப்பில் தரப்பட்டுள்ளன. (நி.ப.எண்கள். 23,23அ.)

## பாடல்களில் கணபதி வழிபாடு

பிள்ளையார் வழிபாடு நிலைக்கப்பாட்டிமார்கள் தம் பேரன் பேத்திகளுக்கு இளமையிலேயே கற்பிப்பர். பொழுது போக்கு, தாலாட்டுப் பாடல்கள், பழமொழி, உவமை முதலியவற்றிலும் பிள்ளையார் பற்றிய குறிப்பும் வணக்கமும் காணப்படுகின்றன.

*பாட்டிமார் பாடல்*

பாட்டிமார் தம்பேரன் பேத்திமாரை அழைத்துப் பின் வரும் பாட லைக் கற்பிப்பர் என ச. தண்டபாணி தேசிகர் கூறுகிறார்.[142]

**"குள்ளக் குள்ளனைக் குண்டு வயிற்றனை**
**வெள்ளைக் கொம்பனை விநாயகனைத் தொழு"**

தமிழ்நாட்டில் இக்காலத்துத் திரைப்படப்பாடல்களே சிறுவரிடம் ஆட்சி பெற்றுள்ளன.

*தாலாட்டு*

பிள்ளைப்பேறு தனக்குக் கணபதி அருளால் கிட்டியதாகவே தாயார் தாலாட்டுப்பாடலில் குறிப்பிடுகிறாள். பாடல் வருமாறு

**"வேம்பரசு சுற்றி விநாயகனைத் தெண்டனிட்டு**
**தேடியதோர் புண்ணியத்தால் செல்வமாய் வந்த கண்ணோ"** [142]

*வில்லுப்பாட்டு*

வில்லுப்பாட்டைத் தொடங்குமுன் கணபதியை வழிபட்டபின்னரே தொடங்குகின்றனர். தொடக்கப் பாடல் வருமாறு

**"முந்து முந்து விநாயகனே முக்கண்ணனார் தம்மகனே**
**கந்தனுக்கு முன்பிறந்த கணபதியே முன் நடவாய் "**[143]

*கதாகாலட்சேபம்*

கதாகாலட்சேபம் தொடங்கு. முன்பும் முதலில் கணபதியை வழிபட்டே தொடங்குவர் முதற்பாடல்

"திமிகிட திமிகிட வாத்ய மிருதங்கம்
பிர்மானந்த உறரே கஜானன
தாண்டவ நிருத்ய உறரே "[145]

*நாடோடிப்பாடல்*

"பிள்ளையார் பிள்ளையார் – அவர்
எங்கேயோ பிள்ளையார்?
கத்தரித் தோட்டத்திலே – களை
கொத்துகிறார் பிள்ளையார்
அங்கேயும் போய்ப் பார்த்தேன் – அவர்
எங்கோயோ பிள்ளையார்" [146]

நாடோடிப்பாடல்களிலும் உழவர் பாடல்களிலும் கணபதி பற்றிய குறிப்புகளைக் கேட்கலாம்.

*உழவர் பாடல்*

பயிர்களைப்பாதுகாக்க வயல் ஓரமாகப்பிள்ளையாரை வைப்பதுண்டு. அறுவடை முடிந்தபின் கணபதிக்குப் படையலிட்டுப்பாடும் பாடல் வருமாறு

"எலித்தலை போல எள்ளுருண்டை நூறு
ஆனைக்காது போல அதிரசங்கள் நூறு
தட்டோடு மாலை தண்டமாலை நூறு
கொத்தோடு மாலை கொண்டமாலை நூறு
அத்தனையும் சேர்ந்து – அமோகமாம், பூசை
சித்தி விநாயகரும் – சினம்தணிந்தேவரம் கொடுப்பார்
சக்தியுள்ள எங்கள் முன்னோர்
அத்திமரப் பிள்ளையாரே "[147]

*ஏற்றப்பாட்டு*

ஏற்றம் இறைக்கும் போது களைப்புத்தோன்றாமலிருக்கப் பாடும் பாடலில் மழையைத் தருமாறு கணபதியை வேண்டுகின்றனர். பாடல் வருமாறு:[148]

"பிள்ளையாரே வாரும் பிழைவராமல் காரும்
மழைவரக் கண்பாரும் மகாதேவன் மகனே
"விக்கினரே வாரும் சக்கரை கற்கண்டு
முக்கனியும் தேனும் முள்ளுடன் பிலாக்காய்

முடிச்சுடன் கரும்பு அதிரசம் வகைகள்
அவல்கடலை தேங்காய் அப்பனே வுனக்கு
ஒப்புடன் படைப்பேன் உன்னைத் தொழுவோர்க்கு
எண்ணும் துணை செவ்வாய் இச்சுவரன்தன் மகனே" [148]

## பழமொழி

கணபதி வழிபாடு பல நூற்றாண்டுகளாகத் தமிழ்நாட்டில் வளர்ந்ததால் கணபதி பற்றிய பல பழமொழிகளைத் தமிழர் தம் வாழ்க்கை நிகழ்ச்சிகளில் கையாள்கின்றனர். அவற்றைக் காண்போம்.

### 1. *பிள்ளையார் சுழி போட்டாயிற்று*

ஒரு செயலைத் தொடங்கிவிட்டோம் என்பதைக் குறிக்க அச்செயலுக்குப் பிள்ளையார் சுழிபோட்டாயிற்று என்பர். இதையே பிள்ளையார்குட்டுக் குட்டியாயிற்று என்றும் கூறுவர்.

### 2. *ஊருக்கிளைத்தவன் பிள்ளையார் கோயில் ஆண்டி*

இப்பழமொழிபற்றிய கதையைக் கதைப்பகுதியில் பட்டினத்தார் கதையில் காண்க. 'ஊருக்கு உழைப்பவன் பிள்ளையார் கோயில் ஆண்டி' என்ற பழமொழியே இவ்வாறு மருவியிருக்கலாம்.

### 3. *ஒண்டவந்த பிள்ளையார் ஊர்ப்பிள்ளையாரை விரட்டி விட்டாராம்*

ஊர்ப்பிள்ளையார் என்பவர் ஏற்கனவே தமிழ் நாட்டில் தொல்காப்பியர் காலம் வழிபடப்பெற்ற சேயோன் எனப்படும் முருகன். இவரது வழிபாட்டைக் குறைக்கச்செய்தவர், கி.பி. ஐந்தாம் நூற்றாண்டுக்குப்பின் தமிழ்நாட்டிற்கு வந்த பிள்ளையார் (கணபதி) ஆவார் என்பவர், [149] தெ.பொ.மீ. சங்க காலத்தெய்வங்களில் எத்தனையோ தெரியாமல் மறைந்து போயின. வேற்றூரிலிருந்து வந்த பிள்ளையார் தமிழ்ப்பிள்ளையாராக ஆகிவிட்டார் என்கிறார்.

### 4. *பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்தது*

ஒரு செயலைத் தொடங்க அது வேறொரு செயலாக மாறிவிட்டது எனப்பொருள் தருகிறது. இப்பழமொழி.

பஜனைப்பாடல்களைத் தொடங்குவோர் முதலில் கணபதி துதியில் தொடங்கி இறுதியில் அனுமார் துதியில் முடிப்பர். இதுவே இப்பழமொழிப்பொருள் என்பார் திருமுருக கிருபானந்தவாரியார். [150]

ஆவணிமாதம் வரும் வளர்பிறைநாலாம் நாள் பிள்ளையார் பூசையைத் தொடங்கி அந்த ஆண்டு இறுதியில் சீராமநவமிக்குப் பின்வரும் அனுமந்தர்

பிறப்புவரை நாம் வழிபடும் தெய்வங்களையெல்லாம் பூசைசெய்து வழிபடுகிறோம். அனுமந்த செயந்தி முடிந்ததும் நான்கு மாதங்கள் ஓய்வு இதையே பிள்ளையாரில் தொடங்கிக் குரங்கில் முடிக்க வேண்டும் என்றனர்[151] யோக நெறியில் தவறு நேரின் இவ்வாறு ஆகும் என்கிறார் மீ.ப.சோமு. [152]

### 5. *கணபதி பூசை கைமேற்பலன்*

கணபதியைப் பூசை செய்தால் உடனே பலன் கிடைக்கும் என்பதைக் குறிக்கிறது. சிலர், கணபதி பூசை கைமேற்பணம் என்பர்.

### 6. *என்ன வெல்லப்பிள்ளையாரா?*

வெல்லத்தைப் பிள்ளையாராக வைத்து அவர் வழிபாட்டிற்கு நிவேதனமாக அவ்வெல்லத்திலேயே கொஞ்சம் கிள்ளி வைத்தலைக் குறிக்கும்.

### 7. *பிள்ளையார் வேஷம் போட்டாயிற்றா?*

கருவுற்ற பெண்களின் பெருவயிற்றைப் பார்த்து இவ்வாறு வினவுவது நெல்லை, வ.உ.சி. மாவட்டங்களில் வழங்குகிறது. [153]

### 8. *பிள்ளையாருக்கு எப்போது திருமணம்?*

நெடுநாள் திருமணமாகாமல் பிரமசாரியாக இருப்பவனை நோக்கி 'பிள்ளையாருக்குத் திருமணம்' எப்போது?என்று கூறுவது வழக்கம்.

### 9. *அவன் என்ன பெரிய கொம்பனோ?*

அவன் கணபதி போல மிகவும் வலிமை வாய்ந்தவனோ? என வினவுவதும் வழக்கிலுள்ளது.

### 10. *கம்மென்றிரு எல்லாம் நடைபெறும்*

கம் என்ற விநாயக மந்திரத்தை உச்சரித்தால் அனைத்துக் காரியங்களும் தடையின்றி நடைபெறும். [154] என்பர்.

## உவமைகள்

### 1. *பிள்ளையாரைப் பிடித்த சனியன் அரசமரத்தைப் பிடித்தது போல*

ஒருவருக்கு விளையும் தொல்லை அவரைச் சார்ந்தோருக்கும் பீடிப்பதை இவ்வுவமை காட்டுகிறது.

### 2. *அரசமரத்தைச் சுற்றிவந்து அடிவயிற்றைத் தடவியது போல*

ஒரு செயலுக்கு உடனடியாகப் பயன் வேண்டுவோரின் அவசரத்தைக் குறித்து இவ்வுவமை எழுந்தது.

